ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவர முநயே நம:

மொழியைக் கடக்கும் பெரும்புகழாளரான ஸ்ரீகூரத்தாழ்வான் அருளிச்செய்த பஞ்சஸ்தவத்தில் முதலாவது ஸ்தவமான

# ஸ்ரீவைகுண்டஸ்தவம்

ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமி இயற்றிய "தத்வார்த்த சிந்தாமணி" என்னும் வியாக்கியானத்துடன்

மணவாள மாமுனிகளின் 600ஆவது ஆண்டு நிறைவு நினைவு மலர்களில் 13ஆவது மலராக பதிப்பிக்கப்பெற்றது.

**பதிப்பித்த ஆண்டு :**

*3-11-1970 (சாதாரண ஐப்பசி திருமூலம்)*

**வெளியீடு :**

கிரந்தமாலா, காஞ்சிபுரம்.

**அச்சிட்டோர் :**

Freedom Press, Madras - 21.

**மறுஅச்சு மற்றும் கிடைக்குமிடம் :**

ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ

***ஸ்ரீரங்கநாச்சியார் அச்சகம்***

214, கீழை உத்தரவீதி, ஸ்ரீரங்கம்-6.

☎: 0431 - 2434398. E-Mail: akchari@vsnl.com

*24.01.2004*

*விலை ரூபாய் 45/-*

*தபாற்செலவு தனி.*

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:



ஸ்ரீபரமபதநாதன் – பரமபதம்

யோ நித்ய மச்யுத பதாம்புஜ யுக்மருக்ம வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே ।
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைக ஸிந்தோ: ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே ॥

– வைகுண்டஸ்தவம் 1

இந்நூலினை ஸ்ரீவைஷ்ணவ சமூகத்தினர் அனைவரும் குறைந்த விலையில் பெற்றுப் பயன்பெறும் வண்ணம், தரமான அச்சுத் தாளினை கொடுத்து உதவியவர் நமக்கு பரம ஆப்தரும், ஸ்ரீவைஷ்ணவ திவ்யதேசங்களுக்கும், ஸம்ப்ரதாயத்திற்கும் பற்பல நற்பணிகளைச் செய்துவருபவருமான ஸ்ரீ.S.A.R.ப்ரஸன்ன வேங்கடாசார்யர் சதுர்வேதி ஸ்வாமி *(ஸ்ரீபாஷ்யகாரர் சாரிடபிள் டிரஸ்ட், சென்னை - 17.)*

ஸ்ரீ:

பேருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

    

## கூரத்தாழ்வான் அருளிச்செய்த பஞ்சஸ்தவத்தில் முதல் ஸ்தவமான ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தின்

# வியாக்கியான அவதாரிகை.

### [ஸ்ரீ காஞ்சி. அண்ணங்கராசாரியர்]

திருவரங்கம் பெரியகோயிலிலே ஆழ்வான் எம்பெருமானார்க்கு உசாத்துணையாயிருந்து தரிசன நிர்வாஹம் பண்ணியருளுகிற காலத்திலே, ராஜேந்த்ர சோழபுரத்தில் அரசாண்டு வந்த குலோத்துங்க சோழராஜன் துஷ்ட சைவனுகையாலே கள்ளப் பொய்ந்நூல்களை மெய்ந்நூலாகக் கொண்டு தானும் தன்புரோஹிதனுமாக நாட்டிலுள்ள வித்வான்களையெல்லாம் திரட்டி * **சிவாத் பரதரம் நாஸ்தி** * என்றெழுத்திடச் சொல்லி நிர்ப்பந்திக்க, சிலர் அவ்வரசனுடைய கொடுங்கோன்மைக்கு அஞ்சியும் சிலர் பொருளுக்கும் பூமிக்கும் ஆசைப்பட்டும் அங்ஙனே எழுத்திட்டார்கள். அப்போது அவ்வரசனிடத்தில் சிறிது வால்லப்யம் பெற்றிருந்த 'நாலூரான்' என்பானொரு வைஷ்ணவன் ராஜாவை நோக்கி 'எங்களிராமாநுசன் எழுத்திட்டாலன்றோ எழுத்திட்டதாவது; மற்ற அல்பஜ்ஞர்கள் இட்டாலென்ன? இடாவிடிலென்ன?" என்றுகூற, அதுகேட்ட அரசனும் அப்போதே இராமாநுசனை அழைத்துவரும்படி ஆள்களையனுப்ப, அவர்களும் உடையவர்மடத்தேறச் சென்றவளவிலே இந்த வ்ருத்தாந்தத்தையுணர்ந்த ஆழ்வான் 'எம்பெருமானார் ராஜஸபைக்கு எழுந்தருள்வராகில் அவர்க்கு ஏதாவது அபாயம் விளையக்கூடும்; உலகுக்கெல்லாம் உயிரான அவரைக் காட்டிக் கொடுக்கத்தகாது; நாமே அவருடைய வேஷம் பூண்டு சபைக்குச் செல்வது தகுதி' என்று அறுதியிட்டு, அப்போது எம்பெருமானார் நீராட்டத்திற் கெழுந்தருளியிருப்பதறிந்து அவருடைய காஷாயத்தையும் த்ரிதண்டத்தையும் தாம் தரித்துக்கொண்டு ராஜஸபைக்கெழுந்தருளி ஸ்ரீமந்நாராயணனே பரதத்வமென்று உபந்யஸித்தருளினது மன்றி * **சிவாத் பரதாம் நாஸ்தி** * என்றதற்குப் பரிஹாஸமாக * **த்ரோண மஸ்தி தத: பரம்** * என்றெழுத்திட்டது கண்டு கோபபரவசனான அவ்வரசனுடைய கொடுமையினால் திருக்கண்களையிழந்து திருவரங்கம் பெரிய கோயிலேற மீண்டெழுந்தருளி அங்கே வஸிக்கப் பார்த்தவளவிலே, அப்போது எம்பெருமானார் சோழனுடைய உபப்லவங்களை ஸஹிக்கமாட்டாமல் திருநாராயணபுரத்தேற எழுந்தருளியிருந்தபடியால் அவரைப் பிரிந்து கோயிலிலே வஸிக்கமாட்டாமையாலும், இராமாநுசனடியார்களைச் சோழராஜ ஸேவகர்கள் பலவகைகளில் நலிந்துகொண்டிருந்தமையாலும் "அத்திருவரங்கமாநகர் நிஷ்கண்டகமாமளவும் நாம் இங்கே வஸிக்கத் தகாது" என்று திருவுள்ளம் பற்றிய ஆழ்வான் அங்குநின்றும் புறப்பட்டருளித் திருமாலிருஞ்சோலைமலையிலே சிலகாலம் வஸித்தருள்வதாக எழுந்தருளும்போது வழியிடையிலே பகவத் குணாநுபவத்தாலும் அநுபவ ஜநித ப்ரீதிகாரித வாசிக கைங்கர்யத்தாலும் தம்முடைய நெஞ்சாறல்களை மறக்கக்கருதி எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண

விபூதிகளை விசதமாக அநுஸந்தித்து அவ்வநுஸந்தாந பரீவாஹ ரூபமான ஸ்தோத்ரங்களை யருளிச் செய்யத் தொடங்கி முதல் முன்னம் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தை அருளிச் செய்தா ராயிற்று. [இது தலைக்கட்டினவாறே அதிமாநுஷஸ்தவ மருளிச்செய்தார். அதன்பிறகு திருமாலிருஞ் சோலைமலை சேர்ந்து ஸுந்தரபாஹுஸ்தவ மருளிச்செய்தார். அதன்பிறகு பலவாண்டுகள் கடந்தபின்பு சோழன் புழுத்துமாண்டு எம்பெருமானார் திருநாராயணபுரத்தில் நின்றும் கோயிலேற எழுந்தருளினபின் அவருடைய நியமந மடியாக வரதராஜஸ்தவமருளிச் செய்யலாயிற்று. இந்த நான்கு ஸ்தவங்களுக்கும் பின்பு ஸ்ரீ ஸ்தவமவதரித்தது. ஆக, பஞ்சாத்ந மென்னும்படி ப்ரசஸ்தி பெற்றவிவை பஞ்சஸ்தவ மென்று வ்யபதேசிக்கப்படும்.]

இவற்றுள் ஸுந்தரபாஹுஸ்தவமே முதல் ஸ்தவமென்பாரும் ஸ்ரீ ஸ்தவமே முதல் ஸ்தவமென்பாருமாய் இப்படி சிலர் விப்ரதிபத்தி பண்ணிப்போருவர்களாகிலும் இங்கே நாம் காட்டின பௌர்வாபர்யக்ரமமே ஸம்ப்ரதாய ஸித்தமும் முந்தின வ்யாக்யாதாக்கள் ஆதரித்ததுமாகும். ஸ்வாசார்ய பரமாசார்ய ஸ்துதிபூர்வகமாக க்ரந்தமியற்றத் தொடங்குவது ஸம்ப்ரதாயமாகையாலும், ஆளவந்தார் பட்டர் முதலானோர் அப்படியே ஸ்தோத்ரங்களருளிச் செய்திருக்கையாலும், இந்த ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்திலேயே ஆசார்ய ஸ்துதிகளும் மற்றும் க்ரந்தாரம்ப லிங்கங்களும் அமைந்திருப்பதனாலும் இதுவே முதல் ஸ்தவமென்று அறுதியிடுகை மிகவும் உபபந்நம். ஸுந்தரபாஹுஸ்தவத்திற்குப் பிறகுதான் வரதராஜஸ்தவம் அவதரித்த தென்னுமிடம் குருபரம்பரா ப்ரபாவாதிஸித்தம். இன்னமும் இதில் வைசத்ய முண்டாம்படி வல்லார் வாய்க் கேட்டுணர்க.

இந்த ஸ்தவங்களில் சொல்நோக்கும் பொருள்நோக்கும் தொடைநோக்கும் மற்று எந்நோக்கும் சாலவும் சிறப்பாக அமைந்துள்ளனவென்பதும், உபயவேதாந்த ரஹஸ்யார்த்தங்கள் இவற்றில் பொதிந்து கிடக்கின்றன வென்பதும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களிற்போலே உபதேசங்கொண்டே அறியவேண்டிய பல விசேஷார்த்தங்கள் இவற்றிலும் நிரம்பியிருக்கின்றனவென்பதும், * செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே * என்று திவ்யப்ரபந்தங்களுக்குக் கூறப்பட்டுள்ள அதிசயம் இந்த ஸ்தவங்களுக்கும் நன்கு பொருந்தியதே யென்பதும் பெரியோர்களது ஸித்தாந்தம்.

உபநிஷத்பாஷ்யம் ஸ்ரீபாஷ்யம் முதலிய வேதாந்த க்ரந்தங்களையும், ஸ்ரீராமாயணம் ஸ்ரீபாகவதம் ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலிய இதிஹாஸ புராணங்களையும் ஆழ்வாரருளிச்செயல்களையும் அவற்றின் வியாக்யானங்களையும் தனித்தனியே ஆழ்ந்து அநுபவிப்பதனால் விளையக்கூடிய ஆனந்தமும் ஆச்சர்யமும் பகவத் பக்தியும் தர்மருசியும் மநோநைர்மல்யமும் தேஹ பரிசுத்தியும் ஐஹிகாமுஷ்மிக பல ஸித்தியுமெல்லாம் இப்பஞ்சஸ்தவத்தின் அநுபவமாத்திரத்தினால் மிகவும் அழகாக விளையுமென்று அநுபவரஸிகர்கள் பணிக்கும்படி. “ சந்தங்களாயிரமு மறியக்கற்று வல்லாரானால் வைஷ்ணவத்வஸித்தி ” என்று ஆசார்ய ஹ்ருதயத்திலருளிச்செய்த நியாயம் இப்பஞ்சஸ்தவத்துக்குமொக்கும்; அதாவது, இந்த பஞ்சஸ்தவம் அர்த்தத்துடனே முகஸ்தமாயிருக்கப் பெற்றவர்களுக்கே ஸ்ரீவைஷ்ணவத்வ பூர்த்தியுண்டென்கை.

திவ்யப்ரபந்தங்களிற் பாசுரங்களையே பெரும்பாலும் தழுவி இந்த ஸ்தவங்கள் அருளிச் செய்யப்பட்டுள்ளன வாதலால் அவ்வருளிச்செயல்களுக்கும் இந்த ஸ்ரீஸூக்திகளுக்குமுள்ள பொருளொற்றுமை கருத்தொற்றுமை முதலிய விசேஷங்களை விவரித்துரைக்க வேண்டியே அடியேன் இந்த ஸ்தவங்களுக்கு மணிப்ரவாள வியாக்யான மியற்றப் புகுந்தேன்.

இனி, ஸ்ரீ வைகுண்ட ஸ்தவத்தின் ப்ரமேயம் கூறுவோம். *வானிள வரசான வைகுந்தக்குட்டன் ஒண்டொடியாள் திருமகளும் தானுமாய் கலமந்த மில்லதோர் நாட்டிலே நித்யமுக்தர் ஸேவிக்க ஒலக்கமிருக்குமிருப்பை இந்த ஸ்தவத்தில் அநுஸந்திக்கையாலே இந்த ஸ்ரீ வைகுண்ட ஸ்தவமென்று திருநாம மாயிற்று. திருநாட்டின் சிறப்புகளைப் பரக்கப்பேசி அந்த அழகோலக்கத்திலே ஸேவிக்கத் தாம் பெருவிடாய்ப்பட்டிருக்

கும் படியைப் பேசுவதிலே இந்த ஸ்தவம் முழுநோக்குடையது. எம்பெருமான் சாஸ்த்ரங்களை யருள் செய்தானென்பது, அந்த சாஸ்த்ரங்களில் தலையானது வேதமே யென்பது அந்த வேதத்தின் அர்த்தங்களை வைதிகர்கள் ந்யாய ஸ்ம்ருதிஇதிஹாஸபுராணாதிகளாலே உபப்ரும்ஹிதமாக்கி உணருகிறார்களென்பது, இதரர்கள் பாஹ்யர்களாயும் குத்ருஷ்டிகளாயும் கழித்துப்போகிறாரென்பது, சாஸ்த்ரங்களின் அர்த்தமறிவதற்கு பகவத் பக்தியே ப்ரதான ஸாதநமென்பது, ஸ்ரீமந்நாராயணனே ஸகல வேத வேத்யனாகையாலே அவன்றனக்கே பாரம்யம் பொருந்துமென்பது, காரணத்வநியந்த்ருத்வாதிகளெல்லாம் அந்த ஸ்ரீமந்நாராயணனுக்கே தகுமென்பது, அப்படிப்பட்டவன் உபயவிபூதிநாதன் என்பதாய் ஆக இவ்வளவும் அவதாரிகாரூபேண அருளிச்செய்துகொடுபோந்து *யத்வைஷ்ணவம் ஹி பரமம் பதம் ஆமநந்தி* என்கிற நாற்பத்தோராம் ச்லோகந் தொடங்கிப் பரமபதத்தை வருணிக்கப் புகுகிறார்.

இந்த ஸ்தவம் முழுவதும் வஸந்ததிலக வ்ருத்தம்
அவதாரிகை முற்றிற்று.

---

ஸ்ரீரஸ்து.
எம்பெருமானார் திருவடிகளே சரணம்.
ஆழ்வான் திருவடிகளே சரணம்.

கூரத்தாழ்வான் திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீ வைகுண்டஸ்தவம்.

[ஸ்ரீகாஞ்சீ, ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய
**தத்வார்த்த சிந்தாமணி யென்னும் வியாக்யானத்தோடு கூடியது.**]

## (ஆழ்வான் தனியன்.)

* ஸ்ரீவத்ஸ சிஹ்நமிச்ரேப்யோ நம உக்திமதீமஹே,
யதுக்தயஸ் த்ரயீகண்டே யாந்தி மங்களஸூத்ரதாம்.

---

यो नित्यमच्युत पदांबुजयुग्मरुक्मव्यामोहतस्तदितराणि तृणाय मेने ।
अस्मद्गुरोर्भगवतोस्य दयैकसिन्धोः रामानुजस्य चरणौ शरणं प्रपद्ये ॥

**யோ நித்ய மச்யுதபதாம்புஜயுக்ம ருக்ம**
**வ்யமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே,**
**அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைக ஸிந்தோ:**
**ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.** 1

ய: நித்யம் அச்யுத பதாம்புஜ யுக்ம ருக்ம வ்யாமோஹத: தத் இதராணி த்ருணாயமேநே, அஸ்ய தயைகஸிந்தோ: பகவத: அஸ்மத் குரோ: ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

யாவரொரு எம்பெருமானார், எப்போதும் எம்பெருமானுடைய திருவடித் தாமரை யிணையாகிற ஸுவர்ணத்திலுள்ள வ்யாமோஹத்தினால் அந்த பகவத் பாதாரவிந்தங்கள் தவிர மற்ற விஷயங்களை த்ருணமாக எண்ணினாரோ [திருவுள்ளத்தால் நிரஸித்தாரோ], இப்படிப்பட்டவரும் க்ருபைக்கு முக்கியமான கடலாகவுள்ளவரும் கல்யாணகுணசாலியும், அஸ்மதாசார்யருமான எம்பெருமானாருடைய திருவடிகளைச் சரணம் புகுகின்றேன்.

(விசேஷ வுரை.) மேல் ஸூக்தாபாஹூ ஸ்தவத்தின் தொடக்கத்தில் * ஸ்ரீராமாவரஜமுநீந்த்ரலப்த போத: * என்று இவர் தாம் அருளிச் செய்கிறபடியே தம்மை ஸத்தை பெறுவித்தவர் எம்பெருமானாராகையாலே அவரை அடியிலே சரணம் புகுகிறார். * மாற்பால் மனஞ் சுழிப்ப மங்கையர் தோள் கை விட்டு * என்றிவை முதலானவற்றில் சொல்லப்பட்ட பகவத் விஷய வ்யாமோஹமடியான இதர விஷய விரக்தி ஸம்பத்தானது ஸ்வாமி பக்கலிலே குறையற்றிருக்கும்படியை ஒரு சமத்காரமாகப் பேசுகிறார் இதில். லோகத்திலே ஸ்வர்ணத்தில் வியாமோஹம் கொள்ளாதாரில்லை. அதில் வியாமோஹ முடையார்க்கு அதொழிந்த மற்ற வஸ்துக்கள் த்ருணமாகவே தோன்றியிருக்கு மென்னுமிடமும் ஸம்ப்ரதிபந்நம். இந்த லௌகிகர்படியானது நம்மிராமானுசனுக்கும் அவர்ஜநீயமாயிற்றென்கிறது இதனால் * वेधा द्वेधा भ्रमं चक्रे कान्तासु कनकेषु च—வேதா த்வேதா ப்ரமம் சக்ரே காந்தாஸு கநகேஷு ச* என்கிறபடியே ஸ்வர்ணத்தில் ப்ரமம் ஸர்வர்க்கும் அபரிஹார்யமானாப் போலே எம்பெருமானார்க்கும் அபரிஹார்யமாயிற்றென்பது ஒரு ரஸோக்தி.

இவருடைய வியாமோஹத்துக்கு இலக்கான ஸ்வர்ணந்தான் ஏதென்னில், [அச்யுதபதாம்புஜ யுக்மருக்ம வ்யாமோஹத:] கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான திருப்பதிகளிலே நித்யஸந்நிதி பண்ணி ஆச்ரிதரை ஒரு காலும் நழுவவிடாமே நின்று நோக்கியருள் பவனான எம்பெருமானுடைய திருவடித்தாமரை யிணையன்றி மற்றொன்றிலே இவர்க்கு உத்தேச்யதா புத்தி யில்லைகிடீர். பரம புருஷனுடைய பொற்பாதங்களிலே போர அபிநிவேசம் பூண்டவிவர் ததிதர பதார்த்தங்களை த்ருணவத்கரித்திருப்பாரயிற்று. இவருடைய பொன்னடிகளைப் பேணினவர்கள் * த்ருணீக்ருத விரிஞ்சாதி நிரங்குச விபூதய:; ராமாநுஜ பதாம்போஜ ஸமாச்ரயண சாலிந:* என்கிறபடியே ஸகலைச்வர்ய போகங்களையும் த்ருணவத்கரித் திருக்குமா போலே இவர் தாமும். அச்யுதனுடைய பதாம்புஜ யுக்மருக்மத்திலே ஆசைவைத்துப் புறம்புள்ளவற்றை யெல்லாம் கண்ணெடுத்துப் பாராதே அநாதரித்திருப்பாரயிற்று. திருக்கச்சி நம்பிகள் பேரருளாளப் பெருமாளை நோக்கிப் பணித்த அஷ்டகத்திலே *நமஸ்தே ஹஸ்தி சைலேச!..ப்ரணதார்த்திஹராச்யுத!* என்று தேவப்பெருமாளை அச்யுதனென்னுந் திருநாமத்தாலே ஸம்போதிக்கையாலே இந்த ச்லோகத்திலுள்ள அச்யுத பதமும் அந்தப் பேரருளாளனையே கணிசித்ததாகக் கொள்வது பாங்கு. * பச்சைமா மலைபோல் மேனிப் பாசுரத்திலே அச்சுதா வென்று அழகிய மணவாளனை யருளிச் செய்திருக்கையாலே இங்கு அந்த எம்பெருமானை விவக்ஷிக்கிறதென்றலும் பொருந்தும். *தென்னத்தியூரர் கழலிணைக் கீழ்ப் பூண்டவன்பாளனிராமானுசன் * என்றும், * பொன்னரங்க மென்னில் மயலே பெருகு மிராமானுசன்* என்றும் அமுதனார் அருளிச் செய்த சந்தைகளுக்கு இணங்க, ஏகோக்தியிலே இரண்டு அர்த்தமும் கொள்ளக் குறையில்லை.

[அஸ்மத் குரோ:] அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்குமவர்க்கேயிறே குரு சப்த வாச்யத்வமுள்ளது, * கடலளவாய திசையெட்டினுள்ளும் கலியிருளே மிடைதரு காலத்திராமானுசன் மிக்க நான்மறையின் சுடரொளியால் அவ்விருளைத் துரந்திலனேல் உயிரையுடையவன் நாரணனென்று அறிவாரில்லை யுற்றுணர்ந்தே * என்று அமுதனார் பணித்தபடியே கலியிருளையொழிப்பதற்கென்றே திருவவதரித்த எம்பெருமானார் பக்கலிலேயிறே குருத்வ பூர்த்தியுள்ளது. * தஸ்மிந் ராமாநுஜார்யே குருரிதி ச பதம் பாதி நாந்யத்ர * என்னக்கடவதிறே. * புண்யாம்போஜவிகாஸாய பாபத்வாந்த க்ஷயாய ச, ஸ்ரீமாநாவிரபூத் பூமௌ ராமாநுஜ திவாகர: * என்று அபிநவ ஸூர்யாக ப்ரஸித்தரான எம்பெருமானாருக்குப் போக்கவொண்ணாத இருளில்லைகாணும். ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரையும் கூட்டிக்கொண்டு அஸ்மத் குரோ: என்கிறார். அஸ்மாகம் குரோ: என்றபடி.

[பகவத:] ஜ்ஞாநம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ் என்கிற ஆறு குணங்களும் பொருந்திய விடத்திலே பகவத் சப்த வாச்யத்வம் கிடக்கும். ப்ரஹ்மசப்தம்போலே பகவத் சப்தமும் ஸர்வேச்வரனிடத்திலேயே முக்ய வ்ருத்த மென்று ஸ்ரீபாஷ்யத்திலே நிஷ்கர்ஷித்

திருக்க, அந்த ஸ்ரீபாஷ்யகாரர் திறத்திலே பகவச்சப்த ப்ரயோகம் எங்ஙனே யாயிற்றென்னில், *பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து* என்றும், *ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா* என்றும் சொல்லுகிறபடியே ஸாக்ஷாத் ஸர்வேச்வராவதார மென்றே கொள்ளப்பட்ட ஸ்வாமி விஷயத்திலே பகவச்சப்தம் பொருந்தக் குறையில்லை யென்னலாம். * மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து எங்கள் மாதவனே கண்ணுற நிற்கிலும் காண கில்லா வுலகோர்களெல்லாம் அண்ணலிராமாநுசன் வந்து தோன்றியவப்பொழுதே நண்ணருஞானம் தலைக்கொண்டு நாரணற்காயினரே * என்கிறபடியே ஸர்வேச்வரனிற் காட்டிலும் மிக்க வீறு பாடுடையரான ஸ்வாமிக்கே தான். பகவச்சப்தம் நன்கு பொருந்துமென்றும் கொள்ளில் மிகையாகாது. பகவான் தனக்கும் பகவத்த்வத்தை வித்தமாக்கித் தந்தார் இவரேயிறே.

[அஸ்ய] * * यत्तदोर्नित्यसंबन्ध:— யத்ததோர் நித்யஸம்பந்த: * என்கிறபடியே யச்சப்த ப்ரதிநிர்தேசமாக தச்சப்தம் ப்ரயோகிக்க ப்ராப்தமாயிருக்கச் செய்தேயும் அதைவிட்டு (அஸ்ய) என்று இதம் சப்தத்தாலே ப்ரதிநிர்தேசம் பண்ணுவ தென்னென்னில்; * इदम: प्रत्यक्षगतम्— இதம: ப்ரத்யக்ஷகதம்; ....तदिति परोक्षे विजानीयात्— ததிதி பரோக்ஷே விஜாநீயாத்* என்பது சாஸ்த்ரஜ்ஞஸமயமாகையாலே பரோக்ஷநிர்தேசமான தச்சப்தத்திற் காட்டிலும் ப்ரத்யக்ஷ விஷயமான இதம்சப்த ப்ரயோகத்திலே ஸ்வாரஸ்யாதிசய முண்டிறே. *காஷாய சோபி கமநீய சிகாநிவேசம் தண்டத்ரயோஜ்ஜ்வலகரம் விமலோபவீதம், உத்யத்திநேச நிபமுல்லஸ தூர்த்வபுண்ட்ரம் ரூபம் தவாஸ்து யதிராஜ! த்ருசோர் மமாக்ரே * என்று அந்தத் திருக்கோலமே ஆழ்வானுக்கு இடைவிடாமல் ஸாக்ஷாத்கார கோசரமா யிருக்கையாலே தச்சப்தம் தள்ளுண்டு இதம்சப்தமே ஏற்குமாய்த்து.

[தயைகஸிந்தோ:] அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்ய ரென்றும் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்ய ரென்றும் ஆசாரியர்களிலே இருவகையுண்டு. திருக்கோட்டியூர் நம்பி போல்வாரைப் போலே பலகால் துவளவைத்து வருந்தி யுபதேசிக்குமாசார்யர்கள் அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்ய ரெனப்படுவர்; முலைக் கடுப்பாலே தரையிலே பீச்சுவாரைப்போலே * பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொண்டு தம்பேறாக சிஷ்யர்களை உஜ்ஜீவிப்பிக்குமாசார்யர் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்ய ரெனப்படுவர். * ஓராண்வழியா யுபதேசித்தார் முன்னோர், ஏரா ரெதிராச ரின்னருளால், பாருலகிலாசை யுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று பேசி வரம்பறுத்தார்பின்* என்று மணவாள மாமுனிகள் அருளிச் செய்தபடியே ஓராண்வழியாகப் பூருவர்கள் உபதேசித்துப் போந்த நியமத்தைக் குலைத்துப் பலரையும் உபதேசிக்கும்படி பண்ணியும், பலகால் திருக்கோட்டியூர் நம்பி பக்கல் நடந்து துவண்டு கேட்ட பரமார்த்தத்தை ஓலக்கமாகவைத்து உபதேசித்தும் ருசிவிச்வாஸ ஹீநரையும் நிர்ப்பந்தித்து சரமோபாயஸ்தராக்கியும் இப்படி அதிகாரம் பாராமல் அவர்களின் துர்க்கதியை மாத்ரமே பார்த்து உபதேசித்தருளுமவரிறே எம்பெருமானார்தாம். இப்படிப்பட்ட ஸ்ரீ ராமாநுஜனுடைய.

[சரணௌ சரணம் ப்ரபத்யே.] ஸ்தநந்தய ப்ரஜை முலையிலே வாய் வைக்குமாபோலே திருவடிகளில் தலை சாய்க்கையிறே நமக்கு ப்ராப்தம். (1)

त्रैविद्यवृद्धजनमूर्धविभूषणं यत् संपच्च सात्त्विकजनस्य यदेव नित्यम् ।
यद्वा शरण्यम् अशरण्यजनस्य पुण्यं तत् संश्रयेम वकुलाभरणांघ्रियुग्मम् ॥२॥

த்ரைவித்யவ்ருத்தஜநமூர்த்தவிபூஷணம் யத்
ஸம்பச்ச ஸாத்விகஜநஸ்ய யதேவ நித்யம்,
யத்வா சரண்யம் அசரண்யஜநஸ்ய புண்யம்
தத் ஸம்ச்ரயேம வகுளாபரணாங்க்ரியுக்மம். 2

**யத் த்ரைவித்ய வ்ருத்தஜந மூர்த்த விபூஷணம், யதேவ நித்யம் ஸாத்விக ஜநஸ்ய ஸம்பத் ச, யத் வா அசரண்ய ஜநஸ்ய சரண்யம், தத் புண்யம் வகுளாபரண அங்க்ரியுக்மம் ஸம்ச்ரயேம.**

யாதொரு நம்மாழ்வார் திருவடி யிணையானது, பரம வைதிகர்களுடைய சிரஸ்ஸுக்கு அலங்காரமா யிருக்கின்றதோ, யாதொரு திருவடியிணையே ஸர்வகாலமும் ஸாத்விகர்களுக்கு ஸகலைச்வர்யமுமாக இருக்கின்றதோ, யாதொரு திருவடியிணையே புகலொன்றில்லாதவர்களுக்குத் தஞ்சமா யிருக்கின்றதோ, அப்படிப்பட்ட பரமபாவநமான நம்மாழ்வாருடைய திருவடியிணையை ஆச்ரயிக்கக் கடவோம்,

*** கீழ்ச்லோகத்தில் ஸ்வாசார்யரான எம்பெருமானாரைத் தொழுதார்; அந்த எம்பெருமானார் தாம் * மாறனடி பணிந்துய்ந்த விராமாநுசனுகையாலே நம்மாழ்வாரை உபச்லோகித்தாலல்லது அவ்விராமாநுசனுடைய திருவுள்ளம் உகவாதாகையாலும், ஆளவந்தார் தாமும் * மாதா பிதா யுவதய:* இத்யாதியால் ஆழ்வார் திருவடியை வணங்கியே எம்பெருமானைத் துதிக்க இழிந்தாராகையாலும், ஆழ்வாரை வணங்காமல் எம்பெருமானை அடிபணிந்தால் அங்கே முகம் பெறுவது அருமைப்படு மாகையாலும் இந்தச்லோகத்தாலும் மேல்ச்லோகத்தாலும் நம்மாழ்வாரைத் தொழுதிறைஞ்சுகிறார்.

**[தத் வகுளாபரணாங்க்ரியுக்மம் ஸம்ச்ரயேம]** * மகிழ்மாலை மார்பினன் * என்று தாமே பேசிக்கொள்ளலாம்படி வகுளமாலையை நிரூபகமாகவுடையரான நம்மாழ்வாருடைய அப்படிப்பட்ட திருவடித் தாமரை யிணையை ஆச்ரயிக்கக்கடவோம். எப்படிப்பட்டதெனில், சில விசேஷணங்களையிட்டு அத்திருவடிகளின் அதிசயத்தை விளக்குகிறார். **[யத் த்ரைவித்ய வ்ருத்த ஜநமூர்த்த விபூஷணம்]** த்ரைவித்ய வ்ருத்தர்களாகிறார் ஸ்ரீமதுரகவிகள் போல்வார். அவர்களுடைய சிரஸ்ஸுக்கு பூஷணமாக இருக்குமாய்த்து ஆழ்வார் திருவடிகள் ; *மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே* என்றும் *குருகூர் நம்பி! முயல்கின்றேனுன்றன் மொய் கழற்கன்பையே * என்றும் ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யமுடையார் அத்திருவடிகளையே யிறே தங்கள் தலைக்கு அணியாகக் கொள்வது ; * கோலமாமென் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே * என்றும் * அரசமர்ந்தானடிசூடுமரசையல்லால் அரசாகவெண்ணேன் மற்றரசுதானே * என்றும் எம்பெருமானுடைய பாதாரவிந்தங்களை சிரோபூஷணமாகக் கொள்ள நினைப்பாரிற் காட்டிலும் அந்தபகவத்பாதாரவிந்தஸ்வரூபியான ஆழ்வாருடைய திருவடிகளை சிரோபூஷணமாகக் கொள்ளுமவர்களிறே சீரியராவர். **த்ரைவித்யவ்ருத்த** சப்தம் முக்கியமாக நம்பிராமாநுசனையே கருத்தில் கொண்டதாகும். * மாறனடி பணிந்துய்ந்த விராமாநுசனிறே. த்ரைவித்யபதம் * तदधीते तद्वेद * என்கிற பாணிநிஸூத்ரப்படி அண்ப்ரத்யயமேறி நிஷ்பந்நமானது. * तिसृणां विद्यानां समाहारः त्रिविद्यम् ; त्रिविद्यमधीते वेद वा—त्रैविद्यः * ருக்யஜுஸ்ஸாமங்களாகிற வேதவித்யாத்ரயத்திலும் வல்லவரென்றபடி. * சொல்லார் தமிழொருமூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லாவற நெறி யாவும் தெரிந்த விராமாநுசனைப் போன்ற மஹநீயர்களைக் கொள்க.

**[ஸாத்விகஜநஸ்ய நித்யம் யதேவ ஸம்பத்]** * தனத்தாலுமேதுங் குறைவிலேன் எந்தை சடகோபன் பாதங்கள் யாமுடைய பற்று * என்றிறே ஸாத்விகர்கள் அத்யவஸித்திருப்பது. லௌகிகர்கள் ஸம்பத்தாக நினைத்திருக்கும் வஸ்துவானது வஸ்துஸ்திதியில் விபத்தாயிருக்குமாயிற்று. உபய விபூதியும் ஆழ்வார்திருவடிகளில் ப்ராவண்யமுடையார் இட்டவழக்காயிருக்கு மென்கை, * பொய்யில் பாடலாயிரத்துள் இவையும் பத்தும் வல்லார்கள், வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே * இத்யாதி. * **மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ் ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்** * என்றருளிச் செய்த ஆளவந்தார் போல்வாரையாயிற்று இங்கு **ஸாத்விக ஜந** மென்கிறது. **[நித்யம்]** இந்தவிபூதியில்

உள்ள போதோடு அந்த விபூதியில் செல்லும் போதோடு வாசியற ஸர்வ காலத்திலுமென்றபடி. * அத்ர பரத்ராபி நித்யம் யதீயசரணௌ சரணம் மதீயம் * என்னுமாபோலே.

[யத்வா சரண்யம் அசரண்யஜநஸ்ய] அநாதர்களுக்குப் புகலிடமாயிருக்கும் ஆழ்வார் திருவடிகள். எம்பெருமான் தன்னாலும் திருத்தவொண்ணாதென்று கைவிடப்பட்டவர்களாயிற்று அசரண்யர்கள்; அப்படிப் பட்டவர்களையும் வலியப் பிடித்திழுத்து * சொன்னால் விரோதமிது ஆகிலுஞ் சொல்லுவன்கேண்மினோ * இத்யாதிகளைச் சொல்லியுபதேசித்துத் திருத்திப் பணிகொண்டவர் ஆழ்வாரேயிறே.

[புண்யம்] புநாதீதி புண்யம். பரமபாவநமென்றபடி. * பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமாய் நின்ற நிலையைப் போக்கி ஸகலாத்மாக்களையும் பரிசுத்தமாக்கவல்லதென்கை. புண்யம் ஸுந்தரமென்று பர்யாயமுமாகையாலே அழகிய திருவடிகளென்பாருமுளர். பாவநத்வமே பாங்கு. ஆக இப்படிப்பட்ட ஆழ்வார் திருவடிகளை வணங்கினபடி சொல்லிற்றாயிற்று. ... .... ... (2)

भक्तिप्रभावभवदद्भुतभावबन्ध संधुक्षितप्रणयसाररसौघपूर्णः ।

वेदार्थरत्ननिधिरच्युतदिव्यधाम जीयात्पराङ्कुशपयोधिरसीमभूमा ॥२॥

பக்திப்ரபாவபவதத்புத பாவபந்த
ஸந்துக்ஷித ப்ரணயஸாரரஸௌக பூர்ண:,
வேதார்த்தரத்நநிதிரச்யுததிவ்யதாம
ஜீயாத் பராங்குசபயோதிரஸீமபூமா.

பக்திப்ரபாவ பவத் அத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணயஸார ரஸ ஓக பூர்ண: வேதார்த்த ரத்ந நிதி: அச்யுத திவ்யதாம அஸீமபூமா பராங்குச பயோதி: ஜீயாத்

பக்தியின் கனத்தினாலுண்டாகிய ஆச்சரியமான அபிப்ராயவிசேஷங்களினால், வளர்க்கப்பட்ட ஸாரபூதமான ப்ரணயமாகிற தீர்த்தத்தினுடைய ப்ரவாஹத்தாலே, (2) நவரஸ ஸமூஹத்தாலே நிறைந்ததாயும், வேதப் பொருளாகிற நவரத்னங்களுக்கு நிதியாயும், எம்பெருமானுக்கு திவ்யமான ஸ்தானமாயும், அளவில்லாத பெருமையையுடையதாயுமிருக்கிற நம்மாழ்வாராகிற கடல் நெடுநாள் வாழவேணும்.

* * * இந்த ச்லோகத்தாலே ஆழ்வார்க்கு மங்களாசாஸநம் பண்ணுகிறார். ஆழ்வாரை ஒரு கடலாக ரூபணம்பண்ணிப் பேசுகிறாரிதில். பயோநிதியாக ரூபணம் பண்ணுகைக்குப் பொருத்தமான ஔசித்யங்களை நான்கு விசேஷணங்களினால் நிரூபிக்கிறார். பயோநிதிக்கு இருக்கக்கடவ தன்மைகளெல்லாம் ஆழ்வார்பக்கலில் குறையற்றிருக்கிறபடியை ஒவ்வொரு விசேஷணமும் மூதலிக்கின்றது. [பக்திப்ரபாவபவதத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணய ஸார ரஸௌகபூர்ண:] கடலானது ரஸௌகசப்தவாச்யமான ஜலப்ரவாஹத்தாலே பரிபூர்ணமாயிருக்கும். ஆழ்வாரோ வென்னில், ச்ருங்கார வீர கருணாத்புதஹாஸ்ய பயாநக ரௌத்ர பீபத்ஸ பக்திரஸங்களாலே பரிபூர்ணராயிராநின்றார். இப்படிப்பட்ட ரஸவிசேஷங்கள் ஆழ்வார் பக்கலிலே விளைந்தமைக்கு நிதாநமேதென்னில், விலக்ஷணமான பக்தி விசேஷத்தாலே ஆச்சரியமான பாவபந்தங்களுண்டாகி அந்த பாவபந்தங்கள் பலதலைத்து நாநாரஸ பரிபாகங்களாயின வென்கிறார்.

[பக்திப்ரபாவ] ஆழ்வாருடைய பக்திக்கு ஒப்புச்சொல்லலாவதில்லை; * காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனி யென்று முதலில் கடல்போலேயாய், * கொண்ட வென் காதலுரைக்கில் தோழீ! மண்திணி ஞாலமு மேழ்கடலும் நீள்விசும்புங் கழியப் பெரிதால் * என்றாய், அநந்தரம் * சூழ்ந்ததனிற் பெரிய வென்னவா * என்று தத்வத்ரயத்தையும் விளாக்குலை கொள்ளவல்லதாய் ஆகவிப்படி மேன்மேலும் பெருகிச் செல்லுமதான பக்தியின்

ப்ரபாவத்தினாலே. [பவத் அத்புத பாவபந்த] உண்டான அத்புதமான பாவபந்தங்களினாலே; அதாவது — அந்த பக்திதானே ச்ருங்கார வ்ருத்த்யா பரிணமித்து தலைமகள் பாசுரமாகவும் தாய்பாசுரமாகவும் தோழிபாசுரமாகவும் பேசும்படிக்கீடான பலவகைப்பட்ட ஆச்சர்யபாவ பந்தங்களை யுண்டாக்கி நிற்கு மென்கை. [ஸந்துக்ஷித ப்ரணயஸாரரஸௌககபூர்ண:] அப்படிப் பட்ட பாவபந்தங்கள் ப்ரணயரஸத்தை வளரச்செய்யுமாயிற்று.

* உயர்வற வுயர் நலம் * வீடுமின் முற்றவும் * பத்துடை யடியவர்க்கெளியவன் * பிறவித்துயரற * பொருமாநீள்படை * என்னுமிவைபோல்வனவான திருவாய்மொழிகளில் ஸாதாரண பக்திரஸம் விளங்கு மத்தனையல்லது ப்ரணயரஸம் விளங்கமாட்டாதிறே. * அஞ்சிறையமட நாராய் * மின்னிடை மடவார்கள் * வேய்மரு தோளிணை * முதலான திருவாய்மொழிகளிலேயாயிற்று அத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணயஸாரம் விளங்குவது. அப்படிப்பட்ட ப்ரணயம் மீதூர்ந்து வெளிவரும் ஸ்ரீ ஸூக்திகளில் நவரஸமும் பொலிய நிற்கு மிறே. நவரஸங்களுள், ச்ருங்காரம் வீரம் கருணம் அத்புதம் பயாநகம் சாந்தி (=பக்தி) ஆகிற இந்த ரஸங்கள் ஒரோ திருவாய்மொழிகளில் ப்ரதானமாகப் பொதிந்திருக்கும்; மற்ற ஹாஸ்ய பீபத்ஸ ரௌத்ரரஸங்கள் ஒரோவிடங்களிலே மறைய நின்று சிறிது சிறிது தலைகாட்டி நிற்கும். * வீடுமின்முற்றவும் * சார்வேதவநெறிக்கு * கண்ணன் கழலிணை * முதலான திருவாய்மொழிகளிலே பக்திரஸம் தலையெடுத்திருக்கும். * மின்னிடை மடவார்கள் * * நங்கள் வரிவளை * வேய் மரு தோளிணை * முதலான திருவாய் மொழிகளிலே ச்ருங்கார ரஸம் தலையெடுத்திருக்கும். * மாயாவாமனனே * புகழு நல்லொருவன் * நல்குரவுஞ் செல்வும் * முதலான திருவாய் மொழிகளிலே அத்புதரஸம். * உண்ணிலாவிய வைவரால் * இத்தியாதிகளிலே பயாநக ரஸம். * ஊரெல்லாந்துஞ்சி * வாயுந்திரையுகளும் * ஆடியாடி யகங்கரைந்து * இத்யாதிகளிலே கருணாரஸம். * குரவையாய்ச்சியரோடு கோத்ததும் * வீற்றிருந்தேழுலகும் * இத்தியாதிகளிலே வீரரஸம். ஆக இங்ஙனே நவரஸங்கள் பொதிந்த ஸ்ரீஸூக்திராசிகளை யருளிச்செய்யும் முகத்தாலே ரஸௌக பரிபூர்ணராயிருப்ப ராய்த்து ஆழ்வார்.

[வேதார்த்த ரத்ந நிதி:] கடல் ரத்நாகரமாகையாலே ரத்நநிதியாயிருக்கும். பராங்குச பயோநிதியும் அப்படியேயிருக்கிறபடி பாரீர். * ஓதம்போல் கிளர் வேத மென்றும் * ச்ருதி ஸாகர மென்றும் சொல்லுகிறபடியே கடல் போன்றுள்ள வேதசாஸ்த்ரங்களிலே அல்ப ஸாரமாயும் ஸாரமாயும் ஸாரதரமாயு மிருக்கின்ற அர்த்தங்கள் போக ஸாரதமங்களாகவுள்ள அர்த்தங்களே ரத்நமாகும். * த்ரைகுண்ய விஷயா வேதா: * என்கிறபடியே எல்லாம் கலந்த கட்டியாயிருக்கும் வேதங்கள், ஸத்வரஜஸ்தமோ குணங்களாகிற மூன்று குணங்களிலும் ஊன்றினவர்களுக்கு அபேக்ஷிதங்களான விஷயங்களை யெல்லாம் வெளியிடு மவையிறே வேதங்கள், * மாற்றங்களாய்ந்து கொண்டு மதுசூதபிரானடிமேல் குருகூர்ச் சடகோபன் சொன்ன சொற்களிலே ஸாரதமமான பொருள் தவிர வேறொன்றும் அவகாசம் பெறாமை யாலே எல்லாம் ரத்நங்களாயிருக்கும். அப்படிப்பட்ட ரத்நங்களுக்கு நிதியாயிருப்ப ராய்த்து ஆழ்வார்.

[அச்யுத திவ்யதாம] * மாலும் கருங்கடலே! என்னோற்றாய்? வையகமுண்டு ஆலிலைத் துயின்ற வாழியான்—கோலக் கருமேனிச் செங்கண்மால் கண் படையுள், என்றுந் திருமேனி நீ தீண்டப் பெற்று * (முதல் திருவந்தாதி) என்கிறபடியே எம்பெருமானுக்கு திவ்யாலயமாயிருக்கும் கடல். ஆழ்வாரும் அப்படியேயா யிருப்பர். * கல்லுங் கனைகடலும் வைகுந்தவானாடும் புல்லென்றொழிந்தனகொல் ஏபாவம்!, வெல்ல நெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான், அடியேனதுள்ளத்தகம் * கொண்டல் வண்ணன் சுடர் முடியன் நான்கு தோளன் குனிசார்ங்கன் ஒண்சங்கதை வாளாழியானொருவன் அடியேனுள் ளானே * என்கிறபடியே ஆழ்வார் எம்பெருமானுக்கு நித்யநிகேதநமாயிருப்பரிறே. * இவையு மவையு முவையுமென்கிற திருவாய்மொழியிலே இதுதன்னை விசதமாகக் காணலாம்.

[அஸீமபூமா] बहो: भाव:–भूमा; ப்ருஹத்த்வ மென்றபடி. " बृहत्त्वं च स्वरूपेण गुणैश्च यत्रानवधिकातिशयम् " என்று ஸ்ரீ பாஷ்யத்தி லருளிச்செய்தபடியே ஆகாரத்தாலும் குணத்தாலும் த்விவிதமா யிருக்குமிறே ப்ருஹத்த்வம். பெரிய மலை, பெரியகுளம், பெரிய மாளிகை என்றால் அங்கே விவக்ஷிதமான பெருமை ஆகாரத்தினாலாகும். பெரியமனிசர் என்று சில மஹா புருஷர்களைச் சொல்லுவோமாகில் குணங்களினாலாகிய பெருமையே அங்கு விவக்ஷிதமாகும். ஆக இப்படி இருவகைப்பட்ட பெருமையில் ஆகாரப்ரயுக்தமான பெருமை கடலுக்கு ஆனப் போலே குணப்ரயுக்தமான பெருமை ஆழ்வார்க்காயிற்று. * அருள்கொண்டாயிரமின் தமிழ் பாடினா னருள்கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே * என்னும்படியாய் எல்லைகாணவொண்ணாத க்ருபாகுண மொன்றின் பெருமை போதுமே.

ஆக நான்கு விசேஷணங்களினால் நம்மாழ்வார்க்கும் கடலுக்கும் ஸாதர்ம்யம் நிர்வஹிக்கப்பட்டதாயிற்று இப்படிப்பட்ட பராங்குசபயோதி: ஜீயாத்—நித்ய ஸ்ரீர் நித்யமங்களமாக வாழவேணு மென்றதாயிற்று. .... .... ... (3)

यन्मङ्गलाय महते जगतामुशन्ति त्रैविष्टपान्यपि पदानि यदाश्रयाणि ।
वन्दामहे सरसिजेक्षणमद्वितीयं वेदान्तवेद्यमनिदम्प्रथमं महस्तत् ॥४॥

**யந்மங்கலாய மஹதே ஜகதா முசந்தி**
**த்ரைவிஷ்டபாந்யபி பதாநி யதாச்ரயாணி,**
**வந்தாமஹே ஸரஸிஜேக்ஷண மத்விதீயம்**
**வேதாந்த வேத்யம் அநிதம்ப்ரதமம் மஹஸ் தத்: (4)**

யத் ஜகதாம் மஹதே மங்களாய உசந்தி த்ரைவிஷ்டபாநி பதாநி அபி யத் ஆச்ரயாணி, தத் ஸரஸிஜேக்ஷணம் அத்விதீயம் வேதாந்த வேத்யம் அநிதம்ப்ரதமம் மஹ: வந்தாமஹே.

பகவானாகிற யாதொரு தேஜஸ்ஸை, உலகங்களினுடைய மிருந்த மங்களத்தின் பொருட்டு [மஹா மங்களகரமாக என்றபடி] தத்வஜ்ஞானிகள் அபிப்ராயப் படுகிறார்களோ, மூவுலகங்களிலுமுள்ள ஸ்தான விசேஷங்களெல்லாம் யாதொரு தேஜஸ்ஸை ஆதாரமாகவுடையவைகளோ, அப்படிப் பட்டதும் செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையதும் ஒப்பற்றதும் வேதாந்தங்களினால் அறியக்கூடியதும் அநாதி ஸித்தமுமான தேஜஸ்ஸை ஸ்தோத்ரம் செய்கிறோம்.

* * * இந்த ச்லோகம் முதலாக எம்பெருமானை ஸ்தோத்ரம் பண்ணத் தொடங்குகிறார். * தேஜஸாம் ராசி மூர்ஜிதம் * என்றும் * குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு * என்றும் சொல்லுகிறபடியே, தேஜஸ்ஸென்று வேறொரு பதார்த்தமாய் அதையுடையவன் எம்பெருமான் என்று இரண்டுபடச் சொல்லும் படியன்றிக்கே, தேஜஸ் தத்வமே எம்பெருமானென்று அத்வைதம் பேசலாம்படியிறே எம்பெருமானுடைய தேஜோவிசேஷமிருப்பது. ஆகவே இந்த ச்லோகத்தில் எம்பெருமானை தேஜஸ்ஸாகவே அத்யவஸித்து அருளிச்செய்கிறார். யாதொரு தேஜஸ்ஸானது ஸகல லோகங்களுக்கும் மங்களப்ரதமாயிரா நின்றதோ, த்ரிலோகத்திலுமுள்ள ஸகல ஸ்தானங்களும் யாதொரு தேஜஸ்ஸை ஆதாரமாகக் கொண்டு நிலைபெற்றிருக்கின்றனவோ, யாதொரு தேஜஸ்ஸானது தாமரைபோன்ற திருக்கண்கள் பொலிய நின்றதாய் வேதாந்தங்களைக் கொண்டே அறிய நின்றதாய் * ஒத்தார்மிக்காரையிலையாயமாமாயா! * என்கிற படியே நிஸ்ஸமாப்யதிகமாய் சாச்வதமாய் விளங்குகின்றதோ, அந்த தேஜஸ்ஸை வணங்குகிறோம், (அல்லது) துதிக்கிறோம் என்றாராயிற்று.

உசக்தி— "வச - காந்தௌ ; காந்திரிச்சா " என்பர் வையாகரணர். வஷ்டி என்பது ஏகவசநம். இந்த தாதுவை வேதத்தில் தவிர லோகத்தில் ப்ரயோகிக்கலாகா தென்று அநுசாஸநமிருந்தாலும் கவிகள் பெரும்பாலும் ப்ரயோகித்து வருகிறார்கள்.

[அதிதம்ப்ரதமம்] इदंप्रथमं न भवति ॥ அநாதிஸித்த மென்றபடி. * பதிம் விச்வஸ்ய * என்கிற ச்ருதியில் சாச்வதம் என்றுள்ளதை யெடுத்துப் பேசினபடி. .... .... (4)

पीताम्बरं वरदशीतलदृष्टिपातम् आजानुलम्बिभुजमायतकर्णपाशम् ।

तन्मेघमेचकमुदग्रविशालवक्षः लक्ष्मीधरं किमपि वस्तु ममाविरस्तु ॥५॥

பீதாம்பரம் வரதசீதலத்ருஷ்டிபாதம்
ஆஜாநுலம்பிபுஜம் ஆயதகர்ணபாசம்,
தந்மேகமேசகமுதக்ரவிசாலவக்ஷ:
லக்ஷ்மீதரம் கிமபி வஸ்து மமாவிரஸ்து. 5

| | |
|---|---|
| பீதாம்பரம் வரதசீதலத்ருஷ்டிபாதம் ஆஜாநுலம்பிபுஜம் ஆயதகர்ணபாசம் மேகமேசகம் உதக்ர விசாலவக்ஷ: லக்ஷ்மீ தரம் தத் கிமபி வஸ்து மம ஆவிரஸ்து | பீதகவாடையுடையதும் வரப்ரதமாய் சீதலமான கடாக்ஷபாதத்தையுடையதும் திருமுழந்தாள் வரை தொங்குகின்ற திருக்கைகளை யுடையதும் நீண்ட திருக்காதுகளையுடையதும் மேகம்போல் சாமள மானதும் உன்னதமும் விசாலமுமான திருமார்பை யுடையதும் ஸ்ரீ மஹாலக்ஷ்மியைத் தரிப்பதுமான (எம்பெருமானுகிற) அந்த ஒரு வஸ்து, அடியேன் பால் ஆவிர்ப்பவிக்க வேணும். |

* * * கீழ்ச்லோகத்திலே ஸாவிஶேஷணமென்று ஸம்க்ஷேபத: ப்ரஸ்துதமான திவ்ய மங்கள விக்ரஹ யோகத்தை விசேஷேண அநுபவித்து அருளிச் செய்கிறார் இதில். இதிலும் எம்பெருமானுடைய திருநாமத்தை ஸாக்ஷாத்தாக நிர்தேசியாதே 'கிமபி வஸ்து' என்று அநிர்வசநீயதயா அருளிச் செய்கிறார்.

* பெண்ணின் வருத்தமறியாத பெருமானரையில் பீதக வண்ணவாடை கொண்டு என்னை வாட்டந் தணிய வீசீரே * என்று ஆண்டாள் போல்வார் விரும்பி அர்த்திக்க அவர் களுக்கு அருள் செய்வதற்காகப் பீதகவாடை பணிந்தும், * தொண்டரோர்க் கருளிச் சோதிவாய் திறந்து உன் தாமரைக் கண்களால் நோக்காய் * என்று வேண்டு மடியவர்க்கு அங்ஙனமே ஸகலாபீஷ்ட ப்ரதமாய் நின்று குளிர நோக்கும் திருக்கண்பார்வை கொண்டும், முழந்தாளளவும் நீண்ட திருக்கைகளோடு கூடியும், தோளளவும் தழதழென்று தொங்கு கின்ற திருச் செவிகள் கொண்டும், நீலமேகநிபச்யாமமாயும், நீண்டு அகன்ற திருமார்பை யுடைத்தாயும் , * அகல கில்லேனிறையு மென்று அலர்மேல் மங்கையுறை மார்பா ! * என்கிறபடியே இடைவிடாது திருமார்பிலே திருமாமகள் திகழப்பெற்று மிராநின்ற ஒரு விலக்ஷண வஸ்து என் கண்முன்னே காட்சிதர வேணுமென்கிறாராயிற்று.

* கர்ணபாச மென்ற விடத்தில் பாச சப்தம் சிறந்த தென்னும் பொருளில் வந்தது.

* உதக்ரவிசால வக்ஷோலக்ஷ்மீதரம் * என்று ஸமஸ்தபதமாகவும் கொள்ளலாம். அப்போது, வக்ஷஸ்ஸிலே லக்ஷ்மியைத் தரிப்பதாகப்பொருள். ... (5)

यत्तत्त्वमक्षरमदृश्यमगोत्रवर्णम् अग्राह्यमव्ययमनीदृशमद्वितीयम् ।

ईशानमस्य जगतो यदणोरणीयः तद्वैष्णवं पदमुदारमुदाहरामः ॥६॥

யத் தத்வமக்ஷரமத்ருச்யமகோத்ரவர்ணம்
அக்ராஹ்யமவ்யயமநீத்ருசமத்விதீயம்,
ஈசாநமஸ்ய ஜகதோ யதணோரணீய:
தத் வைஷ்ணவம் பதமுதாரமுதாஹராம: 6

வைஷ்ணவம் யத் பதம் தத்வம் அக்ஷரம் அத்ருச்யம் அகோத்ரவர்ணம் அக்ராஹ்யம் அவ்யயம் அநீத்ருசம் அத்விதீயம் யத் அஸ்ய ஜகத: ஈசாநம் அணோ: அணீய: உதாரம் தத் உதாஹராம:.

எம்பெருமானுடையதான யாதொரு ஸ்வரூபமானது ஸத்யமானதோ, நிர்விகாரமனதோ, கண்ணால் காணக் கூடாததோ, நாமமும் ரூபமுமில்லாததோ, அநுமானம் முதலியவற்றைக்கொண்டு க்ரஹிக்க முடியாததோ, விநாசமில்லாததோ, நாம் கண்களால் காணும் வஸ்துக்கள் போலல்லாததோ; இணையில்லாததோ; யாதொரு ஸ்வரூபமானது இந்த ஜகத்துக்கு ஈச்வரமானதோ, அணுவான வஸ்துக்களிற் காட்டிலும் மிகவும் அணுவானதோ, மஹத்தானதோ, அப்படிப்பட்ட பகவத் ஸ்வரூபத்தை ஸ்துதிக்கிறோம்.

யாதொரு பகவத் ஸ்வரூபமானது ஸத்யமாயும் அநந்தமாயும் * என்றேனும் கட்கண்ணால் காணாத அவ்வுரு * என்கிறபடியே மாம்ஸ சக்ஷுஸ்ஸாலே காணக்கூடாததாயும் நாமரூப ரஹிதமாயும் அநுமாநாதிகளுக்கும் அவிஷயமாயும் அஸங்க்யேத கல்யாணகுண விசிஷ்டமாயும், இப்படிப்பட்டதென்று ஒருபடி நிரூபித்துச் சொல்ல முடியாததாயும் [அதாவது, அபரிச்சின்னஸ்வரூப குண விபூதிகமாயும் சேதநா சேதந விஜாதீயமாயும்], ஸமாப்யதிக வஸ்து வேறொன்றில்லாததாயும், * பதிம் விச்வஸ்யாத்மேச்வரம் * இத்யாதிப் படியே சேதநா சேதநாத்மக ஸகல ஜகத்துக்கும் நியாமகமாயும், அணுவைக் காட்டிலும் மிகவும் அணுபூதமாயும், [அதாவது, * பரந்த தண்பரவையுள் நீர்தொறும் பரந்துளன், பரந்த அண்டமிதென நிலவிசும் பொழிவற, கரந்த சிலிடந்தொறு மிடந்திகழ் பொருடொறும், கரந்தெங்கும் பரந்துளனிவை யுண்டகரனே * என்கிறபடியே மிகச் சிறிய வஸ்துக்களிலேயும் உள்ளே ப்ரவேசிப்பதற்கு அநுகுணமான நிலையையுடைத்தாய்,] * மஹதோ மஹீயஸ்ஸாயுமிரா நின்றதோ, அப்படிப்பட்டதான விஷ்ணு ஸ்வரூபத்தை வாய்கொண்டு பேசப்புகுகிறோமென்கிறார்.

[உதாரம்] * உதாரோ தாத்ரு மஹதோ: * என்பது நிகண்டு. உதாத்தம் என்றொரு பாடமும் காண்கிறது. அந்த பகவத்ஸ்வரூபத்தை உயர்த்திச் சொல்லுகிறோ மென்கை. (6)

आम्नायमूर्धनि च मूर्धनि चोर्ध्वपुंसां यद्धाम वैष्णवमभीक्ष्णतरं चकास्ति ।
तन्मादृशामपि च गोचरमेति वाचो मन्ये तदीय मिदमाश्रितवत्सलत्वम् ॥७॥

ஆம்நாயமூர்த்தநி ச மூர்த்தநி சோர்த்வபும்ஸாம்
யத் தாம வைஷ்ணவமபீக்ஷ்ணதரம் சகாஸ்தி,
தந்மாத்ருசாமபி ச கோசரமேதி வாச:
மந்யே ததீயமிதமாச்ரிதவத்ஸலத்வம். 7

யத் வைஷ்ணவம் தாம ஆம்நாய மூர்த்தநி ஊர்த்த்வபும்ஸாம் மூர்த்தநி ச அபீக்ஷ்ணதரம் சகாஸ்தி, தத் மாத்ருசாம் வாச: அபிச கோசரம் ஏதி, இதம் ததீயம் ஆச்ரித வத்ஸலத்வம் மந்யே.

யாதொரு பகவத் தேஜஸ்ஸானது வேதாந்தத்திலும், பூர்வ புருஷர்களின் திருமுடியிலும், மிகவும் விளங்குகின்றதோ, அந்த தேஜஸ்ஸானது என் போன்றவர்களுடைய வாக்குக்கும் விஷயமாயிருக்கையை அடைகின்றது; இப்படி யாவதானது, அவ்வெம்பெருமானுடையதான ஆச்ரித வாத்ஸல்ய கார்யம் போலும்.

* அம்மானாழிப் பிரானவ னெவ்விடத்தான் யானார் * என்கிறபடியே எம்பெருமா னுடைய பெருமையையும் தம்முடைய சிறுமையையும் பார்த்து, அந்த உத்துங்க தத்துவ மானது * நிறை யொன்று மில்லாத நீசனேன் வாய்கொண்டு பேசும்படியானதாக அல்லாமலிருக்கச் செய்தேயும் என்னுடைய வாக்குக்கும் ஒருபடி விஷயமாகப் பெற்றதானது என்னே! பகவத் வாத்ஸல்யம் கரைபுரண்ட படியாய்த்து இது! என்கிறார்.

எம்பெருமானை ஒரு தேஜஸ்ஸாகவே பேசுகிறார். அந்தத் தேஜஸ்ஸு எப்படிப் பட்ட தென்னில், அதன் உத்துங்கதையைப் பூர்வார்த்தத்தாலருளிச் செய்கிறார்; வேதாந்தங்களிலும் நம்மாழ்வாருடைய திருமுடியிலுமே விளங்குவதாம் அந்த தேஜஸ்ஸு. * வேதாந்த விழுப் பொருளின் மேலிருந்த விளக்கு * என்கிறபடியே வேதாந்தமாகிற உபநிஷத்துக்களிலேயே விளங்குதலால் * ஆம்நாயமூர்த்தநி * என்றது.

[ஊர்த்த்வபும்ஸாம் மூர்த்தநி ச] ஊர்த்த்வ புருஷ ரென்பது நம்மாழ்வாரையாயிற்று. * திருமாலிருஞ்சோலை மலையே திருபாற்கடலே என் தலையே * என்றும் * என்னுச்சியுளானே * என்றும் அருளிச் செய்தாரிறே அவர்தாம். வரதராஜ ஸ்தவத்திலே * யச்ச மூர்த்தா சடாரே: * என்று இவர்தாமே முக்த கண்டமாக அருளிச் செய்ததும் காண்க. ஆக விப்படி வேதத்தினுச்சியிலும் த்ராவிட வேதத்ரஷ்டாவான ஆழ்வாருடைய திருமுடியிலுமே விளங்காநிற்கு மெம்பெருமான் என்னுடைய இளைய புன் கவிதைக்கும் இலக்கா கிறானென்றால் இது அவன்றன்னுடைய வாத்ஸல்ய பரீவாஹ மத்தனையிறே! என்றாராயிற்று.

ஸ்தோத்ர ரத்நத்தில் ஆளவந்தார் *யந்மூர்த்நி மே ச்ருதி சிரஸ்ஸு ச பாதி* என்று தம்முடைய திருமுடியிலும் எம்பெருமான் விளங்குவதாக அருளிச் செய்திருக்கையால் அவ்வாசிரியர் தம்மையும் இங்கு ஊர்த்வபும்ஸாம் என்பதனால் விவக்ஷிக்கத் தகும்.

கோசரம் என்றது கோசரத்வ மென்றபடி. பாவப்ரதாந நிர்தேசமென்று கொள்க. இதும் ஆச்ரித வத்ஸலத்வ ப்ரயுக்தம் என்ன வேண்டியிருக்க ஆச்ரித வத்ஸலத்வ மென்றே அருளிச்செய்தது கார்ய காரணங்களுக்கு அபேதோபசார மிருந்தபடி. எம்பெருமான் தோஷ போக்ய னாகையாலே என்னுடைய துஷ்ட வாக்குகளைக் கொண்டு நான் நிர்ப்பயமாக ஸ்துதி செய்யப் புகுந்தேனென்பது பரம தாத்பர்யம். .... ... (7)

जानन्नपीह किल मामनपत्रपिष्णुः विष्णोः पदप्रणयिनीं गिरमाद्रियेऽहम् ।

न श्वावलीढमपि तीर्थमतीर्थमाहुः नोदन्यतापि च शुना किल लज्जितव्यम् ॥८॥

ஜாநந்நபீஹ கில மாமநபத்ரபிஷ்ணு:
விஷ்ணோ: பதப்ரணயிநீம் கிரமாத்ரியேஹம்,
ந ச்வாவலீடமபி தீர்த்தமதீர்த்தமாஹு:
நோதந்யதாபி ச சுநா கில லஜ்ஜிதவ்யம். 8

அஹம் மாம் ஜாநந் அபி அநபத்ரபிஷ்ணு: விஷ்ணோ: பதப்ரணயிநீம் கிரம் இஹ ஆத்ரியே; தீர்த்தம் ச்வஅவலீடம் அபி அதீர்த்தம் நாஹு: கில; உதந்யதா சுநா அபிச ந லஜ்ஜிதவ்யம் கில.

அடியேன் என்னை அஜ்ஞனாகத் தெரிந்துகொண்டவனாயிருந்தும் வெட்கப்படாதவனாய் எம்பெருமானுடைய திருவடியில் ப்ரேமம் பொருந்திய வாக்கை இங்குத் தொடுக்க விரும்புகிறேன்; இயற்கையாகவே பவித்திரமான கங்கை முதலிய தீர்த்தம் நாயினால் நக்கப்பட்டபோதிலும் அதனைத் தீர்த்த மல்லாததாகச் சொல்லமாட்டார்களல்லவா; தாஹங்கொண்ட நாயினாலும் நாணப்படத் தகுதியில்லையே.

* * * நைச்யாநுஸந்தானத்தின் எல்லையிலே நின்று அருளிச் செய்வதாயிற்று இந்த ச்லோகம். * மாகுணனவான்கோலத்தமரர்கோன் வழிப்பட்டால் மாகுண வுனபாத

வர்ச்சோதி மழுங்காதே * என்கிறபடியே மேலானவர்கள் துதித்தாலுங்கூட எம்பெருமானுடைய பெருமைக்கு மழுங்குதல் விளையுமென்னுகிற்க, அல்பஜ்ஞரான நீர் துதிக்கப்புக்கால் நிறககேடாகுமன்றோ வென்று சிலர் சொல்லுவதாகக் கொண்டு அதற்கு ஸமாதானமுரைப்பதாயுள்ளது இந்த ச்லோகம்.

என்னுடைய அல்பஜ்ஞத்வமோ அஜ்ஞத்வமோ எனக்குத் தெரியாமையில்லை; நன்கு தெரிந்திருந்தும் நான் வெட்கமின்றியே பகவத்விஷய ஸ்துதியிலே ப்ரவர்த்தியாநின்றேன்; எனது புல்லியவாக்கில் புகுந்து புறப்படுவதால் பகவத்விஷயம் தூய்மை குன்றாதோ வென்னில்; குன்றாது; நிஹீநஜந்துக்களுள் மிகவும் நிஹீநமான நாயானது ஸ்வத: பரிசுத்தமான கங்கா தீர்த்தம் முதலிய புண்ய தீர்த்தத்தைத் தன்னுடைய நாவினால் அளைந்தவளவால் அந்தத் தீர்த்தத்திற்கு ஒரு அபரிசுத்தியும் விளையமாட்டாதன்றோ. வஸிஷ்ட சண்டாள விபாகமின்றிக்கே எல்லாரும் படிந்து குடைந்தாடலாம்படி பரம பவித்திரமாயிருந்துள்ள புண்ய தீர்த்தத்திற்கு நாய் தீண்டுதலால் ஒரு அசுத்தி விளையுமாகில் பகவத்விஷயத்துக்கும் என்னுடைய வாய் தீண்டுதலால் ஒரு அவத்யம் விளையும். அதற்கு ப்ரஸக்தியில்லாதாப்போலே இதற்கும் ப்ரஸக்தியில்லைகிடீர். விடாய் மிகுந்த அந்த நாய் தீர்த்தத்திலே வாய் வைக்க லஜ்ஜிக்கவும் மாட்டாதாப்போலே, பகவத் விஷயத்தைப் பேசியல்லது தரிக்ககில்லாத அடியேனும் பேசுவதற்கு லஜ்ஜிக்கவும் அவகாசமில்லை காணீர்.

பகவத் விஷயத்தைப் பேசுவதற்கு நானும் லஜ்ஜிக்க வேண்டுவதில்லை; அறிவிலியான நான் பேசினவளவால் அவ்விஷயந் தனக்கும் ஒரு அவத்யம் வாராது—என்றாராயிற்று. இவர் தாமே ஸ்ரீஸ்தவத்தில் * ஸ்தோத்ரீயாஙபி துஷ்டபுத்ரிபி * என்ற ச்லோகத்திலும் இங்ஙனே பணிச்செய்தது காண்க.

அபத்ரபிஷ்ணு: ந பவதீதி—அநபத்ரபிஷ்ணு:. * அலங்க்ருஞ் நிராக்ருஞ் * இத்யாதி பாணிநிஸூத்ரத்தாலே இஷ்ணுச் ப்ரத்யயம் ப்ராப்தமாய் 'அபத்ரபிஷ்ணு:' என்கிற ரூபம் ஸித்திக்கக்கடவது. [உதந்யதா] * अशनायोदन्यधनाया बुभुक्षापिपासागर्धेषु * என்கிற பாணிநிஸூத்ரத்தினால் क्यजन्तनिपातनम् ப்ராப்தமாய் 'உதந்யதி' என்று நிஷ்பந்நமாக, அது சத்ப்ரத்யயாந்தமாய் 'உதந்யந்' என்றாகிறது; விடாயுடையவன் என்றபடி. அதன்மேல் த்ருதீயையில் 'உதந்யதா' என்றாகிறது. ... .... .... (8)

देवस्य दैत्यमथनस्य गुणेष्वियत्ता संख्या च वाङ्मनसगोचरमत्यभूताम् ।
अप्येवमण्वपि च तत्र ममार्तिशान्त्यै कीटस्य तृष्यत उदन्वति विप्रुषाऽलम् ॥९॥

தேவஸ்ய தைத்யமதநஸ்ய குணேஷு வியத்தா
ஸங்க்யா ச வாங்மநஸ கோசரமத்யபூதாம்,
அப்யேவமண்வபி ச தத்ர மமார்த்தி சாந்த்யை
கீடஸ்ய த்ருஷ்யத உதந்வதி விப்ருஷாலம். 9

தைத்யமதநஸ்ய தேவஸ்ய குணேஷு ஸங்க்யா இயத்தா ச வாங்மநஸகோசரம் அத்யபூதாம்; ஏவம்அபி தத்ர அணு அபிச மம ஆர்த்திசாந்த்யை அலம்; த்ருஷ்யத: கீடஸ்ய உதந்வதி விப்ருஷா அலம்.

அஸுரநிரஸநசீலனான எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களில் எண்ணிக்கையும் இவ்வளவென்கையும் வாக்குக்கும் நெஞ்சுக்கும் எட்டுந்தன்மையைக் கடந்துவிட்டன; இப்படியானபோதிலும் அக்குணங்களில் அணுவளவும் அடியேனுடைய ஆர்த்தி தணிவதற்குப் போதும்; தாஹித்திருக்கின்ற புழுவுக்குக் கடலில் ஒரு திவலைமாத்திரத்தாலே பர்யாப்தி பிறக்குமிறே.

* * * எம்பெருமானை * உயர்வற வுயர்நல முடையவனென்னும்படி எண்ணில் பல்குணங்களுக்குக் கடல்போன்றிரா நின்றான்; அப்படிப்பட்ட அனந்த கல்யாண குணங்களைப் பேசித் தலைக்கட்டுகைக் கீடான ஜ்ஞான சக்திகள் அல்பமும் இல்லாதிருக்கிற நீர் அவனது திருக்குணங்களைப் பேசவதில் இழியத் தகுமோவென்று சிலர் கேட்பதாக வைத்து, அது தகும் என்று ஸமர்த்திக்கிறார் இதில்.

ஆஸாப்ரக்ருதிகளை அழித்தருளுமெம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களானவை தனித்தனியாயும் எண்ணமுடியாதவை, ஒரு திரளாகவும் எண்ணமுடியாதவை. கடுகு எள்ளு கொள்ளு என்றுள்ள பொருள்களைத் தனித்தனியே எண்ண முடியாமற் போனாலும் 'இருபது மாக்கால் கடுகு, முப்பது பதக்கு எள்ளு, நாற்பது மூட்டை கொள்ளு' என்றிப்படி ஒரு ஸமுதாய ரூபேண எண்ணி விடலாம்; அப்படியும் எண்ணமுடியாதவை பகவத் குணங்கள்; ஆயிருக்கச் செய்தேயும் சிறியஞானத்தனாகிய அடியேன் அந்த அனந்த கல்யாண குணங்களில் அணுமாத்ரமே பேசவல்லேன். அவ்வளவினால் அடியேனுடைய ஆர்த்திதீரும். விடாய்கொண்டதொரு க்ஷுத்ரஜந்துவானது கடலிலே வாய்வையா நின்றதென்றால் கடல் முழுவதையும் அது பருகவல்லதாகவேணுமோ? கடலில் ஒரு திவலை மாத்திரத்தைப் பருகினவளவால் அதனுடைய விடாய் அடங்கிப்போகின்றதன்றோ! அது போலவே கீடப்ராயனான அடியேனும் பகவத்குணங்களாகிற அமுதக்கடலிலே யதாசக்தி வாய்வைத்து எனக்குள்ள விடாய் தீரப்பெறவேணத்தனை யென்கிறார்.

ஸ்தோத்ரரத்நத்தில் * யத் வா ச்ரமாவதி யதாமதிவாபி * என்கிற ச்லோகத்தின் பரமதாத்பர்யமே இச்சலோகத்தில் ஒருவகையாக ஸூசிதமாயிற்று. எம்பெருமானுடைய திருக்குணங்கள் பேசித் தலைக்கட்ட முடியாதவை யென்பதும் அவரவர்கள் பேசப்புகுவ-தெல்லாம் அவரவர்களின் அபிநிவேசம் ஒருவாறு தீர்வதற்கேயன்றி பகவத் குணங்களை எல்லைகண்டுவிடுவதற்காகவன் றென்பதும் இதனால் விளக்கப்பட்டதாகும். .... ....(9)

प्रेमार्द्रविह्वलगिरः पुरुषाः पुराणाः त्वां तुष्टुवुर्मधुरिपो ! मधुरैर्वचोभिः ।

वाचो विडम्बितमिदं मम नीचवाचः क्षान्तिस्तु ते सविषया मम दुर्वचोभिः ॥१०॥

ப்ரேமார்த்ரவிஹ்வலகிர: புருஷா: புராணா:
த்வாம் துஷ்டுவுர் மதுரிபோ மதுரைர் வசோபி:,
வாசோ விடம்பிதமிதம் மம நீசவாச:
க்ஷாந்திஸ் து தே ஸவிஷயா மம துர்வசோபி:. 10

ஹே மதுரிபோ! ப்ரேம ஆர்த்ர விஹ்வல கிர: புராணா: புருஷா: மதுரை: வசோபி: த்வாம் துஷ்டுவு:; நீசவாச: மம இதம் வாசோ விடம்பிதம்; மம துர்வசோபி: தே க்ஷாந்திஸ் து ஸவிஷயா.

வாரீர் மதுஸூதனனான பெருமாளே! பக்தியினால் கனிந்து தழதழத்த குரலையுடைய ஆழ்வார்களு மாசாரியர்களுமான முன்னோர்கள் இனிய ஸ்ரீஸூக்திகளாலே தேவரீரைத் துதித்தார்கள்; புல்லிய வாக்குக்களையுடைய அடியேனுடைய இந்த ஸ்தோத்ரமானது அந்த முன்னோர்களின் வாக்கின் அநுகார ரூபமாமத்தனை; அடியேனுடைய துருக்திகளினால் தேவரீருடைய க்ஷமாகுணம் இலக்குப் பெற்றதாகின்றது.

* * * ஏற்கெனவே எம்பெருமானை ஸ்தோத்ரம் செய்தருளின மஹான்களின் ஸ்ரீஸூக்திஸரணியை ஒருபடி அநுகரித்தே தாம் ஸ்துதிக்க இழிந்ததாகவும், தம்முடைய இந்த ஸ்தவத்தால் எம்பெருமானுடைய க்ஷமாகுணம் மிகவும் நிறம் பெறுமென்பதாகவும் இதில் அருளிச்செய்கிறார்.

[ப்ரேமார்த்ர விஹ்வல கிர:] * உள்ளெலா முருகிக் குரல் தழுத்தொழிந்தே னுடம்பெலாங் கண்ணநீர் சோர * என்றும் * வேவாரா வேட்கை நோய் மெல்லாவியுள்ளுலர்த்த *

என்றும் * ஆராவமுதே! அடியேனுடலம் நின்பாலன்பாயே நீராயலைந்து கரைய வுருக்குகின்ற * என்றும் ஹார்தமான ப்ரேமத்தாலே நெஞ்சு கனிந்த குரல் தழதழத்துப் பேசுகின்ற ஆழ்வார்களைத் திருவுள்ளம்பற்றியே "ப்ரேமார்த்ரவிஹ்வலகிர:" என்றருளிச் செய்தது. அப்படிப்பட்ட ஆழ்வார்களும் அவர்களைப் பின் சென்று பேச வல்லவர்களான ஆளவந்தார் முதலிய ஆசாரியர்களும், [மதுரைர் வசோபி: த்வாம் துஷ்டுவு:] * கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே * என்றும் * தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன் * என்றும் * குழலின்மலியச் சொன்னவோராயிர மென்றும் அந்த ஸ்ரீஸூக்திகளின் மாதுர்யம் அவர்களையே மெய்மறந்து பேசப் பண்ணிற்றிறே; அப்படியாக வன்றோ தேவரீரை ஸ்துதித்தார்கள்.

[வாசோ விடம்பித மிதம் மம நீசவாச:] அவர்களுக்குப்போல ஞானமோ பக்தியோ விரக்தியோ அடியேனுக்கு இறையுமில்லை; என்னுடைய வாக்கும் ரஸிகர்கள் காது கொடுத்துக் கேட்கத்தக்கதா யிராது; ஆயினும் முன்னோர்கள் பேசின விஷயங்களையே நான் அநுகரித்துப் பேசா நின்றேனத்தனை; பராங்குச பரகாலாதிகளான ஆழ்வார்களும் ஆளவந்தார் போல்வாரான ஆசார்யர்களும் அருளிச்செய்யாத அர்த்தங்களில்லை; அவற்றின் அநுவாதமே என்னுக்திகளிலுள்ளது என்கிறார்.

[மம துர்வசோபி: தே க்ஷாந்திஸ்து ஸவிஷயா] 'ஆழ்வான்!, உம்முடைய ஸ்தவத்திலே அர்த்தமும் அபூர்வமாக இல்லை. சப்தமும் மதுரமாக இல்லை யென்கிறீர்; இப்படியிருக்க, எதுக்கு வீண் ப்ரயாஸங்கொண்டு ச்லோக ரசனையிலே யிழிந்தீர்?' என்று எம்பெருமான் கேட்பதாகக் கொண்டு அதுதனக்கு உத்தரமுரைக்கிறார்— அடியேன் ஒன்றும் பேசாதொழியில் தேவரீருடைய பொறுமைக்குணத்திற்கு ஒன்றும் விஷயமில்லையாய்விடுமே யென்கிறார். முன்னோர்க ளருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளெல்லாம் குற்றங் குறைகள் சிறிது மற்றுக் குணங்கள் நிரம்பியிருப்பதனால் அவற்றில் தேவரீருடைய க்ஷமாகுணத்திற்கு இலக்கிடையா தொழிந்தது. குணலேசமின்றியே அவத்யங்களே வடிவெடுத்திருக்கும்படி பேச வல்லவன் அடியேனே யாதலால் அடியேனுடைய உக்திகளினாலேயாயிற்று தேவரீருடைய க்ஷமாகுணம் இலக்குப்பெற்றதாவது என்கிறார். இங்ஙனே யருளிச்செய்வதன் கருத்து யாதெனில்; அடியேன் விண்ணப்பம் செய்வது தப்பும் தவறுமா யிருந்தாலும் சீறியருளாதே க்ஷமித்தருள வேண்டுமென்கிற ப்ரார்த்தனையேயாம். ... .... (10)

आज्ञा तवात्रभवती विदिता त्रयी सा तां हि प्रमाणमुपजग्मुरतीन्द्रियेऽर्थे ।
आभासभूयमभियान्त्यपराणि दोषैः एषा तु दोषरहिता महिता पुराणी ॥११॥

ஆஜ்ஞா தவாத்ரபவதீ விதிதா த்ரயீ ஸா
தாம் ஹி ப்ரமாண முபஜக்முரதீந்த்ரியேர்த்தே,
ஆபாஸபூய மபியாந்த்யபராணி தோஷை:
ஏஷா து தோஷரஹிதா மஹிதா புராணீ. 11

அத்ரபவதீ ஸா த்ரயீ தவ ஆஜ்ஞா விதிதா, தாம் அதீந்த்ரியே அர்த்தே ப்ரமாணம் உபஜக்மு: ஹி; அபராணி தோஷை: ஆபாஸபூயம் அபியாந்தி; ஏஷா து புராணீ தோஷரஹிதா மஹிதா.

(எம்பெருமானே!,) பூஜிக்கத் தகுந்ததும் ப்ரஸித்தமுமான வேதமானது தேவரீருடைய கட்டளையாக ப்ரஸித்தி பெற்றுள்ளது; அந்த வேதத்தை இந்திரியங்களுக்கெட்டாத பரோக்ஷவிஷயங்களில் ப்ரமாணமாக (வைதிகர்கள்) அங்கீகரித்தார்கள்; வேதம் தவிர்ந்த மற்ற பாஹ்ய சாஸ்த்ரங்கள் பலவகைத் தோஷங்களினால் ஆபாஸத் தன்மையை யடைந்து அப்ராமாணிகமாகின்றன; இந்த வேதமோ வென்றால் அநாதிஸித்தமாய்த் தோஷமற்றதாய் ப்ரமாணங்களுள் தலையாகக் கொண்டாடப்பட்டது.

கீழ்க் கழிந்த பத்து ச்லோகங்களும் இந்த ஸ்தவத்திற்கு அவதாரிகைபோல் சென்றன. ஸ்வாசார்யரான எம்பெருமானாரை வணங்கி, பரமாசார்யரான ஆழ்வாரை இறைஞ்சி, ஸ்தவத்திற்கு விஷய பூதனை எம்பெருமானை பநுஸந்தித்து அவனுடைய பெருமையையும் தம்முடைய சிறுமையையும் பார்த்தவாறே இந்த ஸ்தோத்ர ப்ரவ்ருத்தி அவனுடைய வாத்ஸல்ய கார்ய மத்தனையென்று அறுதியிட்டு, எம்பெருமானைப் பேசியல்லது தரிக்கமாட்டாத தம்முடைய ஆர்த்தியை ஆவிஷ்கரித்து, எம்பெருமானுடைய க்ஷமாகுணத்துக்கு உத்தம்பகமாயிருக்கையாலே இந்த ஸ்தோத்ர ப்ரவ்ருத்தி யுக்தமே யாகுமென்றும் நிஷ்கர்ஷித்து, அதற்குமேல் ஸ்தோத்திரத்திலே ப்ரவ்ருத்தராய் அதற்குறுப்பாக ப்ரமாண நிஷ்கர்ஷம் பண்ணுகிறார் இதில். ஆழ்வார் திருவாய்மொழியில் அருளிச்செய்யும் அர்த்த விசேஷங்களெல்லாம் வேத வேதாந்த சாஸ்த்ர ஸித்தமானவை யென்பதைக் காட்டும் பொருட்டுத் திருவாய்மொழியின் தொடக்கத்திலேயே * உளன் சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே * என்றருளிச் செய்தாப்போலே இவர்தாமும் இதுமுதலான ஸ்தவங்களிலே தாம் அருளிச் செய்யப்புகுகிற அர்த்த விசேஷங்களெல்லாம் வேதஸித்தமத்தனை யென்று ஸூசிப்பிப்பதற்காக வேதமே பரம ப்ரமாணமென்று முக்தற முன்னம் மூதலித்தருளுகிறார். *श्रुतिः स्मृतिर्ममैवाज्ञा यस्तामुल्लंघ्य वर्तते । आज्ञाच्छेदी मम द्रोही मद्भक्तोऽपि न वैष्णवः = ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ் தாமுல்லங்க்ய வர்த்ததே. ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ꞉. * என்கிற திருமுகப் பாசுரப்படியே வேதம் எம்பெருமானுடைய ஆஜ்ஞாரூபமாகையாலே [ஆஜ்ஞா தவாத்ரபவதீ விதிதா த்ரயீ ஸா] என்கிறார். அரசனது கட்டளையை மீறி நடப்பார்க்கு ராஜதண்டனை சேருகிறாப்போலே எம்பெருமானுடைய கட்டளையான சாஸ்த்ரத்தை மீறி நடப்பார்க்கும் அந்த சாஸ்த்ரத்திற்கு விருத்தமாகப் பேசுகின்றவர்களுக்கும் இங்குமங்கும் தண்டம் தப்பாதென்று காட்டினபடி.

[தாம் ஹி ப்ரமாண முபஜக்மு ரதீந்த்ரியேர்த்தே] ப்ரமாதாவானவன் ஒரு ப்ரமாணத்தைக் கொண்டே ப்ரமேயத்தை நிச்சயிக்க வேண்டுகையாலே அப்படி ப்ரமேயத்தை நிச்சயித்துக்கொடுப்பதான ப்ரமாணம் எதுவென்று விமர்சிக்குமளவிலே ப்ரத்யக்ஷம் முதலியவை எட்டு ப்ரமாணங்களென்று சொல்லுவர்கள். அதில் * ப்ரத்யக்ஷமேகம் சார்வாகா꞉ * இத்யாதியில் சொல்லுகிற பாஹ்ய குத்ருஷ்டிகளைப்போலன்றியே ப்ரத்யக்ஷ அநுமான ஆகமங்கள் மூன்றையும் ப்ரமாணமாக அங்கீகரித்து உபமாநம் முதலான மற்ற ஐந்தையும் அவற்றிலே தகுந்தவாறு அந்தர்ப்பவிப்பித்து, அவற்றில் ப்ரத்யக்ஷம் இந்த்ரியங்களாலே க்ரஹிக்கக் கூடிய விஷயங்களில் ப்ரமாணமென்றும் அநுமாநம் பெரும்பாலும் பரோக்ஷ விஷயங்களில் ப்ரமாணமென்றும், ஸர்வாத்மநா இந்திரியங்களுக்கெட்டாத விஷயங்களில் சாஸ்த்ரமே ப்ரமாணமென்றும் நிஷ்கர்ஷித்து, அதுதன்னிலும் * वेदे कर्त्राद्यभावाद्बलवति हि नयैस्त्वन्मुखे नीयमाने तन्मूलत्वेन मानं तदितरदखिलं जायते रङ्गधामन् !—வேதே கர்த்ராத்யபாவாத் பலவதி ஹி நயைஸ் த்வந்முகே நீயமாநே தந்மூலத்வேந மாநம் ததிதரதகிலம் ஜாயதே ரங்கதாமந் * [ஸ்ரீரங்கராஜஸ்தவே, 2—14.] என்று பட்டருளிச்செய்தபடியே ஸ்வப்ராமாண்யத்திற்கு மூலஸாபேக்ஷமான பௌருஷேய சாஸ்த்ரங்களைக் காட்டிலும் ஸ்வத꞉ ப்ராமாண்யமுடைய வேதமே ப்ரபல ப்ரமாணமென்றும் அறுதியிட்டிருப்பர்களாயிற்று நம்முடைய ஆசார்யர்கள். இதுவே இங்கு “ தாம் ஹி ப்ரமாணமுபஜக்முரதீந்த்ரியேர்த்தே ” என்பதனால் விளக்கப்பட்டது.

[அபராணி தோஷை꞉ ஆபாஸபூய மபியாந்தி] வேதங்கள் தவிர வேதமூலங்களல்லாத சாஸ்த்ரங்களெல்லாம் ப்ரமம் ப்ரமாதம் விப்ரலிப்ஸை முதலான தோஷங்களினால் துஷ்டங்களான நூல்களை மூலமாகக்கொண்டவை யாகையாலே ப்ரமாணாபாஸங்களாயிருக்குமத்தனை போக்கி நிரவத்ய ப்ரமாணங்களாகமாட்டா என்றபடி. [ஏஷாது தோஷரஹிதா மஹிதா புராணீ] ப்ரத்யக்ஷம் அநுமாநம் சப்தம் என்னும் மூன்று ப்ரமாணங்களுள் சப்தம், இரண்டுவகைப்பட்டது ; லௌகிக சப்தமென்றும் வைதிக சப்தமென்றும். லௌகிக சப்த

மென்றால் புதிது புதிதாய் நம்போல்வாரால் சொல்லப்படும் சப்தம். வைதிக சப்தங்களே வேதமெனப்படும். வேதமாவது — எப்போதும் ஒரேவிதமாய் ஒன்றோடொன்று பிணைக்கப் பட்டு உச்சரிக்கப்படும் சப்தங்களின் கூட்டம். இந்த வேதமானது ஸ்ருஷ்டியின் தொடக் கத்தில் பரம புருஷனால், நான்முகனுக்கு உபதேசிக்கப் பட்டு அவனால் தன்னுடைய சிஷ்யர்க ளுக்கு உபதேசிக்கப்பட்டு சிஷ்ய ப்ரசிஷ்ய பரம்பரையாய் நமக்குக் கிடைத்திருக்கிறது. இது ப்ரத்யக்ஷத்தாலும் அநுமாநத்தாலும் அறிய முடியாத பொருள்களை அறிவிப்பதனால் வேத மென்று காரணப்பெயர் பெற்றது. * प्रत्यक्षेणानुमित्या वा यस्तूपायो न बुध्यते । यत्तं विदन्ति वेदेन तस्माद्वेदस्य वेदता—ப்ரத்யக்ஷேணாநுமித்யா வா யஸ்தூபாயோ ந புத்யதே, யத்தம் விதந்தி வேதேந தஸ்மாத்,வேதஸ்ய வேததா* என்கிற ச்லோகம் இங்குக் காணத்தக்கது. வேத மென்னுமிது ஏட்டில் எழுதப்படாமல் ச்ரவண பரம்பரையாகவே அதிகரிக்கப்பட்டு வரு வதால் ச்ருதி யென்றும் பெயர்பெற்றது.

வேதம் அபௌருஷேய மெனப்படும். புருஷனால் செய்யப்படாதது எதுவோ அதுவே அபௌருஷேயமென்பது. கழுத்து நாவை பல் உதடு முதலிய முகவுறுப்புகளி னின்று வெளிப்படுகின்ற ஒலியே சப்தமாதலால், அப்படிப்பட்ட சப்தங்களின் கூட்டமே வேதமாகையினால் ஒவ்வொரு சப்தமும் புருஷனால் செய்யப்பட்டே வெளியாகின்றமை யால் வேதமாகிற சப்த ராசிகளும் புருஷனால் உண்டாக்கப்பட்டுப் பௌருஷேயமாகத்தானே யிருக்கவேண்டும்; அப்படியிருக்க, வேதத்தை அபௌருஷேயமென்று எங்ஙனே சொல்ல லாம்? என்று ஒரு சங்கை உதிக்கக்கூடும். இதற்கு ஸமாதானம் கூறுவதற்கு முன்னே பௌருஷேயமும் அபௌருஷேயமுமான இரண்டு த்ருஷ்டாந்தங்களை யெடுத்துக்கொண்டு விமர்சிப்போம்; காளிதாஸர் செய்த * ஸ ராஜ்யம் குருணா தத்தம் * என்னும் ச்லோகத்தை யெடுத்துக்கொள்வோம்; அதுபோல் * சம் நோ மித்ரச் சம் வருண: * என்கிற வேத வாக்கி யத்தையு மெடுத்துக்கொள்வோம். இவ்விரண்டுக்குமுள்ள வாசியையும் ஆராய்வோம். "ஸ ராஜ்யம் குருணா தத்தம்" என்கிற காளிதாஸ ச்லோகத்தில் ஸ:, ராஜ்யம், குருணா, தத்தம் என்னும் பதங்கள் வரிசையாகத் தொடுக்கப்பட்டிருக்கின்றன; இப்பதங்கள் காளிதாஸரால் புதிதாக வுண்டாக்கப்பட்டவையல்ல என்பது அனைவரு மறிந்ததே. ஆனால் காளிதாஸர் செய்த தென்னவென்னில், தமக்கு விவக்ஷிதமான பொருளைத் தெரிவிப்பதற்கு வேண்டியபடி பதங்களை முன்பின்னாகச் சேர்த்துப் பிணைத்ததே காளிதாஸர் செய்த காரியம். இதைக் கொண்டே நாம் ரகுவம்ச காவியம் காளிதாஸர் செய்தது, மற்றொன்று மற்றொருவர் செய் தது என்கிறோம். இதுபோல் * சம் நோ மித்ரச் சம் வருண: * என்னும் வேத வாக்கியத்தி லுள்ள 'சம் ந: மித்ர: சம் வருண:' என்கிற பதங்களை இப்பொழுது காணப்படும் வரிசைக் கிரமமாகத் தொடுத்தவர் யார்? என்பதை அநாதிகாலமாக ஒருவரு மறிந்ததில்லை. வேதத் தைச் செய்தவர் யாரேனுமொருவ ரிருப்பாரானால், பாரதம் ராமாயணம் முதலான க்ரந்தங் களைச் செய்த வியாஸர் வால்மீகி முதலானோருடைய பெயர்களை நாம் பரம்பரையாகச் சொல்லி வருவதுபோல வேத கர்த்தாவின் பெயரையும் அவிச்சிந்நபரம்பரையாகச் சொல்லிவந்திருப் போம். வேத கர்த்தாவின் பெயரை நாம் நம் முன்னோர்களின் எந்த க்ரந்தத்திலும் காண கின்றிலோம். கர்ண பரம்பரையாகவும் கேட்கின்றிலோம். உண்மையில் வேத கர்த்தா ஒருவரு மில்லையாதலாலேயே அவருடைய பெயர் ஓரிடத்திலும் ஒருவர் வாக்கிலும் வெளிவரவில்லை யென்று நிச்சயிக்கத்தக்கது. இதுவேயாயிற்று காளிதாஸாதி க்ரந்தங்களுக்கும் வேதத்திற்கு முள்ள வைலக்ஷண்யம்.

ஆக இப்படி வேதத்திற்கு அபௌருஷேயத்வம் ஸித்தித்தபோதே அதற்கு நித்யத் வம் நிர்தோஷத்வம் முதலிய நலங்களும் ஸித்திக்கும். ஆகவே வேதம் அபௌருஷேயமாய் நித்யமாய் நிர்தோஷமாய் அவிச்சிந்ந பரம்பராப்ராப்தமாயிருப்பதனாலே ஆரியர்களான நமக்குப் பரம ப்ரமாணமாயுள்ளது என்றதாயிற்று இந்த ச்லோகத்தினால். .... ... (11)

अन्तर्हितो निधिरसि त्वमशेषपुंसां लभ्योऽसि पुण्यपुरुषैरितरैर्दुरापः ।
तत्र त्रयीं सुकृतिनः कृतिनोऽधिजग्मुर्बाह्येषु बाह्यचरितैरितरैर्निपेते ॥१२॥

அந்தர்ஹிதோ நிதிரஸி த்வமசேஷபும்ஸாம்
லப்யோஸி புண்யபுருஷைரிதரைர் துராப:,
தத்ர த்ரயீம் ஸுக்ருதிந: க்ருதிநோதிஜக்மு:
பாஹ்யேஷு பாஹ்யசரிதைரிதரைர் நிபேதே. 12

த்வம் அசேஷபும்ஸாம் அந்தர்ஹித: நிதி: அஸி, புண்யபுருஷை: லப்ய: இதரை: துராப: அஸி; தத்ர ஸுக்ருதி: க்ருதி: த்ரயீம் அதிஜக்மு:, இதரை: பாஹ்ய சரிதை: பாஹ்யேஷு நிபேதே.

(எம்பெருமானே!,) தேவரீர் அனைவர்க்கும் * வைத்த மாநிதியாயிரா நின்றீர்; பாக்யசாலிகளாலே அடையத் தகுந்தவராகவும் மற்றையோர்களால் அடையக் கூடாதவராகவும் இரா நின்றீர்; தேவரீரைப் பெறுவதான அவ்விஷயத்தில் பாக்யசாலிகளான வித்வான்கள் வேதத்தைக் கைப்பற்றினார்கள்; மற்ற அவைதிகர்களாலே வேத பாஹ்யாகமங்களில் விழுகையானபடி.

* * * “ வேதைச் ச ஸர்வைரஹமேவ வேத்ய: ” என்றும் * வேதாந்த விழுப்பொரு
ளின் மேலிருந்த விளக்கு ” என்றும் சொல்லுகிறபடியே ஸகலவேத வேதாந்தங்களுக்கும்
ப்ரதான ப்ரதிபாத்யபூதனான எம்பெருமானை உள்ளபடி புணரப்பெறுவது சில பாக்யசாலி
களுக்கே யல்லது மற்றையோர்க்குக் கூடாதென்கிறார் இந்த ச்லோகத்தினால். [த்வம் அந்தர்
ஹித: நிதி: அஸி] * இராமடமூட்டுவாரைப்போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து
நோக்கிக்கொண்டுபோரும் * (முமுக்ஷுப்படி) இத்யாதிப்படியே அனைவர்க்கும் உள்
ளுறையும் நிதியாயிறே எம்பெருமானிருப்பது. * வைத்தமாநிதியாம் மதுசூதனையே. * நிதி
ரவ்யய: * என்று ஸ்ரீஸஹஸ்ர நாமாத்யாயத்திலும் சொல்லிற்று. [புண்ய புருஷை: லப்
யோஸி] நிலத்தினுள்ளே நிதிகிடந்தாலும் பாக்யசாலிகளுக்கல்லது மற்றையோர்க்கு அது
கிடையாதிறே. * அனந்தன்மேல் கிடந்த எம்புண்ணியனைபறியும்போதைக்கும் ஒரு
புண்ணியம் வேண்டுமே. * தேநாவலோக்ய க்ருதிந: பரிபுஞ்ஜதே தம் * என்றிறே இவருடைய
திருக்குமாரரும் திருவாய்மலர்ந்தது. வேதாந்தவாசிரியரும் வரதராஜ பஞ்சாசத்திலே
* நித்யம் கரீச திமிராவில த்ருஷ்டயோபி ஸித்தாஞ்ஜநேந பவதைவ விபூஷிதாக்ஷா:, பச்
யந்த்யுபர்யுபரி ஸஞ்சரதாமத்ருச்யம் மாயாநிகூட மபாயமஹாநிதிம் த்வாம் * என்று பாக்கப்
பேசினர். [இதரை: துராப:] புண்ய புருஷர்களுக்கு லப்யராகா நின்றீரென்றபோதே
அபாக்யசாலிகளுக்கு அலப்ய ராகா நின்றீரென்னுமிடம் ஸித்தமாகா நிற்கச்செய்தேயும்
* பத்துடை யடியவர்க்கு எளியவன் * என்றுசொல்லி * பிறர்களுக்கரிய வித்தகன் * என்
றும் சொன்ன ஆழ்வாரைப் பின்சென்று * இதரை: துராப: * என்று முக்தகண்டமாக
வும் அருளிச்செய்கிறபடி.

வேதத்தை ப்ரமாணமாக இசைந்து நிற்கின்ற வைதிகோத்தமர்களே பாக்யசாலிக
ளென்றும், அங்ஙனன்றிக்கே பாஹ்ய சாஸ்த்ரங்களிலே மண்டிக்கிடக்கின்ற புல்லியர்களே
அபாக்யோபஹதர்களென்றும் உத்தரார்த்தத்திலே மூதலிக்கிறார். [தத்ர] தேவரீருடைய ஸ்வ
ரூப ரூபகுண விபூதிகள் முதலானவற்றை அறியவேண்டுமிடத்திலே யென்றபடி. [ஸுக்ருதிந:
க்ருதிந: த்ரயீம் அதிஜக்மு:] ஸகுண நிர்குண ச்ருதிகள் த்வைதாத்வைத ச்ருதிகள் முதலான
வற்றை ஒன்றையும் ஒதுக்காதே ஸகல ச்ருதி வாக்யங்களையும் ஸமன்விதார்த்தமாக வுப
பாதிக்கவல்ல ஸ்ரீவைஷ்ணவ சிகாமணிகளேயாயிற்று இங்கு * ஸுக்ருதிந: க்ருதிந: * என்கிறது.

[இதரை: பாஹ்யசரிதை: பாஹ்யவேஷா நிபேதே] சாஸ்த்ரங்களை அநுவர்த்தியாதே அதிவர்த்திக்கின்ற துஷ்ட சரித்திரர்களான மற்றையோர் ஜைநபௌத்தாதி பாஹ்யாகமங்களிலே விழுந்து நசித்தொழிந்தன ரென்கை. இது भावे प्रयोग மென்க; பாஹ்யசரிதா: இதரே பாஹ்யவேஷா நிபேது: என்றவாறு. ... ... .... (12)

चित्रं विधेर्विलसितं त्विदमाविरस्ति दुष्टात्मनामयमहो किल दुर्विपाकः ।
यत्केचिदत्रभवतीं श्रुतिमाश्रयन्तोऽप्यर्थे कुदृष्टिविनिविष्टधियो विनष्टाः ॥१३॥

சித்ரம் விதேர் விலஸிதம் த்விதமாவிரஸ்தி
துஷ்டாத்மநாமயமஹோ கில துர்விபாக:,
யத் கேசிதத்ரபவதீம் ச்ருதிமாச்ரயந்தோऽபி
அர்த்தே குத்ருஷ்டிவிநிவிஷ்டதியோ விநஷ்டா:. 13

விதே: இதம் விலஸிதம்து சித்ரம் ஆவிரஸ்தி; துஷ்டாத்மநாம் அயம் துர்விபாக: அஹோகில; யத்கேசித் அத்ர பவதீம் ச்ருதிம் ஆச்ரயந்த: அபி அர்த்தே குத்ருஷ்டி விநிவிஷ்டதிய: விநஷ்டா:

தைவத்தினுடைய இந்த விலாஸமோவென்றால் ஆச்சர்யகாமாக விளங்குகின்றது; அநேக ஜன்மாநுவ்ருத்த கல்மஷதூஷிதர்களான துஷ்டர்களுடைய இந்த துஷ்டபரிபாகமானது ஆச்சரியம். ஏனென்றால், சிலர் [ப்ரச்சந்நபௌத்தர்] பூஜ்யமான வேதத்தை ப்ரமாணமாக அங்கீகரித்திருந்தும் பொருள் கொள்ளும் விஷயத்தில் குத்ஸிதமான நிர்வாஹங்களிலே ஊன்றின புத்தியையுடையவர்களாய் அழிந்தொழிந்தார்களிறே.

* * * ஸ்ரீவைஷ்ணவர்களல்லாதாரும் வேதத்தையேயன்றோ ப்ரமாணங்களுள் தலையானதாக அங்கீகரித்திருப்பது. * தத்ர த்ரயீம் ஸாக்ருதிக: க்ருதிநோ நிஜக்மு: * என்று கீழ்ச்லோகத்திலே யருளிச்செய்ததற்கு அவர்களும் லக்ஷ்யபூதர்களாகக் கடவரோ? என்ன, அவர்கள் வேதங்களின் அக்ஷராசிமாத்ரத்திலே ப்ராமாண்ய மிசைந்தார்களத்தனைபோக்கி அர்த்தத்திலே குத்ருஷ்டிகளாகவன்றோ இராநின்றார்களென்கிறார். [இதம் து விதேர் விலஸிதம் சித்ரம் ஆவிரஸ்தி] குத்ருஷ்டிகளின்படியைத் தம்முள்ளே தாம் அநுஸந்தித்து, அந்தோ! இது என்ன தைவதுர்விலஸிதமென்று இரங்குகிறார். இங்ஙனே ஸாமான்யமாகச் சொன்னதைச் சிறிது விசேஷித்துப் பேசுகிறார் [துஷ்டாத்மநாம் அயம் அஹோ கில துர்விபாக:] என்று. அநேக ஜந்மாந்தரோபார்ஜித கல்மஷ பரிபூர்ணர்களான துராத்மாக்களினுடைய துரத்ருஷ்டபரிபாகம் ஆச்சர்யமாயிருக்கின்றதே!; வாய்கொண்டு பேசவொண்ணாதென்றபடி.

அப்படிப்பட்ட துரத்ருஷ்ட சாலிகள் இன்னாரென்கிறது உத்தரார்த்தத்தில் [யத் கேசித் இத்யாதி.] நாமநிர்தேசத்திற்கு அநர்ஹர்களான அவ்யபதேச்யர்களாகையாலே கேசித் என்கிறது. ப்ரச்சந்ந பௌத்தர்களென்றபடி. * அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே * என்றவிடத்தில் அடியறுக்கப்பட்டவர்களாகச் சொல்லப்பட்ட விமதர்களையே இங்கு கேசித் என்கிறது. [அத்ரபவதீம் ச்ருதிம் ஆச்ரயந்தோऽபி] பரம பூஜ்யமான வேதத்தை ப்ரமாணமென்று இசைந்திருந்தார்களாகிலும். [அர்த்தே குத்ருஷ்டி விநிவிஷ்டதியோ விநஷ்டா:] பதார்த்த வாக்யார்த்த தாத்பர்யார்த்த வர்ணனங்களிலே அபந்யாயங்களை யவலம்பித்து ஆக்ராஹக்ரஹிளர்களாய் நசித்துப்போனார்கள். * ந து மாம் அபிஜாநந்தி தத்வேநாதச் ச்யவந்தி தே * (கீதை 9-24.) என்கிறபடியே அஸத்கல்பராயொழிந்தார்களென்கை.

வேதத்தை ப்ரமாணமாக இசைந்துவைத்தே அதில் அபார்த்தங்களைப் பண்ணி நசித்
துப் போம்படியாக எம்பெருமான் சில வ்யக்திகளை ஸ்ருஷ்டித்து வைப்பதே !, இதுவுமொரு
லீலாவிலாஸமோ ! என்று உள்ளந் தளர்ந்துரைத்தபடி.

குத்ருஷ்டி சப்தம் வ்யக்தி பரமாம்போது 'குத்ஸிதா த்ருஷ்டிः யேஷாம் தே—குத்
ருஷ்டயः' என்று பஹுவ்ரீஹியாகக்கடவது. இந்த ச்லோகந்தன்னிலுள்ள குத்ருஷ்டி
சப்தம் வ்யக்திபரமல்லாமையாலே "குத்ஸிதா ச ஸா த்ருஷ்டிச் ச—குத்ருஷ்டிः" என்று
கர்மதாரயமாகக் கடவது, கோணலான புத்தியென்றபடி. ... .... (13)

बाह्याः कुदृष्टय इति द्वितयेऽप्यपारं घोरं तमस्समुपयान्ति न हीक्षसे तान् ।
जग्धस्य काननमृगैर्मृगतृष्णिकेप्सोः कासारसत्वनिहतस्य च को विशेषः ॥१४॥

**பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேப்யபாரம்**
**கோரம் தமஸ் ஸமுபயாந்தி ந ஹீக்ஷஸே தாந்,**
**ஜக்தஸ்ய காநநம்ருகைர் ம்ருகத்ருஷ்ணிகேப்ஸோ:** **14**
**காஸாரஸத்வநிஹதஸ்ய ச கோ விசேஷ:.**

பாஹ்யாः குத்ருஷ்டயः இதி த்விதயேபி
அபாரம் கோரம் தமः ஸமுபயாந்தி;
தாந் ந ஈக்ஷஸே ஹி; ம்ருகத்ருஷ்ணிகா
ஈப்ஸோः காநநம்ருகைः ஜக்தஸ்ய
காஸாரஸத்வநிஹதஸ்ய ச விசேஷः கः

(எம்பெருமானே !,) வேதபாஹ்யர்களான ஜைந
பௌத்தாதிகளென்ன சாங்கராதி குத்ருஷ்டிக
ளென்ன ஆகிய இவ்விருவகுப்பினரும் கரையில்லாத
பயங்கரமான தமஸ்ஸை அடைகின்றார்கள். (ஏனென்
றால்) அவர்களைத் தேவரீர் கடாக்ஷிப்பதில்லையன்றோ.
கானலைப்பார்த்துத் தண்ணீரென்றுமயங்கி ஓடிச்
சென்றதும் புலிமுதலிய காட்டு மிருகங்களினால்
பக்ஷிக்கப்பட்டதுமான ம்ருகத்துக்கும், (மெய்யான
தண்ணீரிலேயேயிழிந்து) முதலை முதலான தடாக
ஜந்துக்களால் விழுங்கப் பட்டொழிந்த ம்ருகத்துக்
கும் என்னவாசி? (ஒருவாசியுமில்லை ; அதுபோல
வேயிதுவும்.)

வேதத்தை அடியோடே ப்ரமாணமாக அங்கீகரியாதே தூஷிக்கின்ற பாஹ்யர்கள்
தாம் நசித்துப்போவது யுக்தம் ; அப்படியல்லாமல் வேதத்தைப் பரமப்ரமாணமாக அங்கீ
கரித்து வைதிகர்களென்று பேர்பெற்றிருப்பவர்களும் நசித்துப்போனார்களென்னலாமோ ?
இருவர்க்கும் வெடுவாசியுண்டே—என்று சிலர் சங்கிப்பதாகக் கொண்டு, வேத ப்ராமாண்
யத்தை அங்கீகரிப்பதனாலும் அதை அங்கீகரியாமையினாலும் ஒரு வைலக்ஷண்யமில்லை ;
* बिभेत्यल्पश्रुताद्वेदो मामयं प्रतरिष्यति—பிபேதி அல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி *
என்கிறபடியே வேதத்தை விப்ரலம்பம் பண்ணிக்கெடுக்காதே யதாவஸ்திதமான அர்த்தத்தில்
ஊன்றியிருக்குமத்தனையே வேண்டுவது ; அபார்த்தம் சொல்லி அதைக் கெடுப்பதோடு
மூலமே அப்ராமாணமென்பதோடு வாசியில்லாமையாலே அத்யந்தம் அப்ராமாணமென்கிற
பாஹ்யர்களும், ப்ராமாண்யத்துக்கு இசைந்துவைத்தே அபார்த்தங்களைப் பேசுகிற குத்ருஷ்டி
களும் தம்மில் வாசியற்றவர்களே யென்கிறாரிதில். ஹே பகவந் ! என்று ஸம்போதநம்
அத்யாஹாரம் செய்து கொள்வது.

[பாஹ்யாः குத்ருஷ்டய இதி த்விதயேபி அபாரம் கோரம் தமஸ் ஸமுபயாந்தி]
வேதத்தை ப்ரமாணமென்றிசையாத மாத்யமிக வைபாஷிக ஸௌத்ராந்திகர்களான பாஹ்யா
களும், "அநாதி பாபவாஸநா தூஷிதாசேஷசேமுஷீகர்" என்று ஸ்ரீபாஷ்யகாரரால் பேசப்
பட்டவர்களாய் வேதைகதேசத்தை வ்யாவஹாரிக ப்ரமாணமாக ஸ்வீகரித்துங்கூட அஸ்மீசீந

ந்யாயவாதிகளாயிருக்கின்ற மாயாவாதி ப்ராக்ருதிகளும் ஆகிய இருவகுப்பினரும் என்றேனும் கரைகாண வொண்ணாததாய் அதிக்ரூரமான தமஸ்ஸிலேயே கிடந்துழல்வர்கள். [தாந் ந ஹி ஈக்ஷஸே] இதற்கு இரண்டுபடியாகப் பொருள் கொள்ளத்தகும். இறந்த காலத்தில் கடாக்ஷமில்லாமையைச் சொல்லவுமாம், எதிர்காலத்தில் கடாக்ஷமில்லாமையைச் சொல்லவுமாம். அவதென்னென்னில்; * ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக: * என்கிறபடியே ஸத்வோத்ரேக ஹேதுவான ஜாயமாநகால கடாக்ஷத்தை அவர்கள் திறத்திலே தேவரீர் செய்தருளவில்லை யென்பதாக ஒரு பொருள். அப்படிப்பட்டவர்களை தேவரீர் இனி யொருகாலும் கண்ணெடுத்துப் பார்க்கமாட்டீர் என்பது மற்றொரு பொருள். ஈக்ஷஸே என்கிற வர்த்தமாநக்ரியைக்கு இறந்தகாலப்பொருளும் எதிர்காலப்பொருளும் கூடுமோவென்னில்; * वर्तमानसामीप्ये वर्तमानवद्वा — வர்த்தமாநஸாமீப்யே வர்த்தமாநவத் வா * என்று பாணிநியின் அநுசாஸனமுண்டே.

பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் துல்யயோக க்ஷேமர்களென்பதை ஒரு த்ருஷ்டாந்த முகத்தாலே மூதலிக்கிறார் உத்தரார்த்தத்தில் [ஜக்தஸ்ய இத்யாதி.] விடாய் மிகுத்துத் தண்ணீரைத் தேடியோட இரண்டு ம்ருகங்கள் புறப்பட்டன; அவற்றில் ஒரு மிருகமானது தடாகத்தில் புகாதே அாத்ப்ராமகமான ம்ருகத்ருஷ்ணிகையை [கானலை]ப் பார்த்துப் பாரீய ப்ரவாஹமாக மயங்கி ஓடிக்கொண்டேயிருக்கையில் வழியிடையே நேர்பட்ட புலி சிறுத்தை முதலிய கொடிய மிருகங்களினால் அடித்துத் தின்னப்பட்டதாயொழிந்தது; இது இப்படியாக, மற்றொரு மிருகமானது விடாய் தீரப் பெறுவதற்கு உண்மையாகத் தண்ணீருள்ள தடாகத்திலேயே சென்று சேர்ந்தது; ஆனால் அடைவே இழிய வேண்டிய துறையிலே யிழியாமல் துறைதப்பியிழியவே, அங்குக் கிடந்தவொரு முதலையினாலே கதுவப்பட்டு மாண்டொழிந்தது. ஆக இரண்டு மிருகங்களும் தடாகப்ரவேச அப்ரவேசங்களாலே சிறிது வைலக்ஷண்யம் பெற்றிருந்தாலும் விநாசத்திலே துல்யபல மத்தனையிறே. அது போலவே, குத்ருஷ்டிகளும் பாஹ்யர்களும் வேத ப்ராமாண்ய அங்கீகார அநங்கீகாரங்களாலே சிறிது வாசி பெற்றிருந்தாலும் விநாசத்திலே வாசியற்றவர்களே யென்று அறுதியிடக் குறையில்லையிறே.

ம்ருகத்ருஷ்ணிகையிலே மயங்கி யொழிந்த ம்ருகத்தின் ஸ்தானத்திலே வேத பாஹ்யர்கள் கொள்ளப்பட்டார்கள்; தடாகத்திலே யிழிந்து துறைதப்பி யொழிந்த மிருகத்தின் ஸ்தானத்திலே குத்ருஷ்டிகள் கொள்ளப்பட்டார்கள்.

கோரம் தம: என்றது * மாய வன் சேற்றள்ளல் பொய்ந்நிலமாகிய ஸம்ஸார பூமியைச் சொன்னபடி. * अधोऽधः पापात्मा शरणद ! निमज्जामि तमसि — அதோத: பாபாத்மா சரணத! நிமஜ்ஜாமி தமஸி * என்று ஆளவந்தாரும் இதுதன்னிலே தமச்சப்த ப்ரயோகம் செய்தருளினார் காண்மின். .... ... .... (14)

न्यायस्मृतिप्रभृतिभिर्भवता निसृष्टैर्वेदोपबृंहणविधावुचितैरुपायैः ।
श्रुत्यर्थमर्थमिव भानुकरैर्विभेजुः त्वद्भक्तिभावितविकल्मषशेमुषीकाः ॥१५॥

ந்யாயஸ்ம்ருதிப்ரப்ருதிபிர் பவதா நிஸ்ருஷ்டை:
வேதோபப்ர்ம்ஹணவிதாவுசிதைருபாயை:,
ச்ருத்யர்த்தமர்த்தமிவ பாநுகரைர் விபேஜு:
த்வத்பக்திபாவித விகல்மஷ சேமுஷீகா: (15)

த்வத்பக்திபாவித விகல்மஷ சேமுஷீகா: வேதோபப்ர்ம்ஹணவிதௌ உசிதை: உபாயை: பவதா நிஸ்ருஷ்டை: ந்யாயஸ்ம்ருதி ப்ரப்ருதிபி:—பாநுகரை: அர்த்தமிவ ச்ருத்யர்த்தம் விபேஜு:

(எம்பெருமானே!) தேவரீரிடத்திலுண்டான பக்தியினாலே நிஷ்கல்மஷமான புத்தி யுண்டாகப் பெற்றவர்கள் வேதத்தின் பொருள்கொள்ளுந் திறத்தில் உசிதமான உபாயங்களாக தேவரீராலே அருளப்பட்ட தர்க்க மீமாம்ஸைகளென்ன, மந்வாதி ஸ்ம்ருதிகளென்ன இவை முதலானவற்றாலே—ஸூர்ய கிரணங்களாலே கடபடாதி பதார்த்தத்தைப் பகுத்தறிவதுபோல வேதார்த்தத்தைப் பகுத்தறிந்தார்கள்.

*** வேதப்பொருள்களை நிர்ணயிக்கும் விரகு அருளிச் செய்கிறவிதில், ச்ருத்யர்த்தம் என்று—வேதத்தில் பூர்வபாக ப்ரதிபாத்யமான கர்மத்தையும் உத்தரபாக ப்ரதிபாத்யமான ப்ரஹ்மத்தையும் சொல்லுகிறது. பூர்வோத்தர மீமாம்ஸைகளில் * அதாதோ தர்மஜிஜ்ஞாஸா என்றும் * அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா என்றுமிறே உபக்ரமித்தது. ஆகையாலே சுருதியின் இரண்டு பாகங்களுக்கும் ப்ரதிபாத்யம்—ஆராதநரூபமான கர்மமும் ஆராத்ய வஸ்துவான ப்ரஹ்மமுமாயிற்று. கர்மம் பகவதாராதன மென்னுமிடம் "स आत्मा, अङ्गान्यन्या देवता: * ஸ ஆத்மா; அங்காந்யந்யா தேவதா:" என்று அக்நீந்த்ராதி ஸகல தேவதைகளும் பகவச் சரீரபூதராக சாஸ்த்ரம் சொல்லுகையாலே ஸித்தம். இவ்வாகாரத்தை யறிந்து அக்நீந்த்ராதி தேவதாந்தர்யாமி ஸமாராதனமாக அநுஷ்டிக்குமவர்களிடத்தில் இதினுடைய பகவதாராதநத்வம் ஸுஸ்பஷ்டமாயிருக்கும். இவ்வாகார மறியாதார் அந்தந்த தேவதா மாத்ரங்களையுத்தேசித்துப் பண்ணும் கர்மமும் வஸ்துகத்யா பகவதாராதனமாய்த் தலைக்கட்டும். * யே யஜந்தி பித்ரூந் தேவாந் ப்ராஹ்மணாந் ஸஹுதாசநாந், ஸர்வ பூதாந்தராத்மாநம் விஷ்ணுமேவ யஜந்தி தே * என்னுகின்றதிறே. ஆகையாலே எல்லாப்படியாலும் கர்மத்துக்கு பகவதாராதநத்வம் ஸித்தம். இப்படி ஆராதநரூபமான கருமமும் ஆராத்ய வஸ்துவான ப்ரஹ்மமுமாகிற இரண்டையுமறியவே, த்யாஜ்யமும் உபாதேயமுமான ஸகலார்த்தங்களையுமறியலாயிருக்கையாலே வேதத்தின் இரண்டு பாகங்களுக்கும் ப்ரதிபாத்யம் கர்ம ப்ரஹ்மங்களென்கிறது.

எங்ஙனே யென்னில்; கர்மந்தான் புபுக்ஷுக்களுக்கு ஐச்வர்ய ஸாதநமாய், முமுக்ஷுக்களில் பக்தி நிஷ்டர்க்கு உபாஸநாங்கமாய் ப்ரபந்நர்க்கு கைங்கர்ய ரூபமாயிருக்கும். இப்படியிருந்துள்ள கர்மத்தின் வேஷத்தை உள்ளபடி யறியவே அநந்த ஸ்திரபல ப்ரஹ்ம ப்ராப்திகாமரான ஸாதகர்க்கு இது உபாஸநாங்கமாய்க்கொண்டு உபாதேயம்; ஐச்வர்யார்த்திகளுக்கு உபாதேயமான ஆகாரத்தால் இவர்க்கு த்யாஜ்யம் என்றறியலாம். அநந்யஸாதநர்க்கு இதுகொண்டு ஸாதிக்கவேண்டுவதொன்றில்லாமையாலே கைங்கர்ய ரூபேண உபாதேயம்; உபாஸகர்க்கு உபாதேயமான ஆகாரத்தாலே இவர்களுக்கு த்யாஜ்யம் என்றறியலாம்.

ப்ரஹ்மத்தையறியும்போது தத்ஸ்வரூபரூபகுண விபூதிகளெல்லாம் அறியவேண்டுகையாலே விபூதிபூத சேதநா சேதநங்களின் ஸ்வரூபமறியலாம். அதில் ஜ்ஞாநைக லக்ஷணமான சேதந ஸ்வரூப வைலக்ஷண்யமடியாக வருகிறதாகையாலே கைவல்யத்தின் வேஷமுமறியலாம். ப்ரஹ்மத்தினுடைய சேஷித்வ ப்ராப்யத்வங்களையறியவே ததநுபவாதிகள் புருஷார்த்தமென்றறியலாம். ததுபாஸ்யத்வ சரண்யத்வங்களையறியவே தத்ப்ராப்தி ஸாதந விசேஷங்களையறியலாம். ப்ரஹ்மத்தினுடைய நிரதிசயபோக்யதையையும் அநந்ய ஸாத்யத்வத்தையும் தத்ப்ரகாரதயா பாதந்த்ரமான ஸ்வஸ்வரூபத்தையும் தர்சிக்கவே உபாயாந்தர உபேயாந்தரங்களினுடைய த்யாஜ்யதையை ஸுஸ்பஷ்டமாக அறியலாம். ஆக இப்படியிருக்கையாலே வேதத்தினுடைய இரண்டு பாகங்களுக்கும் ப்ரதிபாத்யம்—ஆராதந ஸ்வரூபமான கர்மமும் ஆராத்யவஸ்துவான ப்ரஹ்மமும் என்னக் குறையில்லை. ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே பட்டர் * त्वदर्चाविधिमुपरि परिक्षीयते पूर्वभाग: - ऊर्ध्वो भागस्त्वदीहागुणवि-

भवपरिज्ञापनैस्त्वत्पदाप्तौ— த்வதர்ச்சாவிதிமுபரி பரிக்ஷீயதே பூர்வபாகஃ; ஊர்த்வோ பாகஸ் த்வதீஹா குணவிபவபரிஜ்ஞாபநைஸ் த்வத்பதாப்தௌ * என்றிறே யருளிச் செய்தது.

இப்படி பூர்வோத்தரபாகப்ரதிபாத்யங்களான இவ்வர்த்தங்களை விபஜிக்கையாவது பகுத்தறிவது. கர்மத்தினுடைய ஸ்வரூபம் அங்கம் பலன்முதலானவற்றையும் ப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதி முதலானவற்றையும் ஸம்சயவிபர்யய மில்லாமல் நிர்ணயிக்கையாம். இது மஹாமதிகளான மஹர்ஷிகளுக்கொழிய மற்றையோர்க்குச் செய்யப்போகாமையால் உபப்ர்ம்ஹணங்கள் கொண்டே நிர்ணயிக்கவேணும்; அப்படிப்பட்ட நிர்ணயஸாதனங்கள் ந்யாயஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகள் என்னுமிடத்தை இந்த ச்லோகத்தில் அருளிச்செய்கிறார்.

[பவதா நிஸ்ருஷ்டை:] வ்யாஸர்மநு முதலிய மஹர்ஷிகளை அநுப்ரவேசித்து ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களை பகவான்தானே வெளியிட்டருளினனாகையாலே அவற்றை பகவானே கொடுத்தருளினதாகச் சொல்லக் குறையில்லை. [வேதோபப்ரும்ஹணவிதௌ உசிதை: உபாயை:] * இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத், பிபேதி அல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி * என்றும், * வேதோபப்ர்ம்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு: * என்றும் சொல்லுகிறபடியே ஸ்ரீராமாயண மஹாபாரதாதிகளாலும் ஸ்ரீவிஷ்ணு புராணாதிகளாலும் மந்வாதி ஸ்ம்ருதிகளாலும் வேதோபப்ரம்ஹணமேயிறே செய்யப்படுவது.

[ந்யாயஸ்ம்ருதிப்ரப்ருதிபி:] ந்யாயாநுக்ருஹீத ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களாலே யென்றபடி. இங்கே ந்யாய சப்தத்தினால் தர்க்க மீமாம்ஸைகளிரண்டும் விவக்ஷிதம். ஸமீசீநதர்க்கமும் பூர்வோத்தர மீமாம்ஸாந்யாயங்களும் வேதோபப்ர்ம்ஹணத்திற்கு அநுகூலங்களாயிருக்கும். * ஆர்ஷம் தர்மோபதேசஞ் ச வேதசாஸ்த்ராவிரோதிநா, யஸ் தர்க்கேணாநுஸந்தத்தே ஸ தர்மம் வேத நேதர: * என்றும் * வேதசாஸ்த்ரரதாரூடா: ந்யாயகட்கதரா த்விஜா:, க்ரீடார்த்தமபி யத் ப்ரூயுஸ் ஸதர்ம: பரமோ மத:* என்றும் சொல்லக்கடவதிறே.

[ஸ்ம்ருதிப்ரப்ருதிபி:] வேதமானது ஸ்வப்ரதிபாத்யார்த்த விசேஷத்தாலே இரண்டு பாகமாகப் பிரிவுண்டதுபோல, உபப்ரும்ஹணங்களும் ப்ரதிபாத்ய விசேஷத்தாலே இதிஹாஸ புராணங்களென்றும் ஸ்ம்ருதி [தர்மசாஸ்த்ரங்]களென்றும் பிரிவுண்டன. ஸ்ம்ருதிகள் வேதத்தின் பூர்வபாகமாகிய கர்மகாண்டத்திற்கு உபப்ர்ம்ஹணமாகவும் இதிஹாஸ புராணங்கள் உத்தரபாகமாகிய ப்ரஹ்மகாண்டத்திற்கு உபப்ர்ம்ஹணமாகவும் அமைந்தன. அவ்வோ உபப்ர்ம்ஹணங்களைக்கொண்டே அவ்வோ பாகங்களின் பொருளை நிர்ணயிக்க வேண்டும். ஆசாரகாண்டம் வ்யவஹாரகாண்டம் ப்ராயச்சித்தகாண்டம் என்றிப்படி அமைந்துள்ள தர்ம சாஸ்த்ரங்களாலே கர்மபரமான பூர்வ பாகத்தின் அர்த்தநிச்சயம் பண்ணக்கடவது. எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிசேஷ்டிதங்களுக்கு ப்ரதிபாதகங்களான இதிஹாஸ புராணங்களாகிற மற்றையிரண்டாலும் ப்ரஹ்மப்ரதிபாதகமான உத்தர பாகத்தின் அர்த்தநிர்ணயம் பண்ணக்கடவது. ஸ்ம்ருதிகளிலே பரப்ரஹ்மப்ரதிபாதனமும் இதிஹாஸ புராணங்களிலே கர்மப்ரதிபாதனமும் உண்டாயிருந்ததேயாகிலும், ஸ்ம்ருதிகளிலுள்ள ப்ரஹ்ம ப்ரதிபாதனமானது கருமங்களினுடைய ததாராதநரூபத்வ ஜ்ஞாபநார்த்தமாகவும், இதிஹாஸ புராணங்களிலுள்ள கர்மப்ரதிபாதனமானது கர்மங்களினுடைய ப்ரஹ்மோபாஸநாங்கத்வ ஜ்ஞாபநார்த்தமாகவும் சேர்ந்ததாக நிர்வஹிப்பர்கள். * ப்ராயேண பூர்வபாகார்த்தபூரணம் தர்மசாஸ்த்ரத:, இதிஹாஸபுராணாப்யாம் வேதாந்தார்த்த: ப்ரகாச்யதே. * என்றதிறே.

[பாநுகரை: அர்த்த மிவ] இங்குள்ள அர்த்த சப்தம் கடபடாதிகளாகிற பதார்த்தங்களைச் சொல்லுமது. பூதலத்திலே கடபடாதி பதார்த்தங்கள் கிடந்தால், ஸூர்யப்ரபைகளைக்கொளி முதலானவற்றின் உதவிகொண்டே அறியவேண்டுகிறாப்போலே உபப்ரும்ஹணங்களைக்கொண்டே வேதார்த்தம் அறியவடுக்கும் என்றதாயிற்று. [த்வத்பக்திபாவிதவிகல்மஷ

சேமுஷீகா:] இவையித்தனையுமுண்டானாலும் நிஷ்கல்மஷபகவத் ப்க்தி யில்லாதார்க்கு ஒரு பொருளும் தெரியவரிதாகையாலே பக்தியே ப்ரதாநஸாமக்ரியென்று தலைக்கட்டினாயிற்று. இதனை விசேஷித்து நிரூபிக்கவே மேல்ச்லோகம் அவதரிக்கின்றது. ... .... (15).

ये तु त्वदङ्घ्रिसरसीरुहभक्तिहीनाः तेषाममीभिरपि नैव यथार्थबोधः ।

पित्तघ्नमञ्जनमनापुषि जातु नेत्रे नैव प्रभाभिरपि शङ्खसितत्वबुद्धिः ॥१६॥

*யே து த்வதங்க்ரி ஸரஸீருஹபக்திஹீநா:*
*தேஷாம் அமீபிரபி நைவ யதார்த்தபோத:,*
*பித்தக்நமஞ்ஜநமநாபுஷி ஜாது நேத்ரே*
*நைவ ப்ரபாபிரபி சங்கஸிதத்வபுத்தி:. 16.*

| | |
|---|---|
| **யே து த்வதங்க்ரி ஸரஸீருஹ பக்தி ஹீநா:, தேஷாம் அமீபிரபி யதார்த்த போத: நைவ; நேத்ரே பித்தக்நம் அஞ்ஜநம் அநாபுஷி ஸதி ப்ரபாபி: அபி சங்கஸிதத்வபுத்தி: ஜாது நைவ** | (எம்பெருமானே!) யாவர் சிலர் தேவரீருடைய திருவடித்தாமரைகளில் பக்தியில்லாதவர்களோ, அவர்களுக்குக் கீழ்ச்சொன்ன ந்யாயஸ்ம்ருதி முதலானவற்றாலும் உண்மையுணர்வு உண்டாகமாட்டாது; (காமாலைகொண்ட) கண்ணானது பித்தஹாரியானவோர் அஞ்ஜனத்தை அணிந்துகொள்ளாதவளவில் ஸூர்யகிரணம் முதலிய ப்ரகாச ஸாமக்ரிகள் பலவற்றாலும் சங்கு வெண்ணிறமுள்ளதென்கிற வுணர்ச்சி ஒருகாலும் உண்டாகவே மாட்டாதன்றோ. |

* * * சாஸ்த்ரார்த்தங்களை உள்ளபடி தெரிந்துகொள்வதற்கு பக்தியே ப்ரதாநஸாதனமென்னுமிடத்தைக் கீழ்ச்லோகத்தில் அந்வயமுகத்தாலே யருளிச்செய்து, இந்த ச்லோகத்தில் வ்யதிரேகமுகத்தாலே அதுதன்னை த்ருடப்படுத்தியருளுகிறார்.

[யே து த்வதங்க்ரிஸரஸீருஹபக்திஹீநா:] தேவரீருடைய திருவடித் தாமரைகளிலே பக்தியில்லாதவர்கள் யாவரோ, [தேஷாம் அமீபிரபி நைவ யதார்த்தபோத:] அவர்களுக்குக் கீழ்ச்சொன்ன ந்யாயஸ்ம்ருதி முதலான உபப்ரும்ஹணங்களாலும் உண்மைப் பொருளுணர்ச்சி உண்டாகவே மாட்டாது.

இதை த்ருஷ்டாந்தமுகேந ஸமர்த்திக்கிறார் [பித்தக்நம் இத்யாதி] சங்கு இயற்கையாக வெண்ணிறமாயிருக்கச்செய்தேயும் பித்தோபஹதத்ருஷ்டியாயுள்ளவன் அந்த பித்தோத்ரேகத்தினாலே அந்த சங்கைப் பசுமைநிறமுள்ளதாக ப்ரமிக்கக் காணுகின்றோம். வஸ்துக்ரஹணத்திற்கு ஸாதனமான ப்ரகாசம் மிக்கிருந்தாலும் பித்தத்தைப் போக்கடிக்கவல்லதான அஞ்ஜனவிசேஷத்தினால் கண்ணுக்கு ஸம்ஸ்கார முண்டாகாதவளவில் 'சங்கு வெண்ணிறமுடையது' என்கிற உண்மையுணர்ச்சி உண்டாகவேமாட்டாதிறே. அது போலவே ஹ்ருதயம் பக்தி ஸம்ஸ்க்ருதமாகாதவளவில் சாஸ்த்ரங்களின் பொருளுண்மை புலப்படாது என்றதாயிற்று.

மஹாபாரதத்தில் உத்யோகபருவத்தில் த்ருதராஷ்ட்ரனை நோக்கி ஸஞ்ஜயன் கூறுகின்றான்; * மாயாம் ந ஸேவே பத்ரம் தே ந வ்ருதா தர்மமாசரே, சுத்தபாவம் கதோ பக்த்யா சாஸ்த்ராத் வேத்மி ஜநார்தநம். * இதற்கு நம்பிள்ளை யிடுகாண்மின்; "ஸஞ்ஜயனை நோக்கி த்ருதராஷ்ட்ரன், 'நீயும் நானுமொக்க சாஸ்த்ரவாஸனைகள் பண்ணிப்போந்தோம், இங்ஙனேயிருக்கச்செய்தே எனக்கு உன்பக்கலிலே கேட்டறியவேண்டும்படி உனக்கு இவ்வர்த்தத்தில் வைசத்யமுண்டானபடி யெங்ஙனேயென்ன, எனக்கு வாசி கேளாய்; [மாயாம் ந ஸேவே] நான் வஞ்சனங்கள் செய்துபோரேன். ராஜாவானவனுக்கு ஒருதாழ்ச்சியும் தனக்கொரு உத்கர்ஷமும் சொல்லுகிறானாகையாலே (பத்ரம் தே) என்கிறான். [நவ்ருதா தர்மமாசரே] நான்

ஒருகாலும் ஸுலபம் (சலதர்ம)ங்கள் அநுஷ்டியேன். [சுத்தபாவம் கத:] நினைவும் சொலவும் செயலும் ஒருபடிப்பட்டிருப்பன். [பக்த்யா சாஸ்த்ராத் வேத்மி ஜநார்தநம்] வரியடைவே கற்று அவனை யறிந்தவனல்லேன்; பக்திஸஹக்ருத சாஸ்த்ரத்தாலே அவனையறிந்தவன் என்றானிறே." * என்னெஞ்சினால் நோக்கிக் காணீர் * என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின் சட்டிலே இது காணத்தக்கது:

இந்த ச்லோகத்தில், பித்தஸ்தாநே அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநாதிகளும், அஞ்ஜநஸ்தாநே பக்தியும், ப்ரபாஸ்தாநே ந்யாயஸ்ம்ருதி ப்ரப்ருதிகளும், சக்கலிதத்வஸ்தாநே சாஸ்த்ரார்த்தயாதாத்ம்யமும் கொள்ளக் கடவன.

மூன்றாவதுபாதத்தில் அநாபுஷி என்ற ஸ்தானத்தில் 'அநாப்நுஷி' என்று சிலர் பாடங்கூறுவர்; அது மறக்கத்தக்க தவறான பாடம். 'அநாபுஷி' என்றே ரூபம் ஸித்தமாகும்; இதில் நகாரம் புகுவதற்கு ப்ரஸக்திலேசமுமில்லை. ... ... (16)

तत्त्वार्थतत्परपरश्शतवेदवाक्यैः सामर्थ्यतः स्मृतिभिरप्यथ तादृशीभिः ।
त्वामेव तत्त्वपरसात्त्विकसत्पुराणैः देवज्ञधीभिरपि निश्चिनुमः परेशम् ॥१७॥

தத்வார்த்ததத்பரபரச்சதவேதவாக்யை:
ஸாமர்த்த்யத: ஸ்ம்ருதிபிரப்யத தாத்ருசீபி:,
த்வாமேவ தத்வபரஸாத்விகஸத்புராணை:
தேவஜ்ஞதீபிரபி நிச்சிநும: பரேசம். 17

தத்வார்த்த தத்பர பரச்சத வேத வாக்யை: அத தாத்ருசீபி: ஸ்ம்ருதிபி: அபி ஸாமர்த்த்யத: தத்வபரஸாத்விக ஸத்புராணை: தேவஜ்ஞதீபி: அபி த்வாம் ஏவ பரேசம் நிச்சிநும:

(எம்பெருமானே!) பரதத்வப்பொருளை வெளியிடுவதில் ஊற்றமுடைய அனேக வேதவாக்யங்களைக் கொண்டும் இன்னமும் அப்படிப்பட்ட [அதாவது—தத்வார்த்த தத்பரங்களான] ஸ்ம்ருதிகளைக்கொண்டும் (ஸ்பஷ்டார்த்தக வாக்யாநுகுணமாகவே அஸ்பஷ்டார்த்தக வாக்யங்களையும் நிர்வஹிக்கவேண்டுதலாகிற) ஸாமர்த்த்யத்தைக்கொண்டும் தத்வபரங்களும் ஸாத்விகங்களுமான புராணச்ரேஷ்டங்களைக்கொண்டும் ப்ரஹ்மவித்துக்களான பராங்குச பரகால யதிவராதிகளின் திருவுள்ளங்களைக்கொண்டும் தேவரீரையே ஸர்வேச்வரனாக நிச்சயிக்கின்றோம்.

* * * எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளையடைய வோதும்வேதங்களின் உண்மைப்பொருள்களையுணர்வதற்கு பக்தியே தலையான ஸாதனமென்றருளிச்செய்தார் கீழ்ச்லோகத்தில்; அப்படிப்பட்ட ஸாதகஸம்பந்நரானவர்கள் எம்பெருமானுடைய பாரம்யத்தை நிஷ்கர்ஷிக்கும்வழிகள் இன்னின்னவையென்று அருளிச்செய்கிறார் இதில்.

[தத்வார்த்த தத்பர பரச்சத வேதவாக்யை:] *नारायणपरं ब्रह्म तत्त्वं नारायणः परः । नारायणपरो ज्योतिरात्मा नारायणः परः * என்று பரதத்வமாக ஓதப்பட்ட ஸ்ரீமந்நாராயணன்பக்கலிலே தத்பரங்களாயும் அஸங்க்யாதங்களாயுமுள்ள வேதவாக்யங்களைக்கொண்டும். [தாத்ருசீபி: ஸ்ம்ருதிபிரபி] தத்வார்த்த தத்பர பரச்சத ஸ்ம்ருதிகளைக்கொண்டுமென்றபடி. [ஸாமர்த்த்யத:] ஸாமர்த்த்யமாவது—ப்ரதிபாதிதமான ஒருஅர்த்தத்துக்கு அவிருத்தமான அர்த்தாந்தரத்தைத் தெரிவிக்கவல்லமையாம். அதாவது, சிலவாக்யங்களில் அர்த்தம் ஸுஸ்பஷ்டமாயிருக்கும்; வேறுஞ்சிலவாக்யங்களில் அர்த்தம் அஸ்பஷ்டமாயிருக்கும். அங்கு, ஸ்பஷ்டார்த்தகங்களான வாக்யங்களைக்கொண்டு அஸ்பஷ்டார்த்தகங்களான வாக்யங்களின் அர்த்தத்தையும் ததநுகுணமாக நயிப்பித்துக்கொள்வதேயாம்.

[தத்வபர ஸாத்விக ஸத்புராணை:] தத்வபரங்களாயும் அதனுல் ஸாத்விகங்களாயுமிருக்கிற சிறந்த புராணங்களைக் கொண்டு. * यस्मिन्कल्पे तु यत्प्रोक्तं पुराणं ब्रह्मणा स्वयम् । तस्य तस्य तु माहात्म्यं तत्स्वरूपेण वर्ण्यते ॥ अग्नेश्शिवस्य माहात्म्यं तामसेषु प्रकीर्तितम् । संकीर्णेषु सरस्वत्याः पितॄणां च निगद्यते ॥ राजसेषु च कल्पेषु अधिकं ब्रह्मणो विदुः । सात्त्विकेष्वथ कल्पेषु माहात्म्यमधिकं हरेः ॥ तेष्वेव योगसंसिद्धा गमिष्यन्ति परां गतिम् = யஸ்மிந் கல்பே து யத் ப்ரோக்தம் புராணம் ப்ரஹ்மணு ஸ்வயம், தஸ்ய தஸ்ய து மாஹாத்ம்யம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே, அக்நேச் சிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்திதம், ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா:, பித்ருணாஞ் ச நிகத்யதே, ராஜஸேஷு ச கல்பேஷு அதிகம் ப்ரஹ்மணோ விது:, ஸாத்விகேஷ்வத கல்பேஷு மாஹாத்ம்யம் அதிகம் ஹரே:, தேஷ்வேவ யோகஸம்ஸித்தா கமிஷ்யந்தி பராம் கதிம் * இத்தியாதிப்ரமாணங்களை இங்கு அநுஸந்திப்பது.

[தேவஜ்ஞதீபிரபி] தேவஜ்ஞர்களாகிறார் பரதேவதாபாரமார்த்ய வித்துக்களான பராங்குசபரகாலயதிவராதிகள்; அவர்கள் வெளியிட்டருளின ஸ்ரீஸூக்திகள்கொண்டும் என்றபடி. [த்வாமேவ பரேசம் நிச்சிநும:] தேவரீரையேபரமபுருஷராக அறுதியிடாநின்றோம். ஆக, ச்ருதிகளென்ன ஸ்ம்ருதிகளென்ன ஸாத்விகபுராணங்களென்ன ஆழ்வாராசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளென்ன இவைகளைக்கொண்டு பரதத்வநிர்ணயம் பண்ணப்புகுந்தால் ஸ்ரீமந்நாராயணனுக்கே பாரம்யம் அசைக்கவொண்ணுதபடி தேறும் என்றதாயிற்று. .... .... .... (17)

अन्यत्र तु क्वचन केचिदिहेशशब्दाल्लोकप्रसिद्धिमुपगम्य तमीशमाहुः ।

तैश्च प्रसिद्धिविभवस्य समूलतायै ग्राह्या त्रयी त्वयि तु साऽच्युत ! सम्मुखीना ॥१८॥

அந்யத்ர து க்வசந கேசிதிஹேசசப்தாத்
லோகப்ரஸித்திமுபகம்ய தமீசமாஹு:,
தைச் ச ப்ரஸித்திவிபவஸ்ய ஸமூலதாயை
க்ராஹ்யா த்ரயீ த்வயி து ஸாச்யுத ஸம்முகீநா. 18

ஹே அச்யுத! இஹ கேசித் து க்வசந அந்யத்ர ஈசசப்தாத் லோகப்ரஸித்திம் உபகம்ய தம் ஈசம் ஆஹு:; ப்ரஸித்தி விபவஸ்ய ஸமூலதாயை தை: த்ரயீ க்ராஹ்யா; ஸா த்ரயீ து த்வயி ஸம்முகீநா.

அடியார்களை ஒருகாலும் நழுவவிடாத எம்பெருமானே!; இவ்வுலகில் சிலபேர்களோவென்றால் சில க்ரந்தங்களில் தேவதாந்தரங்கள் பக்கலில் ஈசசப்த ப்ரஸித்தி யிருப்பதைக்கொண்டு அந்த ருத்ரனை ஈசசப்தவாச்யனுகச் சொல்லுகிறார்கள். அந்த ப்ரஸித்தியானது ஸமூலம் என்பதற்காக [மூலாதாரம் காட்டுவதற்காக] அந்த வாதிகளாலே வேதமானது கொள்ளத்தகுந்தது. (வேதமூலப்ரமாணம் காட்டவேணுமென்கை.) அந்த வேதமோவென்றால், தேவரீர் பக்கலிலே அபிமுக்யமுடையது.

* * * ஈச சப்தத்திற்கு தேவதாந்தரத்தின் பக்கலில் ப்ரஸித்தி ப்ராசுர்யமிருப்பதால் அந்த சப்தத்திற்கு ஸ்ரீமந்நாராயண பரத்வம் ஸம்பவிக்கக்கூடுமோவென்று சங்கிப்பார்க்கு ஸமாதானமாகும்படி அருளிச்செய்வது இந்த ச்லோகம். [க்வசந கேசித்] சில நூல்களிலே சில ப்ராந்தர்கள் என்றபடி. [ஈசசப்தாத் அந்யத்ர லோகப்ரஸித்திமுபகம்ய] * शंभुरीशः पशुपतिः शिवश्शूली महेश्वरः—சம்புரீச: பசுபதி: சிவச் சூலீ மஹேச்வர: * என்கிற அமரகோசாதிகளைக் கொண்டும், 'ஈச்வரன்கோவில்' என்று உலகர்கள் ப்ரஸித்தமாக வழங்குகிற வழக்கச் சொற்களைக் கொண்டும் ருத்ரன்பக்கலில் தான் ஈசசப்த வாச்யத்வம் உள்ளதென்று கொள்ளுகின்றார்கள். லோகப்ரஸித்தி இங்ஙனேயிருந்தாலும் வேதப்ரஸித்தியே முக்கிய

மாக நோக்கத்தக்கதாதலாலும் வேதப்ரஸித்திமூலகமான லோகப்ரஸித்தியே ப்ரமாணமான தாலும் ஈச சப்தத்திற்கு வேதப்ரஸித்தி எங்ஙனே யிராநின்றதென்று ஆராய்ந்து பார்க்கவேண்டியது அவச்யமாகும். அப்படிப் பார்க்குமளவில் ; [ஹேஅச்யுத ஸா த்ரயீ து த்வயி ஸம்முகீநா ]* पतिं विश्वस्यात्मेश्वरं शाश्वतं शिवमच्युतम्-பதிம் விச்வஸ்யாத்மேச்வரம் சாச்வதம் சிவமச்யுதம் * என்று நாராயணாநுவாகம் முதலானவற்றிலுள்ள ச்ருதிவாக்யங்களனைவை தேவரீர்பக்கலிலேயே ஈச சப்தார்த்த பௌஷ்கல்யத்தை வ்யவஸ்தை பண்ணித்தருகின்றன வென்றபடி. இத்தால், ப்ரமாணங்களுள் தலையான வேதத்திலுள்ள ப்ரஸித்திக்கு மாறாக அர்த்த வ்யவஸ்தை பண்ணுவது அநுசிதமாகையாலே ஈச்வரத்வமோ ஈசத்வமோ எதுவும், ஸ்ரீமந்நாராயணனிடத்திலேயே முக்யவ்ருத்தியை யுடைத்தாயிருக்கு மென்றதாயிற்று. (18)

यः खल्वणोरणुतरो महतो महीयानात्मा जनस्य जनको जगतश्च योऽभूत् ।
वेदात्मकप्रणवकारणवर्णवाच्यं तं त्वां वयं तु परमेश्वरमामनामः ॥१९॥

**யः கல்வணோரணுதரோ மஹதோ மஹீயாந்**
**ஆத்மா ஜநஸ்ய ஜநகோ ஜகதச் ச யோபூத்,**
**வேதாத்மக ப்ரணவகாரண வர்ணவாச்யம்**
**தம் த்வாம் வயம் து பரமேச்வரமாமநாம:. 19**

யஃ கலு (பவாந்) அணோஃ அணுதரஃ மஹதஃ மஹீயாந் அபூத், யஃ பவாந் ஜகதஃ ஜநஸ்ய ஜநகஃ ஆத்மா அபூத் ; தம் வேதாத்மக ப்ரணவ காரணவர்ண வாச்யம் த்வாம் து வயம் பரமேச்வரம் ஆமநாம:

(எம்பெருமானே!) யாவரொரு தேவரீர் அணுவிற்காட்டிலும் மிகவும் அணுபூதராகவும் மஹத்தான வஸ்துவிற்காட்டிலும் மிகவும் மஹானாகவும் ஆனீரோ, யாவரொரு தேவரீர் அசேதநவர்க்கத்துக்கும் சேதநவர்க்கத்துக்கும் உத்பாதகராயும் ஆனீரோ, அப்படிப்பட்டவராய், வேதவடிவான ப்ரணவத்திற்குக் காரணபூதமான அகாரமாகிற அக்ஷரத்திற்குப் பொருளான தேவரீரையே அடியோங்கள் பரமேச்வரராக அநுஸந்திக்கின்றோம்.

* * *—இச்ச்லோகத்தில் * த்ரயீ த்வயி து ஸாச்யுத! ஸம்முகீநா* என்றருளிச் செய்தபடியை மூதலிக்கிறார் இச்ச்லோகத்தில். *அணோரணீயாந் மஹதோ மஹீயாந்* என்றும் * சுருக்குவாரையின்றியே சுருங்கினைச் சுருங்கியும் பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்து பெற்றியோய்* என்றும் சொல்லுகின்றபடியே அணுவிற்காட்டில் மிகவும் அணுபூதனையும் மஹத்திற்காட்டிலும் மிகவும் மஹானையும், சேதநாசேதநாத்மகமான ஸகல சராசரங்களுக்கும் உத்பாதகனையும் அந்தர்யாமியாயும், வேதஸ்வரூபியான ப்ரணவத்திற்கும் காரணமான அகாரத்துக்கு அர்த்தபூதனையுமுள்ள எம்பெருமானொருவனுக்கே பரமேச்வரத்வம் ச்ருதிஸித்த மென்றதாயிற்று.

* அணோரணீயாந் * இத்யாதிச்ருதியிலே " आत्मा गुहायां निहितोऽस्य जन्तोः । तमक्रतुं पश्यति वीतशोको धातुः प्रसादान्महिमानमीशम् " என்று ஈசசப்தநிர்தேசமிருப்பதாலும், இது தைத்திரீயநாராயணாநுவாகத்தி லுள்ளதாகையாலும், அந்த அநுவாகத்தினுடைய முடிவிலேயே * यो वेदादौ स्वरः प्रोक्तो वेदान्ते च प्रतिष्ठितः । तस्य प्रकृतिलीनस्य यः परस्स महेश्वरः— யோ வேதாதௌ ஸ்வரஃ ப்ரோக்தோ வேதாந்தே ச ப்ரதிஷ்டிதஃ தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய யஃ பரஸ் ஸ மஹேச்வரஃ* என்று அகாரவாச்யனையே மஹேச்வரனாக ஓதுகையாலும் ஈசத்வமோ ஈச்வரத்வமோ மஹேச்வரத்வமோ பரமேச்வரத்வமோ எல்லாம் ஸ்ரீமந்நாராயணனுக்கே ஏற்குமென்றதாயிற்று.

* तमीश्वराणां परमं महेश्वरम् * उतामृतत्वस्येशानः *पतिं विश्वस्यात्मेश्वरम् * ईशानो भूतभव्यस्य *

[* தமீச்வராணாம் பரமம் மஹேச்வரம் * உதாம்ருதத்வஸ்யேசாந: * பதிம் விச்வஸ்யாத்மேச்வரம் * * ஈசாநோ பூதபவ்யஸ்ய *] என்றிவை முதலான ச்ருதிகளும், * ईश्वरस्सर्वभूतानां हृद्देशेऽर्जुन ! तिष्ठति * अनादि निधनं विष्णुं सर्वलोकमहेश्वरम् * ईशानः प्राणदः प्राणः * * ஈச்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேர்ஜுந திஷ்டதி * அநாதிநிதநம் விஷ்ணும் ஸர்வலோகமஹேச்வரம் * ஈசாந: ப்ராணத: ப்ராண:] என்றிவைமுதலான ஸ்ம்ருதிகளும் இங்கு அநுஸந்தேயங்கள்.

இதில் பூர்வார்த்தத்தின் முடிவில் அஸி என்று ப்ரதமபுருஷ க்ரியாபதமிருப்பதனால் அதற்குச்சேர பவாந் என்று அத்யாஹாரம் செய்துகொள்ளப்பட்டது. அஸி என்றல்லாமல் அஸி என்கிற பாடமும் சிலருக்குண்டாம். அப்போது த்வம் என்று வருவித்துக்கொள்வது; அது தன்னடையே வந்து சேரும். .... .... ... ... ... (19)

आत्मेश्वरोऽसि न परोऽस्ति तवेश्वरोऽन्यः विश्वस्य चाधिपतिरस्य परायणं च ।
नारायणाच्युत ! परस्त्वमिहैक एव ब्रह्मादयोऽपि भवदीक्षणलब्धसत्ताः ॥२०॥

ஆத்மேச்வரோஸி ந பரோஸ்தி தவேச்வரோந்ய:
விச்வஸ்ய சாதிபதிரஸ்ய பராயணஞ் ச,
நாராயணாச்யுத பரஸ் த்வமிஹைக ஏவ
ப்ரஹ்மாதயோபி பவதீக்ஷணலப்தஸத்தா: 20

நாராயண அச்யுத இஹ பர: த்வம் ஏக: ஏவ ஆத்மேச்வர: அஸி, தவ அந்ய: பர: ஈச்வர: நாஸ்தி, அஸ்ய விச்வஸ்ய அதிபதி: பராயணஞ்ச அஸி; ப்ரஹ்மாதயோபி பவதீக்ஷணலப்தஸத்தா:

நாராயணனே! அச்யுதனே! இவ்விடத்து, பரதத்வமான தேவரீர் ஒருவரே ஆத்மேச்வரராக ஓதப்பட்டிராநின்றீர்; தேவரீருக்கு வேறொரு சிறந்த நியாமகர் இல்லை; இவ்வுலகுக்கெல்லாம் ப்ராப்யராயும் ப்ராபகராயுமிராநின்றீர்; (சிலசில விடங்களில் ஈச்வரராகச் சொல்லப்படுகிற) ப்ரஹ்மாதிகளும் தேவரீருடைய கடாக்ஷத்தினால் ஸத்தைபெற்றவர்களிறே.

* * * இஃச்லோகத்தில் உபநிஷத் வாக்யங்களையே பெரும்பாலும் தொடுத்து அருளிச்செய்திருக்கிறார். இதில், உபநிஷத் வாக்யங்களை உள்ளடக்கி அவற்றின் பொருள்களைப் பொழிந்தருளிச்செய்கிறார். [ஆத்மேச்வரோஸி] * பதிம் விச்வஸ்யாத்மேச்வரம் * என்று ஓதினபடியே ஸகலாத்ம வர்க்கங்களுக்கும் நியந்தாவாக இராநின்றீர். [ந பரோஸ்தி தவேச்வரோந்ய:] நியாமகத்வமும் நியாம்யத்வமும் ஸமாநாதிகரணமாயிருக்கிற படியையும் உலகில் காணாநின்றோமிறே: ஒருவன் சிலர்க்கு நியாமகனாயிருக்கச்செய்தேயும் தான் தன்னில் மேம்பட்டார்க்கு நியாம்யனாயிருப்பதுமுண்டே; அப்படி இங்கில்லை யென்கிறது. ஸர்வாந்தர்யாமியாய்க்கொண்டு ஸர்வநியாமகராயிருப்பீர் தேவரீரொருவரேயாகையாலே தேவரீரை நியமிப்பார் மற்றொருமில்லை கிடீர்.

[விச்வஸ்ய சாதிபதிரஸ்ய பராயணஞ்ச] உபாயமும் உபேயமும் தேவரீரே என்றபடி. மற்ற விஷயங்களில் உபாயம் வேறாய் உபேயம் வேறாயிருக்கும். பகவத் விஷயத்தில் அங்ஙனமில்லையிறே. * स्वप्राप्तौ स्वयमेव साधनतया जोघुष्यमाणः श्रुतौ—ஸ்வப்ராப்தௌ ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ * என்றிறே வேதாந்தவாரியனும் விளம்பிற்று. [இஹ த்வமேக ஏவ பர:] ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் ஈச்வரத்வம் கூடுமென்று சொல்லுவார்க்கு அவகாசமற அருளிச்செய்கிறபடி. பரத்வமென்பது $ வ்யாஸஜ்ஜ்யவ்ருத்தியான தர்மமன்று; ஸ்ரீமந்நாராயணனொருவனுக்கே அஸாதாரண தர்மமென்றதாயிற்று.

---

$ இரண்டு பொருள்களைக் கவ்விநிருக்குமது வ்யாஸஜ்ஜ்யவ்ருத்தி யெனப்படும்.

ஆனால் ப்ரமாணங்களில் சிலசில விடங்களில் ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் ஈச்வரத்வம் சொல்லிற்றாகக் காணநின்றதே யென்ன; [ப்ரஹ்மாதயோபி பவதீக்ஷணலப்தஸத்தாஃ] என்கிறார். எம்பெருமானுடைய கடாக்ஷவிசேஷத்தாலேயிறே அவர்கள்தாமும் ஸத்தை பெற்றுக்கிடக்கிறது. * யுககோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூஃ, புநஸ் த்ரைலோக்ய தாத்ருத்வம் ப்ராப்தவாநிதி சுச்ரும, * மஹாதேவஸ் ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வாத்மாநம் தேவதேவோ பபூவ * இத்யாதி ப்ரமாண வசனங்கள் இங்கே அநுஸந்தேயங்கள். அவ்வோ தேவதைகள் எம்பெருமானை நெடுங்காலம் ஆராதித்து ஓரோ அதிகாரங்கள் பெற்றார்களென்னுமளவால் அவர்களுக்கொரு பரத்வமுண்டாயிடுமோ? .... .... (20)

नित्यस्समाभ्यधिकवर्जित ऊर्जितश्रीः नित्येऽक्षरे दिवि वसन् पुरुषः पुराणः ।

सत्त्वप्रवर्तनकरो जगतोऽस्य मूलं नान्यस्त्वदस्ति धरणीधर ! वेदवेद्यः ॥२१॥

*நித்யஸ் ஸமாப்யதிக வர்ஜித ஊர்ஜித ஸ்ரீ:*
*நித்யேக்ஷரே திவி வஸந் புருஷ: புராண:,*
*ஸத்வப்ரவர்த்தநகரோ ஜகதோஸ்ய மூலம்*
*நாந்யஸ் த்வதஸ்தி தரணீதர! வேதவேத்ய:.* 21

தரணீதர! (த்வம் ஏக ஏவ) நித்யஃ ஸமாப்யதிகவர்ஜிதஃ ஊர்ஜித ஸ்ரீஃ நித்யே திவி அக்ஷரே வஸந் அஸ்ய ஜகதஃ மூலம் ஸத்வப்ரவர்த்தநகரஃ புராணஃ புருஷஃ அஸி; த்வத் அந்யஃ வேதவேத்யஃ நாஸ்தி

ஸமஸ்தபூமண்டல நிர்வாஹகரான பகவானே! தேவரீரொருவரே நிருபாதிக நித்யத்வத்தோடு கூடினவராயும் ஒத்தாரும் மிக்காருமில்லாதவராயும் திடமான ஸ்ரீஸம்பத்தை யுடையவராயும், சாச்வதமாய் பரமாகாச சப்தவாச்யமான பரமபதத்தில் வஸிப்பவராயும் இந்த ஜகத்துக்குக் காரணபூதராயும் ஸத்வகுணத்தை ப்ரவர்த்திப்பிக்குமவராயும் அநாதி புருஷராயும் இராநின்றீர்; தேவரீரைக் காட்டிலும் வேறொருவர் வேதப்ரதிபாத்யராக இல்லை.

* * *—கீழ்ச்லோகத்திலுள்ள த்வம் ஏக ஏவ என்கிற பதங்களை இவ்விடத்திற்கும் ஆகர்ஷித்துக்கொள்வது. [த்வம் ஏக ஏவ நித்ய:] ஜீவாத்மா, காலம், ஆகாசம் முதலானவைகளுக்கும் நித்யத்வமுண்டேயாகிலும் நித்யேச்சாதீநமான நித்யத்வமேயன்றோ அவற்றுக்குள்ளது. 'இவை நித்யவஸ்துக்களாயிருக்கக் கடவன' என்று பரமபுருஷன் ஸங்கல்பித்ததனாலன்றோ அவை நித்யவஸ்துக்களெனப்படுகின்றன. அதுதான் ஔபாதிக நித்யத்வ மெனப்படும். அப்படி ஔபாதிகமன்றியே நிருபாதிகமாக நித்யத்வமுள்ளது எம்பெருமானொருவனுக்கேயாயிற்று.

[ஸமாப்யதிகவர்ஜித:] * न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते — ந தத்ஸமச்ச அப்யதிகச் ச த்ருச்யதே * ஒத்தார்மிக்காரை யிலையாய மாமாயா * என்கிறபடியே தன்னோடொத்தவர்களும் தனக்கு மேம்பட்டவர்களு மில்லாதவனென்கை. தன்னோடொப்பாரில்லையென்றபோதே தன்னில் மேம்பட்டாரில்லையென்பது கல்வெட்டாகத் தேறிநிற்க, மிக்காரில்லை யென்பதைத் தனிப்படச் சொல்லவேணுமோவென்று சிலர் சங்கிப்பர்கள். எம்பெருமானைக்காட்டிலும் மேம்பட்டவர்கள் எப்படியில்லையோ அப்படி அவனோடொத்தவர்களு மில்லையென்று சொல்லுவதிலே நோக்கு என்று சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பர்கள். அன்றிக்கே, * தானே தனக்குவமன் * தன்னொப்பான் தானாயுளன் காண் * என்றருளிச் செய்கிறபடியே அநந்வயாலங்கார ப்ரக்ரியையில் 'எம்பெருமான் எம்பெருமானோடொப்பன்' என்று சொல்லக் கூடுமாகையாலே ஒருவாறு ஸாம்யவாதத்திற்கு இடமுண்டானாலும் மேம்பட்டாருளரென்கிற ஸம்பாவனைக்கு இடமேயில்லை யென்கிறது என்று கூறுவாருமுளர்.

[ஊர்ஜிதஸ்ரீ:] எம்பெருமானுக்கு நிரூபக விசேஷணங்கள் பலவுண்டாகிலும் அவையெல்லாவற்றிலுங் காட்டில் ச்ரிய:பதித்வமே ப்ரதாந நிரூபகமாக நம்முதலிகள் அறுதி-

பிட்டிருப்பர்கள் ; * திருவில்லாத் தேவரைத் தேறேன்மின்தேவு * என்றார் திருமழிசைப் பிரான். ஆஸுரப்ரக்ருதியான மாரீசனுங்கூட * அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா * என்று ஸ்ரீஸம்பந்தத்தைபிட்டே யன்றோ பகவானுக்கு உத்கர்ஷம் சொல்லிற்று. வேதமும் *श्रद्धयाऽदेवो देवत्व मश्नुते–ச்ரத்தயாதேவோ தேவத்வமச்நுதே* என்று ஓதிற்று. பிராட்டியின் ஸஹஸ்ரநாமாவளியிலே ச்ரத்தா என்பதும் ஒரு திருநாமமாகப் படிக்கப்பட்டிருக்கையாலே ச்ரத்தயா என்றது ஸ்ரீமஹாலக்ஷ்மியினாலென்றபடி. அதற்கடுத்த பதம் தேவ: என்பதன்று, 'அதேவ:' என்றே பதவிபாகமாகும். ஸ்வரஸந்நிவேசமாயிற்று இதற்கு நியாமகம். "அதேவ: ச்ரத்தயா தேவத்வம் அச்நுதே"—பண்டு தெய்வத்தன்மையில்லாதிருந்தவன் லக்ஷ்மீ ஸம்பந்தத்தினால் தெய்வத்தன்மை பெறுகிறானென்று ஓதிற்றாயிற்று.

[நித்யே அக்ஷரே திவி வஸந்] நித்யமாயும் காலக்ருதபரிணாமரஹிதமாயும் பரமாகாச—பரமவ்யோம சப்தவாச்யமாயுமிருக்கிற பரமபதத்திலுள்ளீரும் தேவரீரே யென்கிறது. * द्योदिवौ द्वे स्त्रियाम् * என்ற அமரகோசத்தின்படி ஸ்த்ரீலிங்கமான திவ் சப்தம் இங்கு அந்ய லிங்கமாயிராநின்றதே ; நித்யே, அக்ஷரே என்கிற விசேஷணங்கள் அந்வயியாதே என்று சிலர் சங்கிப்பர்கள். இதற்காக ஸம்ஸ்க்ருத வியாக்கியான கர்த்தா "பரமபதே இதி சேஷ:" என்றார். அப்போது திவி என்பது விசேஷ்யமல்ல, விசேஷணரூபமாகவே யுள்ளது என்று கருத்தாகும். 'பரமபதே' என்று அத்யாஹாரமின்றியே அக்ஷரே என்பதையே விசேஷ்யமாகக்கொள்வது உசிதம். அக்ஷரசப்தத்திற்கு மோக்ஷார்த்தகத்வம் நிகண்டு ஸித்தம்; * तदक्षरे परमे व्योमन् * என்று ச்ருதியுமுண்டு. அதை நினைப்பூட்டுதலும் இங்கு விவக்ஷிதம். ஏவஞ்ச, 'நித்யே திவி அக்ஷரே' என்று அந்வயிப்பது.

[புராண: புருஷ: த்வம் ஏக ஏவ அஸி] * எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் மூந்தை * மூவின்வன் மூவுலகாளியப்பன் * இமையோர்க்கென்றும் முன்னோய் * என்றிவை முதலான சந்தைகளை இங்கே நினைப்பது. [ஸத்வப்ரவர்த்தகர:] * सत्त्वस्यैष प्रवर्तकः—ஸத்வஸ்யைஷ ப்ரவர்த்தக: * என்கிற ச்ருதி இங்கே விவக்ஷிதம். * ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:* என்பதும் இங்கு அநுஸந்தேயம். தம்முடைய கடாக்ஷத்திற்கு இலக்கானார் திறத்திலே ஸத்வகுணம் ப்ரவ்ருத்தமாம்படி செய்யவல்லவர் என்றபடி. [அஸ்ய ஜகதோ மூலம் த்வம் ஏக ஏவ] * यतो वा इमानि भूतानि जायन्ते *. இத்யாதியுபநிஷத்தையும் * அவையுள் தனி முதலம்மான் * என்பது முதலான அருளிச்செயல்களையும் நினைப்பது.

[த்வத் அந்ய: வேதவேத்ய: நாஸ்தி] "வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்று கீதையில் தானே சொன்னபடியே வேதப்ரதிபாத்யன் வேறில்லாமையாலே, தேவரீரைக் காட்டிலும் வேறு வ்யக்தி வேதங்களினால் அறியக்கூடியதாக இல்லையென்றாராயிற்று. அக்நி வருண ஸூர்ய யமாதிகளான பலபல தேவதைகளும் வேதங்களினால் அறியக்கிடக்கின்றனவில்லையோ வென்னில் ; "स आत्मा ; अङ्गान्यन्या देवताः" (ஸ ஆத்மா; அங்காந்யந்யா தேவதா:) என்கிறபடியே அந்த தேவதைகளெல்லாம் சரீரபூதர்களேயல்லது சரீரிகளல்லாமையாலே அவர்கள் வேதவேத்யர்களாக வகையில்லை யென்க.

"நாந்யஸ் த்வதஸ்தி" என்பதை நித்ய:, ஸமாப்யதிகவர்ஜித: இத்யாதியான ஒவ்வொன்றோடும் கூட்டி அந்வயிக்கத்தகும். .... .... .... (21)

यं भूतभव्यभवदीशमनीशमाहुरन्तस्समुद्रनिलयं यमनन्तरूपम् ।
यस्य त्रिलोकजननी महिषी च लक्ष्मीः साक्षात्स एव पुरुषोऽसि सहस्रमूर्द्धा ॥२२॥

**யம் பூதபவ்ய பவதீச மநீச மாஹு:**
**அந்தஸ் ஸமுத்ரநிலயம் யமநந்தரூபம்,**
**யஸ்ய த்ரிலோகஜநநீ மஹிஷீ ச லக்ஷ்மீஸ்**
**ஸாக்ஷாத் ஸ ஏவ புருஷோஸி ஸஹஸ்ரமூர்த்தா.** 22

யம் பூத பவ்ய பவத் ஈசம் அநீசம் ஆஹு:; யம் அந்தஸ் ஸமுத்ர நிலயம் அநந்த ரூபம் ஆஹு:; யஸ்ய மஹிஷீ லக்ஷ்மீச் ச த்ரிலோக ஜநநீ; ஸ: ஸஹஸ்ரமூர்த்தா புருஷ: ஸாக்ஷாத் த்வம் ஏவ அஸி.

யாவனொருவனையே பூத பவிஷ்யத் வர்த்தமாந கால்விக ஸமஸ்த வஸ்துக்களுக்கும் ஈச்வரனாகவும், தமக்கு நியாமக ரில்லாவனாகவும் (வேதங்கள்) ஓதுகின்றனவோ; யாவனொருவனைக் கடலுள் வாழ்பவனாகவும் அபரிமித அவதார விக்ரஹ விசிஷ்டனாகவும் (அந்த வேதங்கள்) சொல்லுகின்றனவோ, யாவனொருவனுக்கு திவ்யமஹிஷியான ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் ஸகலலோக மாதாவாக இருக்கின்றாளோ, அப்படிப்பட்ட *ஸஹஸ்ரசீர்ஷா புருஷ:* என்னப்பட்ட பரம புருஷன் ஸாக்ஷாத் தேவரீரே ஆகிறீர்.

* * *— * ईशानो भूतभव्यस्य —— ஈசாநோ பூதபவ்யஸ்ய * என்கிற (கடவல்லி) உபநிஷத்தின்படியே பூத பவிஷ்யத் வர்த்தமாந காலிகங்களான ஸகல பதார்த்தங்களுக்கும் நியாமகராய், * न तस्येशे कश्चन—— ந தஸ்யேசே கச்சந * என்கிற ச்ருதியின்படியே தமக்கு வேறொரு நியாமகரையுடையரல்லாதவராய், * यमन्तस्समुद्रे कवयो वयन्ति——யமந்தஸ் ஸமுத்ரே கவயோ வயந்தி * என்கிற ச்ருதியின்படியே க்ஷீராப்திசாயியாய், * तदेकमव्यक्तमनन्तरूपम्—— ததேகமவ்யக்தமநந்த ரூபம் * என்கிற ச்ருதியின்படியே அபரிமிதாவதார விக்ரஹ விசிஷ்டராய் * ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ——ஹ்ரீச் ச தே லக்ஷ்மீச் ச பத்ந்யௌ * என்கிற ச்ருதியின்படியே ச்ரிய:பதியுமான தேவரீரே * सहस्रशीर्षा पुरुषः——ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: * என்று தொடங்கி புருஷ ஸூக்தத்தில் ப்ரதிபாதிக்கப்பட்ட புருஷோத்தமராய் இராநின்றீர் என்றதாயிற்று.

* ईशानो भूतभव्यस्य——ஈசாநோ பூதபவ்யஸ்ய * என்கிற ச்ருதியில் பூதபவிஷ்யத் ப்ரதிபாதகமுள்ளதேயன்றி வர்த்தமாந ப்ரதிபாதகம் இல்லையாயிருக்க, இங்கு "பூத பவ்ய பவதீசம்" என்று வர்த்தமாநத்தையுஞ் சேர்த்துச் சொல்லியிருப்பதானது உபலக்ஷணவிதயா அதுவும் ச்ருதிவிவக்ஷிதமென்று திருவுள்ளம்பற்றியே. வர்த்தமாநமென்பது ஒரு த்ருடி மாத்ரமேயாய் பூதபவிஷ்யத்துக்களுள் ஒன்றிலே சொருகிப்போமதாகையாலே அதற்குத் தனியே நிர்தேசம் அநபேக்ஷிதமென்று கொண்டே ச்ருதியில் அது விடப்பட்டதென்றுங் கொள்ளலாம்.

[அநீசம்] தான் அனைவர்க்கும் ஈசனாயிருப்பதுபோல் தனக்கும் ஒரு ஈசனுண்டோ வென்ன, இல்லையென்கிறது. ... .... ... ... (22)

सर्वश्रुतिष्वनुगतं स्थिरमप्रकम्प्यं नारायणाह्वयधरं त्वमिवानवद्यम् ।
सूक्तं तु पौरुषमशेषजगत्पवित्रं त्वामुत्तमं पुरुषमीशमुदाजहार ॥२३॥

**ஸர்வச்ருதிஷ்வநுகதம் ஸ்திரமப்ரகம்ப்யம்**
**நாராயணாஹ்வயதரம் த்வமிவாநவத்யம்,**
**ஸூக்தம் து பௌருஷமசேஷஜகத்பவித்ரம்**
**த்வாமுத்தமம் புருஷமீச முதாஜஹார.** 23

-(ஹே பகவந்!) த்வம் இவ ஸர்வச்ருதிஷு அநுகதம் ஸ்திரம் அப்ரகம்ப்யம் நாராயணாஹ்வயதரம் அநவத்யம் அசேஷ ஜகத் பவித்ரம் பௌருஷம் ஸூக்தம் து த்வாம் உத்தமம் புருஷம் ஈசம் உதாஜஹார.

எம்பெருமானே!, தேவரீர் போலவே ஸர்வவேதங்களிலுமோதப்பட்டும் ஸ்திரமானதும் (குதர்க்கங்களால்) அசைக்கவொண்ணாததும் நாராயணத் திருநாமத்தையுடையதும் நிர்துஷ்டமானதும் ஸர்வலோக பாவநமுமான புருஷஸூக்தமோவென்றால் தேவரீரைப் புருஷோத்தமராகவும் ஸர்வேச்வராகவும் ஓதிவைத்தது.

* * *—இச்ச்லோகத்தில் * புருஷோஸி ஸஹஸ்ரமூர்த்தா * என்று புருஷ ஸூக்த
வாக்யம் ஸ்மரிக்கப்பட்டபடியாலே அந்த புருஷ ஸூக்தத்தின் பெருமையைப்பேசி இதுவே
பகவத் பரத்வப்ரதிபாதகங்களான ப்ரமாணங்களுக்குள் தலையானதென்றருளிச் செய்கிறார்
இல். புருஷ ஸூக்தத்திற்கும் எம்பெருமானுக்கும் ஆறு விசேஷணங்களினால் ஸாம்யநிர்வா
ஹம் அற்புதமாகச் செய்தருளுகிறார்: [ஸர்வச்ருதிஷு அநுகதம்] * மறையாய நால்வேதத்
துள் நின்ற மலர்ச்சுடரே * என்கிறபடியே எம்பெருமான் ஸகல வேதங்களிலும் திகழ்வது
போலவே புருஷ ஸூக்தமும் ஸகல வேதங்களிலும் திகழ்வதாகும். புருஷ ஸூக்தமென்
கிற பாகம் ஒவ்வொரு வேதத்திலுமுண்டாயிருக்குமிறே. * ऋग्वेदे षोडशर्चं स्यात् यजुष्यष्टादश-
र्चकम् । सामवेदे तु सप्तर्चं तथा वाजसनेयके—ருக்வேதே ஷோடசர்ச்சம் ஸ்யாத் யஜுஷி அஷ்டாத
சர்ச்சகம், ஸாமவேதே து ஸப்தர்ச்சம் ததா வாஜஸனேயகே * என்று, இந்த புருஷ ஸூக்த
மானது ரிக்வேதத்தில் பதினாறு ருக்குக்களையுடையதாகவும் யஜுர் வேதத்தில் பதினெட்டு
ருக்குக்களையுடையதாகவும் ஸாம வேதத்திலும் வாஜஸனேயகத்திலும் ஏழு ருக்குக்களை
யுடையதாகவும் சொல்லப்பட்டிராநின்றது. ஆகவே 'ஸர்வச்ருதிஷு அநுகதத்வம்' உபய
ஸாதாரணமாயிற்று. [ஸ்திரம்] நிலைநின்றிருக்குந்தன்மையும் உபய ஸாதாரணமாயிருக்கும்.
ப்ரமேய பூதனை எம்பெருமானும் ப்ரமாண மூர்த்தந்யமான புருஷ ஸூக்தமும் சித்ய ஸ்ரீர்
த்யமங்களாக விளங்கத்தட்டில்லையே. [அப்ரகம்ப்யம்] எம்பெருமானை இல்லை செய்ய
வேணுமென்று எத்தனை குதர்க்கவாதிகள் திரண்டாலும் அசைக்கவுமொண்ணாதபடியன்றோ
பகவத் தத்வமுள்ளது. அப்படியே புருஷ ஸூக்தத்தைச் சில குதர்க்கங்களினால் அர்ய
பரமாக்கவேணுமென்று எவ்வளவு முயன்றாலும் அது கைகூடாததாயிருக்கும். [நாராயணாஹ்
வயதரம்] எம்பெருமானுக்கு நாராயணனென்னுந் திருநாமமுடைமைபோலே புருஷ ஸூக்த
மும் நாராயணானுவாகமென்று ப்ரஸித்தி பெற்றிருக்கும்.

[அநவத்யம்] எம்பெருமான் அகிலஹேயப்ரத்யநீகனாயிருப்பதுபோலேவே புருஷ
ஸூக்தமும் ஹேயப்ரதிபடம். அதாவது புருஷஸூக்தவ்யதிரிக்தங்களான வேதப்பகுதி
களில் தேவதாந்தர பாரம்யசங்கைக்கு ப்ரஸக்தியாவது உண்டாகையாலே அவற்றில்
அந்த அவத்யமொன்று அவகாசம் பெற்றிருக்கும்: புருஷஸூக்தத்தில் அதுதானுமில்லை
யாயிற்று. * वेदेषु पौरुषं सूक्तं धर्मशास्त्रेषु मानवम् । भारते भगवद्गीता पुराणेषु च वैष्णवम्—
வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்மசாஸ்த்ரேஷு மாநவம், பாரதே பகவத்கீதா
புராணேஷு ச வைஷ்ணவம் * என்னும்படியான சிறப்புடையதென்கை. [அசேஷஜகத்பவித்
ரம்] * पावनस्सर्वलोकानां त्वमेव रघुनन्दन !—பாவநஸ் ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தந *
என்கிறபடியே எம்பெருமான் அசேஷ ஜகத்பவித்ரனாயிருப்பதுபோலவே புருஷஸூக்தமும்
தன்னையநுஸந்தித்தாரை மனகமலமறக்கழுவிப் பரமபவித்ரர்களாக்குமது. ஆக இப்
படிப்பட்ட புருஷஸூக்தமானது * வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் * என்றுதொடங்கி
தேவரீருடைய புருஷோத்தமத்வத்தை முறையிடாநின்றது. இச்ச்லோகத்திலுள்ள ஒவ்
வொரு விசேஷணமும் எம்பெருமானுடைய பரத்வத்தை நிலைநாட்டவல்லதென்னுமிடமும்
குறிக்கொள்ளத்தக்கது.

... ... ...

आनन्दमैश्वरमवाङ्मनसावगाह्यमाम्नासिषुश्शतगुणोत्तरितक्रमेण ।
सोऽयं तवैव नृषु हि त्वमिहान्तरात्मा त्वं पुण्डरीकनयनः पुरुषश्च पौष्णः ॥२४॥

ஆநந்த மைச்வர மவாங்மநஸாவகாஹ்யம்
ஆம்நாஸிஷுச் சதகுணோத்தரிதக்ரமேண,
ஸோயம் தவைவ ந்ருஷு ஹி த்வமிஹாந்தராத்மா
த்வம் புண்டரீகநயந: புருஷச் ச பௌஷ்ண:. 24

ஐச்வரம் ஆநந்தம் சதகுணோத்தரித க்ரமேண அவாங்மநஸாவகாஹ்யம் ஆம்நாஸிஷு:; ஸோயம் தவைவ; ஹி த்வம் இஹ ந்ருஷு அந்தராத்மா; த்வம் புண்டரீகநயந: பௌஷ்ண: புருஷச் ச (அஸி.)

(எம்பெருமானே!) ஈச்வரத்வப்ரயுக்தமான ஆனந்தத்தை (வேதவாக்குக்களானவை) நூறுநூறு மடங்காகப்பெருக்கிக் கொண்டே போகிற முறைமையில் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாததாச்சொல்லி முடித்தன; இவ்வானந்தம் தேவரீருக்கே உற்றது; ஏனென்னில், இவ்வானந்தவல்லீ ப்ரகரணத்தில் தேவரீர் சேதநர்களுக்குள்ளே அந்தர்யாமியாயன்றோ இருக்கிறீர்; (அவ்வளவேயுமல்லாமல்) புண்டரீகாக்ஷராயும் ஆதித்ய மண்டலத்திலுள் உறையும் புருஷராயுமிராநின்றீரன்றோ.

* * *—வேதங்கள் எம்பெருமானுடைய ஒவ்வொரு குணத்தினுடையவும் எல்லையைக் காணவிரும்பி, அவற்றுள் ஆனந்தமென்கிற ஒரு குணத்தைப்பற்றிப் பேசப்புகுந்தவிடம் தைத்திரீயோபநிஷத்தில் ஆனந்தவல்லீ யென்கிற விடம். அதை யெடுத்தருளிச்செய்கிறார் இதில் பூர்வார்த்தத்தினால். இந்தவுலகத்தில் ஸம்பவிக்கமுடியாத ஒப்பற்ற குணங்கள் வாய்ந்த ஒரு மநுஷ்யனைக் கல்பித்து அவனுக்கு மேன்மேலாகப் பலபேர்கள் இருப்பது போலவும், கீழ்ச் சொல்லப்பட்டவர்களிற் காட்டிலும் மேன்மேலும் சொல்லப்பட்டவர்களுடைய குணங்கள் நூறுமடங்கு அதிகமாக இருக்கின்றன போலவும் கல்பித்துக்கொண்டுபோய் அப்படிப் பெருக்கிக் கடைசியாகத் தேறும் தொகையை எம்பெருமானுடைய கல்யாண குணத்தின் அளவாகச் சொல்லலாமென்றெண்ணிப் பார்த்து, அவ்வளவாகச் சொல்லி முடிக்கப் பொருந்தாமையால் மீண்டும் மீண்டும் திருப்பித் திருப்பிப் பெருக்கிக்கொண்டே போவதாகக்காட்டி ஆனந்தகுணமொன்றே வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாததென்று தலைக்கட்டப்பட்டது.

ஆனந்தவல்லியின் ஸாராம்சமாவது—; ஒருமநுஷ்யன், அவன் நல்ல யௌவன பருவத்திலுள்ளவன்; ஸகலசாஸ்த்ரங்களையும் ஒன்றுவிடாமல் ஓதிப் பிறர்களுக்கும் ஓதுவிப்பவன்; ஆலஸ்யமின்றி எல்லாக்காரியங்களையும் வழுவாமற் செய்பவன்; தேஹத்திலும் மனத்திலும் திடமுள்ளவன். இவ்வளவும் வாய்ந்தாலும் தரித்திரனாயிருந்தால் பயனில்லையே. அப்படியன்றிச் செல்வமெல்லாம் நிறைந்த பூமண்டலம் முழுவதையும் செங்கோல்செலுத்தி ஆளும்படியான ஒப்புயர்வற்ற ஸம்பத்தும் வாய்ந்தவன். இப்படிப்பட்ட அதிசயங்கள் நிறைந்த ஒருமநுஷ்யனிருந்தால் அவனுக்கு உண்டாகக்கூடிய ஆனந்தத்தை முன்னேயெடுத்துக்காட்டி, அதைவிட நூறுபங்கு அதிகமான ஆனந்தமுடையவர்களாக மநுஷ்ய கந்தர்வர்களைக்கூறி, அவர்களைவிட நூறுபங்கு அதிகமான ஆனந்தமுடையவர்களாக தேவகந்தர்வர்களைக்கூறி இப்படியே நூறுநூறு பங்கு ஆனந்தமுள்ளவர்களாக வரிசையாய் சிரலோக லோகபித்ருக்களையும் ஆஜாநஜ தேவர்களையும் கர்மதேவ தேவர்களையும் இந்திரனையும் ப்ருஹஸ்பதியையும் ப்ராஜாபதியையும் சொல்லிவந்து அந்த ப்ராஜாபதியின் ஆனந்தத்தைவிட நூறுமடங்கு அதிகமான ஆனந்தமுடையது பரப்ரஹ்மம் என்று சொல்லப்பார்த்து, பரப்ரஹ்மத்தின் ஆனந்தத்தை இவ்வளவு மட்டமாகவா சொல்லு

விடுகிறதென்று குறைபட்டு * யதோ வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸா ஸஹ * என்று எத்தனைமடங்கு அதிகமாகச் சொன்னாலும் இது அவாங்மநஸ கோசரமானதேயென்று தலைக்கட்டிற்று.

ஆனால் * ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த: [ப்ரஜாபதியின் ஆனந்தத்தின் நூறு கொண்டது ப்ரஹ்மானந்தம்] என்று அங்கு ஏன் சொல்லிற்றென்று கேள்வி பிறக்கக் கூடும்; இக் கேள்விக்கு ஆநந்தமயாதிகரண ஸ்ரீ பாஷ்ய ச்ருதப்ரகாசிகையில் ஸமாதானம் அருளிச் செய்யப்பட்டுள்ளது; கேண்மின். "க்ஷிப்தேஷுரிவ ஸர்ப்பதி" = எறியப்பட்ட அம்பு போலே ஸூர்யன் ஓடுகிறான் என்று சொல்லப்பட்டிருந்தால், ஒரு நிமிஷத்தில் பலகாத வழிகளைக் கடந்து செல்லுகிற ஸூர்யனுக்கு அற்பமான அம்பு ஒப்பாக மாட்டாமையாலே *க்ஷிப்தேஷுரிவ ஸர்ப்பதி* என்ற அந்த வாக்யத்திற்கு 'ஸூர்யனுடைய கதி அமந்தம்' என்பதில் மாத்திரம் தாற்பரியமாவது போல் * ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த: * என்ற இவ்வாக்கியத்திற்கும் ஆனந்த ஆதிக்யத்தில் மாத்திரம் தாற்பரியமாகக் கடவது என்றருளிச் செய்யப்பட்டது. மற்றொரு வகையான ஸமாதானமும் அங்கே கண்டு கொள்க.

இந்த ச்லோகத்தின் உத்தரார்த்தத்தில் தவ என்றும் த்வம் என்றுமிருக்கையாலே எம்பெருமானை நோக்கியே சொல்லப்படுகிற ச்லோகமிதுவென்று விளங்காநிற்க, முதற் பாதத்தில் ஐச்வரம் என்றிருக்கலாமோ? 'த்வதீயம் ஆநந்தம்' என்றன்றோ இருக்கவேணடும்—என்று வ்யுத்பந்நர்களுக்கு ஒரு சங்கை தோன்றக்கூடும். கேண்மின்; ஐச்வரம் என்பதற்கு 'ஈச்வரனுடையதான' என்று பொருளன்று; ஈச்வரத்வ ப்ரயுக்தமான, என்று பொருள்; ஆகவே விரோதமில்லையென்றுணர்க. [ஆம்நாஸிஷு:] என்கிற க்ரியைக்கு ஆனந்தவல்லியிலுள்ள வாக்யங்கள் என்பது கர்த்ருபதமாக வருவித்துக்கொள்ளவேண்டும்.

[ஸோயம் தவைவ] ஆனந்தவல்லியில் சொல்லப்பட்ட * ஸ ஏகோ மாநுஷ ஆநந்த:* என்று தொடங்கியுள்ள ஸகலானந்தமும் தேவரீருடையதே என்றபடி. மநுஷ்யாதி ப்ரஜாபதிபர்யந்தமாகச் சொல்லப்பட்ட ஆனந்தம் அந்த மநுஷ்யாதிகளின் ஆனந்தமாக இருக்க முடியுமேயல்லது எம்பெருமானுடைய ஆனந்தமாக எப்படியிருக்கமுடியும்? என்கிற சங்கை தோன்றக்கூடியதாதலால் அதற்குப் பரிஹாரமாக [ந்ருஷு ஹி த்வமிஹாந்தராத்மா] என்றருளிச்செய்கிறார். அங்குச் சொல்லப்பட்ட எல்லா ஜீவர்களிடத்திலும் தேவரீரேயன்றோ அந்தராத்மாவாக எழுந்தருளியிருப்பது; அவர்கள்யாவரும் தேவரீருக்கு சரீரபூதர்களாய் தேவரீர் சரீரியாயிருக்கையாலே இங்ஙனே சொல்லக் குறையில்லையென்றபடி. அந்த ப்ரகரணத்தில் ப்ராணமய மநோமயங்களுக்குப் பிறகு விஜ்ஞாநமயனைச் சொல்லி * तस्यैष एव शारीर आत्मा—தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா * என்று விஜ்ஞாநமயனான ஜீவனுக்கு ஆநந்தமயனான பரமாத்மாவையே அந்தராத்மாவாக ஓதியிருப்பது உணரத்தக்கது.

[த்வம் புண்டரீகநயந: புருஷச்ச பௌஷ்ண:] * स यश्चायं पुरुषे । यश्चासावादित्ये । स एकः—ஸ யச்சாயம் புருஷே. யச்சாஸா வாதித்யே ஸ ஏக:. * என்கிற தைத்திரீயோபநிஷத் வாக்யத்தில் ஸூர்யமண்டல வர்த்தித்வம் எம்பெருமானுக்குச் சொல்லப்பட்டது; இவ்விஷயந்தன்னையே சாந்தோக்யத்தில் சொல்லும்போது * य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषो दृश्यते—ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே * என்றுசொல்லி, உடனே * तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी— தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ * என்று புண்டரீகாக்ஷத்வத்தையும் சொல்லியிருக்கையாலே அவையிரண்டையு மெடுத்துரைத்துப் பாரம்ய நிரூபணம் பண்ணியருளினாராயிற்று. ... ... .... .... (24)

यन्मूलकारणमवुध्यत सद्दिवाक्यैर्ब्रह्मेति वा सदिति वाऽऽत्मगिराऽथवा तत् ।
नारायणस्त्विति महोपनिषद्ब्रवीति सौबालिकीममृतयोऽप्यनुजग्मुरेनाम् ॥२५॥

யந்மூலகாரணமபுத்த்யத ஸ்ருஷ்டிவாக்யை:
ப்ரஹ்மேதி வா ஸதிதி வாத்மகிராதவா தத்,
நாராயணஸ் த்விதி மஹோபஷநிஷத் ப்ரவீதி
ஸௌபாலிகீப்ரப்ருதயோ ப்யநுஜக்முரேநாம். 25

ஸ்ருஷ்டிவாக்யை, ஸத் இதி வா ப்ரஹ்ம இதி வா அதவா ஆத்மகிரா யத் மூலகாரணம் அபுத்த்யத, தத் நாராயண: இதி மஹோபநிஷத் ப்ரவீதி; ஏநாம் ஸௌபாலிகீப்ரப்ருதயோபி அநுஜக்மு:

ஸ்ருஷ்டி ப்ரகரணத்திலுள்ள காரணவாக்யங்களாலே ஸத் என்றோ ப்ரஹ்ம என்றோ ஆத்மா என்றோ எந்த வஸ்துவானது மூலகாரணமாக அறியப்பட்டிருக்கின்றதோ அந்த வஸ்து நாராயணனேயென்று மஹோபநிஷத்து ஓதுகின்றது; இந்த மஹோபநிஷத்தை ஸுபாலோபநிஷத்து முதலானவைகளும் பின்செல்லுகின்றன.

* * *—அதர்வசிரஸ்ஸிலே * कश्च ध्येयः ? कारणं तु ध्येयः—கச்ச த்யேய: ? காரணம் து த்யேய:, * என்று ஜகத்காரணபூதமான வஸ்துவே உபாஸ்யமென்று ஓதிற்று. அப்படிப்பட்ட வஸ்து எது? என்று ஆராயப்புகுமளவில், அந்த காரணவஸ்துவானது ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு சப்தத்தாலே சொல்லப்பட்டிரா நின்றது. எங்ஙனேயென்னில்; சாந்தோக்யத்திலே * सदेव सोम्येदमग्र आसीत् एकमेवाद्वितीयम् — ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம் * என்று ஸச்சப்தத்தாலே சொல்லிற்று. வாஜஸநேயகத்திலே * ब्रह्म वा इदमेवाग्र आसीत्— ப்ரஹ்ம வா இதமேவாக்ர ஆஸீத் * என்று ப்ரஹ்மசப்தத்தாலே சொல்லிற்று. அவ்விடத்திலே, ஸர்வசாகாப்ரத்யய ந்யாயத்தாலே காரணவாக்யங்களெல்லாவற்றுக்கும் ஏகவிஷயத்வம் வேண்டுகையாலே * पशुमालभेत—பசுமாலபேத * என்று ஸாமாந்யமான பசுசப்தம் * छागो वा मन्त्रवर्णात्—சாகோ வாமந்த்ரவர்ணாத் * என்கிற ஸூத்ரத்தில் விசேஷோபஸ்தாபகமான * छागपशु (சாகபசு)விலே பர்யவஸிக்குமாபோலே இங்கும் ஸாமாந்யமான ஸச்சப்தத்துக்கு வாச்யமான காரணவஸ்துவானது விசேஷாபஸ்தாபக ப்ரஹ்மசப்தவாச்யமென்று நிச்சயிக்கப்படுகிறது. இந்த ப்ரஹ்மசப்தந்தானும் * मम योनिर्महद्ब्रह्म— மம யோநிர் மஹத் ப்ரஹ்ம * என்றும் * तज्ज्ञानं ब्रह्मसंज्ञितम्— தத் ஜ்ஞாநம் ப்ரஹ்மஸம்ஜ்ஞிதம் * என்றும் சேதநாசேதந ஸாதாரணமாகையாலே ஐதரேயத்திலே * आत्मा वा इदमेक एवाग्र आसीत्— ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத் * என்று சேதநனுக்கே அஸாதாரணமான ஆத்ம சப்தத்தாலே விசேஷித்தது. இந்த ஆத்மாக்களில் ஜகத்காரணபூதர் ஆரென்று விசேஷஜிஜ்ஞாஸை பிறக்குமளவிலே, இந்த்ரனோ அக்நியோ ஆதித்யனோ சந்த்ரனோ வைச்ரவணனோ வருணனோ வாயு யமப்ரப்ருதிகளான தேவதாவிசேஷங்களோ வென்னில், அவையொன்றுமன்று, நாராயணனேயென்னுமிடத்தை மஹோபநிஷத்தும் ஸுபாலோபநிஷதாதிகளும் நிஷ்கர்ஷித்துக் கொடுத்தன. அவ்விஷயமேயாயிற்று இந்த ச்லோகத்தில் பேசப்பட்டது.

இந்த ச்லோகத்தின் ப்ரமேயத்தை ஸுந்தர பாஹுஸ்தவத்தில் (16) *ஸத்ப்ரஹ்மாத்மபதை: * இத்யாதி ச்லோகத்தாலே விரித்துரைத்தருளினர். அங்கு இன்னமும் விளங்க வுரையிட்டோம், கண்டுகொள்வது.

[ஸ்ருஷ்டிவாக்யை:] உபநிஷத்துக்களிலே ஸ்ருஷ்டியைச் சொல்லுமிடத்துள்ள வாக்யங்களாலே என்றபடி. காரணவாக்யங்களென்பதும் அவற்றையே. .... (25)

ज्योतिः परं परमतत्वमथो परात्मा ब्रह्मेति च श्रुतिषु यत्परवस्त्वधीतम् ।
नारायणस्तदिति तद्विशिनष्टि काचिद्विष्णोः पदं परममित्यपरा गृणाति ॥२६॥

ஜ்யோதி: பரம் பரமதத்வமதோ பராத்மா
ப்ரஹ்மேதி ச ச்ருதிஷு யத் பரவஸ்த்வதீதம்,
நாராயணஸ் தததி தத் விசிநஷ்டி காசித்
விஷ்ணோ: பதம் பரமமித்யபரா க்ருணாதி. 26

ச்ருதிஷு யத் பரவஸ்து பரம் ஜ்யோதிః இதி பரமதத்வம் இதி அதோ பராத்மா இதி ப்ரஹ்ம இதி ச அதீதம், தத் நாராயணः இதி காசித் (ச்ருதிः) விசிநஷ்டி; அபரா (ச்ருதிः) விஷ்ணோः பரமம் பதம் இதி க்ருணாதி

வேதங்களிலே யாதொரு பரவஸ்துவானது பரஞ்சோதியென்றும் பரமதத்வமென்றும் பரமாத்மா என்றும் பரப்ரஹ்மமென்றும் ஓதப்பட்டிருக்கின்றதோ, அந்த வஸ்துவை நாராயணனென்று ஒருச்ருதி விவரிக்கின்றது; மற்றொருச்ருதியானது (அதேவஸ்துவை) விஷ்ணோः பரமம்பதமென்று ஓதுகின்றது.

* * *—பராத்பரனை ஸ்ரீமந்நாராயணனை ஸச்சப்த ப்ரஹ்மசப்த ஆத்மசப்தங்களாலே ஆம்நாயங்கள் வ்யபதேசித்ததுபோலவே, பரம்ஜ்யோதிः, பரமம் தத்வம், பரः ஆத்மா என்றும் வ்யபதேசித்திருப்பதுண்டு; அவையும் நாராயணதத்பரங்களே யென்பது ஸுவ்யக்தமென்கிறதில். *நாராயணபரோ ஜ்யோதிः* என்ற விடத்தில் பரஞ்சோதியாகச் சொல்லிற்று. நாராயணபரः' என்று ஸமஸ்தபதமாக விருந்தாலும் இதரசாகைகளிலுள்ள பாடத்தை யநுஸரித்து 'நாராயணः பரः' என்று வ்யஸ்தமாகவே கொள்ளக்கடவது. பரः என்றதும் ஜ்யோதிஸ்ஸுக்கு விசேஷணமாகையாலே லிங்க வ்யத்யயம் சாந்தஸ மென்று கொள்வது.- [பரமதத்வம்] * தத்வம் நாராயணः பரः * என்கிற ச்ருதி வாக்யம் விவக்ஷிதம். [பராத்மா] * ஆத்மா நாராயணः பரः * என்பது விவக்ஷிதம். [ப்ரஹ்மேதி ச] * நாராயண பரம் ப்ரஹ்ம * என்பது விவக்ஷிதம். [காசித் நாராயண இதி விசிநஷ்டி] நாராயணனுவாக மென்கிற வொரு ச்ருதியானது நாராயணனே யென்று விளக்கி நின்றது. [அபரா ச்ருதிஸ் து விஷ்ணோः பரமம் பதமிதி க்ருணாதி] அபரா என்பதனாலே கடவல்லீ ச்ருதி விவக்ஷிதம். * विज्ञानसारथिर्यस्तु मनःप्रग्रहवान्नरः । सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम्— விஜ்ஞாநஸாரதிர்யஸ் து மநःப்ரக்ரஹவாந் நரः, ஸோத்வநः பாரமாப்நோதி தத் விஷ்ணோः பரமம் பதம் * என்றது காண்க.

ஆக இவற்றால் தேவதாந்தர பாரம்யசங்கைக்கு அவகாசலேசமுமில்லை யென்றதாயிற்று. ... ... ... ... ... ... ... (26)

सन्तीदृशः श्रुतिशिरस्सु परस्सहस्रा वाचस्तव प्रथयितुं परमेशितृत्वम् ।
किञ्चेह न व्यजगणः किमिधातृभेदं क्रमञ्जगन्ति निगिरन् पुनरुद्गिरंश्च ॥२७॥

ஸந்தீத்ருச: ச்ருதிசிரஸ்ஸு பரஸ்ஸஹஸ்ரா:
வாசஸ் தவ ப்ரதயிதும் பரமேசித்ருத்வம்,
கிஞ்சேஹ ந வ்யஜகண: க்ரிமிதாத்ருபேதம்
க்ரமந் ஜகந்தி நிகிரந் புநருத்கிரம்ச்ச. 27

தவ பரமேசித்ருத்வம் ப்ரதயிதும் ச்ருதிசிரஸ்ஸு ஈத்ருசः பரஸ்ஸஹஸ்ராः வாசः ஸந்தி; கிஞ்ச இஹ ஜகந்தி க்ரமம் நிகிரந் புநः உத்கிரந் ச க்ரிமி தாத்ரு பேதம் ந வ்யஜகணः

(எம்பெருமானே!) தேவரீருடைய பரமேச்வரத்வத்தைப் பரவச்செய்வதற்கு வேதாந்தங்களிலே இப்படிப்பட்ட பல்லாயிரம் வாக்குக்கள் உள்ளன; அன்றியும், தேவரீர் இங்கு உலகங்களை அளக்கும்போதும் விழுங்கும்போதும் மறுபடி உமிழும்போதும் கிரிமியென்றும் பிரமனென்றும் வாசி பார்த்திலீர்.

* * * கீழ்ச்லோகங்களினு லறிவிக்கப்பட்ட விஷயம் உபலக்ஷணமர்யாதயா கொள்ளக்கடவதென்கிருரிதில். எம்பெருமானுடைய பாரம்யத்தை விளக்கிக் காட்டவல்ல ச்ருதி வாக்கியங்கள் இவ்வளவேயோ? பலகோடி நூருயிரமுளவென்கிருர். * நமீச்வராணும் பரமம் மஹேச்வரம் * என்று ஓதப்பட்ட பரமேச்வரத்வத்தை விளக்குதற்குப் பாங்காகவுள்ள ச்ருதிகளைப் பன்னியுரைக்குங்கால் பாரதமாமிறே.

உத்தரார்த்தத்திலை—ஆழ்வார்கள் நிரூபித்தருளுகிற பாரம்ய ப்ரகாரத்தை மூதலிக்கிருர். அதாவது * கிடந்திருந்து நின்றளந்து கேழலாய்க் கீழ்புக்கிடந்திடும் தன்னுள் கரக்குமுமிழும் * என்றும், * பாரிடந்து பாரையுண்டு பாருமிழ்ந்து பாரளந்து பாரையாண்ட பேராளன் * என்றும் இப்படிகளிலேயுள்ள பாசுரங்கள் எம்பெருமான் செய்தருளின செயல்களாலும் அவனையே பரமபுருஷனென்று அறுதியிடலாமென்று காட்டுகையாலே அப்பாசுரங்களிலுள்ள பொருளையே பெய்து உத்தரார்த்தமருளிச்செய்தபடி. [க்ராமந்] என்பதனாலே உலகளந்த செய்தியையும், [நிகிரந்] என்பதனாலே உலகமுண்டசெய்தியையும், [புநருத்கிரந்] என்பதனாலே உலகமுமிழ்ந்த [அதாவது ஸ்ருஷ்டிசெய்கிற] செயலையும் தெரிவித்தபடி. இச்செயல்களிலே [க்ரிமிதாத்ருபேதம் ந வ்யஜகண:] இது க்ரிமி, இவன் பிரமன் என்று வாசிபார்த்திலை என்றபடி. க்ரிமிகீடாதிகளோடு ப்ரஹ்மாதி தேவர்களோடு வாசியற எல்லார் தலையிலும் திருவடிகளைவைத்து, எல்லாரையும் ஒருங்கே திருவயிற்றில் கொண்டு காலவிசேஷத்திலே வெளிநாடுகாணவுமிழ்ந்தாய் நீயேயிறே. * ஊளிர்மதிச் சடையனும் நான்முகக்கடவுளும் தளிரொளி யிமையவர் தலைவனுமுதலா, யாவகையுலகமும் யாவருமகப்பட, நில நீர் தீகால் சுடரிருவிசும்பும், மலர்சுடர்பிறவும் சிறிதுடன் மயங்க, ........ஓராலிலைச்சேர்ந்த எம்பெருமாமாயனையல்லது, ஒருமாதெய்வம் மற்றுடையமோயாமே. * (திருவாசிரியம்—7.) என்ற பாசுரத்தை இங்கே அநுஸந்திப்பது. .... ... (27)

रूपश्रिया परमया परमेण धाम्ना चित्रैश्च कैश्चिदुचितैर्भवतश्चरित्रैः ।
चिह्नैरनिह्नवपरैरपरैश्च कैश्चिन्निश्चिन्वते त्वयि विपश्चित ईशितृत्वम् ॥२८॥

**ரூபச்ரியா பரமயா பரமேண தாம்நா**
**சித்ரைச்ச கைச்சிதுசிதைர் பவதச் சரித்ரை:,**
**சிஹ்நைரநிஹ்நவபரை ரபரைச்ச கைச்சித்**
**நிச்சிந்வதே த்வயி விபச்சித ஈசித்ருத்வம். 28**

**விபச்சிதஃ பவதஃ பரமயா ரூபச்ரியா பரமேண தாம்நா சித்ரைஃ உசிதைஃ கைச்சித் சரித்ரைச்ச அநிஹ்நவபரைஃ அபரைஃ கைச்சித் சிஹ்நைச்ச த்வயி ஈசித்ருத்வம் நிச்சிந்வதே**

(எம்பெருமானே!) மஹாவிவேகிகளாயுள்ளவர்கள், தேவரீருடைய மிகச்சிறந்த திருமேனிவிளக்கத்தினுலும் சிறந்தஸ்தான விசேஷத்தினுலும் அற்புதமாயும் தகுந்துமிருக்கிற சில சரிதைகளினுலும், பரத்வத்தை யொளிக்காமல் நிர்ணயிக்கக்கூடிய சில அடையாளங்களினுலும் தேவரீரிடத்திலேயே பாரம்யத்தை நிர்ணயிக்கின்றுர்கள்.

* * * — ப்ரஹ்மவித்துக்கள் தத்வ நிர்ணயம் செய்யும் வழிகள் பலவுள்ளன வென்கிருர். [பரமயா ரூபச்ரியா]. * காணிலுமுருப்பொலார் * என்று (திருச்சந்த விருத்தம்) திருமழிசைப்பிரானருளிச் செய்தபடியே, பிணங்களிடு காடதனுள் நடமாடி வெந்தா ரென்பும் சுடுநீறும் மெய்யில் பூசி விரூபாக்ஷனுயிருக்கு மிருப்புப் போலன்றிக்கே * எழிலுடைய வம்மனைமீர்! என்னரங்கத் தின்னமுதர் குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழி லெழுகமலப் பூவழகர் * என்றும் * தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான் * என்றும் * கோலமாமணி யாரமும் முத்துத் தாமமும் முடி வில்லதோரெழில் நீலமேனி * என்றும் சொல்லுகிற திருவுருவவழகு

கொண்டும். [பரமேண தாம்நா] * ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் * என்றும் * ததக்ஷரே பரமே வ்யோமந் * என்றும் சொல்லுகிறபடியே கலமற்றமில்லதோர் நாடு தன்னிலிருப்பாலும். [சித்ரைச் ச சைச்சிதசிதைர் பவதச் சரித்ரை:] * வேதாபஹார குருபாதக தைத்யபீடாத்யாபத் விமோசந * என்று ஆளவந்தார் போல்வார் எடுத்துக்காட்டியவை பலவுமுண்டே; தூணிலிருந்து தோற்றுவதும் கடலிலே அணைகட்டுவதும் ஏழுபிராயத்திலே குன்றெடுத்தாநிரை காப்பதும் * மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை ஓதுவித்ததக்கணையா உருவுருவே கொடுப்பதும், சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதிகன் பிள்ளைகளை உடலொடும் கொண்டு கொடுப்பதும் முதலானவை சொலப்புகில் வாயமுதம் பரக்குமே. அவற்றாலும். [சிஹ்நைரநேகைரபரைச் ச சைச்சித்] லக்ஷ்மீபதித்வம் சேஷசாயித்வம் கருட வாஹநத்வம் முதலானவை பரத்வத்தை முதலிக்கும் சின்னங்களாகையாலே அவற்றைச் சொல்லுகிறது. திருவாய்மொழியில் எம்பெருமானுடைய பரத்வத்தையுபதேசிக்கப் புகுந்த ஆழ்வார் * அணைவது அரவணை மேல் பூம்பாவையாகம் புணர்வது * என்றும் * தீர்த்தனுலகளந்த சேவடி மேல் பூந்தாமம் சேர்த்தியவையே சிவன் முடிமேல்தான் கண்டு, பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை * என்றும் அருளிச்செய்தவை இங்கே அநுஸந்தேயங்கள். [அநிஹ்நவபரை:] நிஹ்நவமாவது அபலாபம்; அதிலே தத்பரங்களல்லாதவை யென்றது—ஸ்பஷ்டமாக நிர்ணயிப்பவை என்றபடி. "அநிஹ்நவ பதை:" என்கிற பாடமும் காண்கிறது. அபலாபத்திற்கு ஆஸ்பதமல்லாத என்றபடி. அபலபிக்க முடியாதவை யென்று கருத்து. [விபச்சித:] விவிதமாகப் பார்க்கவல்ல அறிவுடையார்; மஹாமதிகள் என்றபடி. .... .... ... .... (28)

यस्या: कटाक्षणमनुक्षणमीश्वराणामैश्वर्यहेतुरिति सर्वजनीनमेतत् ।
तां श्रीरिति त्वदुपसंश्रयणान्निराहुस्त्वां च श्रियश्श्रियमुदाहुरुदारवाचः ॥२९॥

யஸ்யா: கடாக்ஷணமநுக்ஷணமீச்வராணாம்
ஐச்வர்யஹேதுரிதி ஸர்வஜநீநமேதத்,
தாம் ஸ்ரீரிதி த்வதுபஸம்ச்ரயணாந்நிராஹு:
த்வாம் ஹி ச்ரியச் ச்ரியமுதாஹுருதாரவாச:. 29

யஸ்யா: கடாக்ஷணம் ஈச்வராணாம் அநுக்ஷணம் ஐச்வர்யஹேதுரிதி ஏதத் ஸர்வஜநீநம்; தாம் த்வத் உபஸம்ச்ரயணாத் ஸ்ரீரிதி நிராஹு:; உதாரவாச: த்வாம் ஹி ச்ரிய: ச்ரியம் உதாஹு:

யாவளொரு பிராட்டியின் கடாக்ஷமானது இந்திரன் முதலிய தேவர்களுக்கும் அடிக்கடி ஐச்வர்யஹேதுவாகிறதென்பது ஸர்வஜநஸம்மதமானதோ, அந்தப் பிராட்டியை தேவரீரிடத்தில் ஆச்ரயித்திருப்பது காரணமாகவே ஸ்ரீயென்று நிருக்தி கூறுகின்றார்கள். உதாரவாக்குக்களான திருமங்கையாழ்வார் போல்வாரும் தேவரீரையேயன்றோ திருவுக்குத்திருவாகிய செல்வனென்கிறார்கள்.

* * * எம்பெருமானுடைய பாரம்யத்தை நிர்ணயிக்க லக்ஷ்மீபதித்வமொன்றே போதுமேயென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார். பிராட்டியின் பெருமையைப் பூர்வார்த்தத்திலருளிச் செய்கிறார். யாவளொருபிராட்டியின் கடாக்ஷமானது ஈச்வரரென்று பேர்பெற்றவர்களுக்கெல்லாம் ஐச்வர்ய ஹேதுவாகின்றதோ, அப்படிப்பட்ட பிராட்டி ஸ்ரீயென்று திருநாமம்பெற்றிருப்பது தேவரீரைப்பற்றி ஸத்தைபெற்றிருப்பதனாலன்றோ? என்பது மூன்றுபாதங்களின் கருத்து. முதலிரண்டு பாதங்களிற் சொன்ன அர்த்தத்தை பட்டர் ஸ்ரீகுணரத்நகோசத்தில் * अपाङ्गा भूयांसो यदुपरि परं ब्रह्म तदभूत् अमी यत्र द्वित्रास्स च शतमखादिस्तदपरात्——அபாங்கா பூயாம்ஸோ யதுபரி பரம் ப்ரஹ்ம ததபூத் அமீ யத்ர த்வித்ராஸ்ஸ ச சதமகாதிஸ் ததபராத் * என்று பண்ணியுரைத்தருளினபடி காண்க. இரண்டாவது பாதத்.

நின் முடியில் ‘ஸார்வஜ்ஞகம்’ என்னும்பாடம் தவறு; அப்படி ரூபம் ஸித்தியாக வழியில்லை; ஸர்வஜ்ஞ மென்பதே சுத்த பாடம்.

[தாம் ஸ்ரீரிதி த்வதுபஸம்ச்ரயணாத் நிராஹுஃ] ஸ்ரீசப்தத்திற்கு ஆறுவகையான வ்யுத்பத்திகள் உள்ளன; அவற்றுள் முதலான வ்யுத்பத்தி ச்ரயதே என்பது. எம்பெருமானைப்பற்றி ஸ்வரூப லாபமடைபவள் என்றபடி. * மலர்மகன் விரும்பும் நமரும் பெறலடிகள் என்றதாயிற்று.

[த்வாம் ஹி ச்ரியஃ ச்ரியமுதாஹுஃ] பிராட்டியினாலே எம்பெருமானுக்கு ஏற்றமென்பதுபோல, எம்பெருமானாலே பிராட்டிக்கு ஏற்றமென்பது முண்டிறே. அதுவும் ப்ராஸங்கிகமாக இங்கு வக்தவ்யமாயிற்று. * திருவுக்கும் திருவாகிய செல்வா * என்றருளிச் செய்த திருமங்கையாழ்வாரையும் * कः श्रीः श्रियः—கச் ஸ்ரீச் ச்ரியஃ * என்றருளிச்செய்த ஆளவந்தாரையும் இங்கு உதாரவாக்குக்களென்கிறார். திருப்பாவையில் * திருவே துயிலெழாய் * (20) என்றவிடத்து ஆறாயிரப்படியில், “உதாரவாக்குக்களாகிறார்—திருமங்கையாழ்வாரும் ஆளவந்தாரும் ஆழ்வானும் பட்டரும்” என்றருளிச்செய்ததும் காண்க. .... (29)

माया त्वयागुण मयी किल या निसृष्टा सा ते विभो ! किमिव नर्म न निर्मिमीते ।
कौतस्कुताः स्थिरकुतर्कवशेन केचित् सत्यां श्रुतौ च बधिरास्त्वयि तन्महिम्ना ॥३०॥

மாயா த்வயா குணமயீ கில யா நிஸ்ருஷ்டா
ஸா தே விபோ ! கிமிவ நர்ம ந நிர்மிமீதே,
கௌதஸ்குதாஃ ஸ்திரகுதர்க்கவசேந கேசித்
ஸத்யாம் ச்ருதௌ ச பதிராஸ் த்வயி தந்மஹிம்நா. 30

ஹேவிபோ ! குணமயீ யா மாயா த்வயா நிஸ்ருஷ்டா கில, ஸா தே கிமிவ நர்ம ந நிர்மிமீதே; கேசித் கௌதஸ்குதாஃ ச்ருதௌ ஸத்யாம் ச ஸ்திரகுதர்க்கவசேந தந்மஹிம்நா த்வயி பதிராஃ

எம்பெருமானே!, குணத்ரயாத்மகமான யாதொரு மாயையானது தேவரீரால் பிணைக்கப்பட்டதோ, அந்த மாயை தேவரீருக்கு எந்தவிளையாட்டைத்தான் விளைக்கமாட்டாதது; [அதுவே தேவரீருடைய லீலைக்கு உபகரணம்.] சிலகுத்ஸிதவாதிகள், தேவரீருடைய பாத்வத்தை விளக்கவல்ல ச்ருதிகள் விளங்காநிற்கவும் அவர்ஜநீயமான துராக்ரஹத்தினால் அந்தமாயையின் பெருமையடியாக தேவரீருடைய பெருமையைக் காதுகொண்டு கேட்பதில் செவிடர்களாயிருக்கிறார்கள்.

* * *—பரமைகாந்திகளான பகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண துரந்தரர்கள் எந்த ப்ரமாணங்களைக்கொண்டு எம்பெருமானுடைய பாரம்யத்தை அறுதியிடுகின்றார்களோ அந்தப்ரமாணங்கள் இவர்களுக்குப்போல மற்றையோர்க்கும் தெரிந்தவையாயிருக்க, அவர்களும் உள்ளபடியறிய ப்ராப்தமாயிருக்க, அங்ஙனமறியாமைக்குக் காரணம் ஏதென்கிற சங்கையிலே அருளிச்செய்வது இந்த ச்லோகம். ஆளவந்தார் * தவ பரிப்ரதிமஸ்வபாவம், மாயாபலேந பவதாபி நிகுஹ்யமாநம் * என்று ஸ்தோத்ரரத்நத்தில் (16) அருளிச்செய்ததையே விரித்துரைக்கிறாரிதில்.

கீதையிலே * தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா * என்று அவன் தானே சொல்லிவைத்தான். * துயக்கறு மதியில்நன்ஞானத்துளமரரைத் துயக்கும் மயக்குடைமாயைகள் வானிலும் பெரியன வல்லன் * என்றார் ஆழ்வார்தாமும். * க்ரீடாவிதேஃ பரிகரஸ் தவ யா து மாயா ஸா மோஹநீ ந கதமஸ்ய து ஹந்த ஜந்தோஃ * என்றார் இவர்தாமே அதிமாநுஷஸ்தவத்தில். ஒருகுருவி பிணைத்த பிணை ஒருவராலவிழ்க்கப் போகிறதில்லை; அப்படியே

எம்பெருமான் தான் பிணைத்த மாயமயக்குப்பிணையும் எவர்க்கும் தப்பவரிதாயிராநின்றது. * மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே * என்று அவன் தானே கூறிவைத்த படியே, "தைவீம் குணமயீம் மாயாம்...தவாஸ்மி தாஸ இதி வக்தாரம் மாம் தாரய"* (சரணாகதிகத்யே.) என்று சொல்லி அவனையே கால்கட்டி விடுவித்துக்கொள்வார்க்கன்றி மற்றையோர்க்கு அந்த மாயாபந்தம் தப்பவரிதாயிறே யிருப்பது. அப்படிப்பட்ட மாயைக்கு வசப்பட்டவர்களாகியே சில குதர்க்கவாதிகள் ப்ரபல ப்ரமாணங்களையும் காற்கடைக் கொண்டு தேவரீருடைய பாரம்யத்தை யறியப் பெறாதே தடுமாறுகின்றன ரென்கிறார்.

[குணமயீ யா மாயா த்வயா நிஸ்ருஷ்டா] * தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா * என்கிற பகவத்வசநத்தையே உட்கொண்டு இது அருளிச்செய்தபடி. 'குணமயீ' என்ற விடத்தில் * அஜாமேகாம் லோஹித சுக்லக்ருஷ்ணாம் * என்ற உபநிஷத்வாக்யம் அநுஸந் தேயம். ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற மூக்குணங்களும் கலந்த கட்டியான என்றபடி. [ஸா தே கிமிவ நர்ம ந நிர்மிமீதே] அந்த மாயை செய்யாத கூத்தில்லை யென்றபடி. அதுசெய்த வொருகூத்தை உத்தரார்த்தத்தாலே மூதலிக்கிறார். [கௌதஸ்குதா:] எது சொன்னாலும் ஒருவரம்பிலே நில்லாதே 'தத் குத:? தத் குத:?' என்றே சோத்யம் செய்துகொண்டிருப் பார்க்குக் கௌதஸ்குதரென்று பெயர். குயுக்தி மாத்ராவலம்பிகளென்றபடி. [ஸ்திர குதர்க்கவசே ந] ப்ராமாணிகர்களான ஸமீசீநார்த்தங்களைப் பெரியார் சொல்லக் கேட்டுங் கூட ஆக்ரஹப் பெருமையாலே பற்றினது விடாதே குதர்க்கமே செய்துகொண்டிருக்குந் தன்மையினாலே. [தந்மஹிம்நா] கீழ்ச் சொன்ன மாயையின் பெருமையினாலே யென்றபடி. [த்வயி பதிரா:] தேவரீர் விஷயத்திலே செவிடர்களா யொழிகின்றார்கள். ஸ்ரீகுணரத்ந கோசத்தில் * லோகே த்வந்மஹிமாவபோத பதிரே * என்றருளிச் செய்தது இதையடி யொற்றியே.

ஆக, மாயையைக்கடந்து சுத்த ஸாத்விகர்களாயுள்ளவர்கள் பகவத் பாரம்யத்தை உள்ளபடி யுணர்ந்து வாழ்ந்து போராநிற்க, குணத்ரயவச்யர்களான சில அவ்யபதேச்யர்கள் இழந்தொழியாநின்றார்கள் என்றதாயிற்று. ... ... (30)

यः स्थावरक्रिमिपतङ्गमतङ्गजादिष्वन्येषु जन्तुषु सदैव विजायमानः ।
त्वं नित्यनिर्मलनिरञ्जननिर्विकारकल्याणसद्गुणनिधे ! स इतीरितस्तैः ॥३१॥

யஸ் ஸ்தாவரக்ரிமிபதங்கமதங்கஜாதிஷு
அந்யேஷு ஜந்துஷு ஸதைவ விஜாயமாந:,
த்வம் நித்யநிர்மலநிரஞ்ஜந நிர்விகார
கல்யாணஸத்குணநிதே! ஸ இதீரிதஸ் தை:. 31

நித்யநிர்மலநிரஞ்ஜநநிர்விகாரகல்யாண ஸத்குணநிதே! ய: ஸ்தாவரக்ரிமிபதங்க மதங்கஜாதிஷு அந்யேஷு ஜந்துஷு ஸதைவ விஜாயமாந:, ஸ: த்வம் இதி தை: ஈரித: (அஸி)

எப்போதும் ஹேயப்ரதிபடமாயும் நிர்லேபமாயும் நிர்விகாரமாயுமிருக்கிற கல்யாணகுணங்களுக்கு நிதி போன்ற எம்பெருமானே! யாவனொரு ஜீவன் ஸ்தா வரங்களான க்ரிமி பக்ஷி கஜாதிகளும் மற்றுமான யோ னிகளிலே இடையறாது பிறந்து கொண்டிருக்கிறானே, அவன் தேவரீரேயென்று அந்தச்செவிடர்களால் சொல்லப்படாநின்றீர்.

* * *—கீழ்ச்லோகத்திலே கௌதஸ்குதா: என்று ப்ரஸ்தாவிக்கப்பட்டவர்களின் ப்ர லாபங்களிலே ஒன்றை யுதாஹரிக்கிறரிதில். ஸ்வாமி யெம்பெருமானார் வேதார்த்தஸங்க்ர ஹத்தின் உபக்ரமத்தில் ஆளவந்தாரை உபச்லோகிக்குமிடத்து,* परं ब्रह्मैवाज्ञं भ्रमपरिगतं संसरति तत् परोपाध्यालीढं विवशमशुभस्यास्पदमिति । श्रुतिन्यायापेतं जगति विततं मोहनमिदं तमो येनापास्तं स हि विजयते

யாமுநமுநி:—பரம் ப்ரஹ்மைவாஜ்ஞம் ப்ரமபரிகதம் ஸம்ஸரதி தத் பரோபாத்யாலீடம் விவசமசு பஸ்யாஸ்பதமிதி, ச்ருதிந்யாயாபேதம் ஜகதி விததம் மோஹநமிதம் தமோ யேநாபாஸ்தம் ஸ ஹி விஜயதே யாமுநமுநி: * என்று, ஆளவந்தார் நிரஸித்தருளின மாயாவாதி மதத்தை ஸங்க்ரஹித்தருளினர். அந்த மதம் யாருடையதோ அவர்களே கௌதஸ்குதர்க ளென்றும் ஸ்திரகுதர்க்கவச்யர்களென்றும் தெரிவியாநின்றுகொண்டு அவர்களுடைய ப்ரலாபப்ரகாரத்தை யெடுத்துரைக்கிறார்.

நித்ய நிர்மல நிரஞ்ஜந நிர்விகாரகல்யாண ஸத்குணநிதே! என்கிற பகவத்ஸம்போதநம் ஸாபிப்ராயம்; அகில ஹேயப்ரத்யநீககல்யாண குணைகதாநரான தேவரீருடைய தன்மைக் குச் சிறிதும் பொருந்தாதபடியன்றோ பிறர் பேசுகின்றார்கள்! என்று வருந்திக்காட்டுகிற படி. பரப்ரஹ்மமே ஸ்வமாயையினாலே மோஹிதமாய் ஜீவபாவத்தையடைகின்ற தென்று சொல்லுகை, *அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யு:* இத்யாதியான கல்யாணகுண ப்ரதிபாதக ச்ருதியோடு சேராதென்று காட்டுகிறபடி. நித்யநிர்மல!, நிரஞ்ஜந!, நிர் விகார, கல்யாண ஸத்குணநிதே! என்று நான்கு ஸம்புத்திகளாகப் பிரித்துக்கொள்வது. நித்ய!, நிர்மல! என்று அதையும் இரண்டாகப் பிரிப்பாருமுளர். ஸ்வரூபதோ நித்ய னானவனே! ஹேயப்ரத்யநீகனானவனே! என்றபடி. [நிரஞ்ஜந!] சேதநர்களை அநுப்ர வேசித்து நிற்கச் செய்தேயும் கர்ம வச்யத்வாதிரூப தோஷங்கள் தொடரப்பெறாதவனே! என்கை. [நிர்விகார!] அசேதநங்களில் அநுப்ரவேசித்திருக்கச் செய்தேயும் விகாரா ஸ்பதமான அவற்றின்படியன்றிக்கே யிருக்குமவனே! என்கை. [கல்யாணஸத்குணநிதே] கல்யாணகுணமென்றோ ஸத்குணமென்றோ சொல்லப் போதுமாயிருக்க இரண்டையும் சேர்த்துச் சொன்னது என்னென்னில்; கல்யாண என்பதனாலே அநுஸந்தானம் செய் பவர்களுக்கு சுபாவஹங்களென்கிறது. ஸத் என்பதனாலே எவ்வளவநுபவித்தாலும் ஊழிதோறூழி யநுபவித்தாலும் குறையாதே அக்ஷய்யமாயிருக்கும்படி சொல்லுகிறது. இப்படிப்பட்ட திருக்குணங்களுக்கு நிதிபோன்றவனே!.

[ஸ்தாவர க்ரிமி பதங்கமதங்கஜாதிஷு அந்யேஷு ஜந்துஷு ஸதைவ விஜாயமாந: ய: ஸ: த்வமிதி தை: ஈரித:] ஸ்தாவர கீட பக்ஷிம்ருகாதிகளாய், தேவரீருடைய ஸ்வரூப ஸ்வபாவங்களுக்கு விஜாதீயமான ஸ்வரூபஸ்வபாவங்களையுடையனவாயிருக்கிற யோநி களிலே மாறிமாறிப்பல பிறப்பும் பிறந்து கொண்டிருக்கிற கர்மவச்யனான ஜீவனுக்கும் அகர்மவச்யரான தேவரீருக்கும் அத்வைதம் சொல்லுகிறார்களே சிலர், அவர்களே கீழ் ச்லோகத்தில் மாயைக்கு வசப்பட்ட செவிடர்களாகச் சொல்லப்பட்டவர்களென்ற தாயிற்று. * க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக: * இத் யாதிச்ருதிகளாலே சிதசிதீச்வர தத்வத்ரயம் தனித்தனியே ஓதப்படாநிற்க, அது கொள்ளாதே ஈச்வரதத்வமொன்றுதானுள்ளதென்று சொல்லுமதில் வருமாபத்தி இத னால் தெரிவிக்கப்பட்டதாயிற்று.

க்ரிமி பதங்க மதங்கஜாதி யோநிகளிலே சேதநன் பிறக்கிறானென்றது யுக்தம்; ஸ்தாவரங்களிலும் பிறப்பதுண்டோ? அதையும் சேர்த்துச் சொல்லியிருப்பது பொருந்து மோவென்று சிலர் சங்கிப்பர்கள்; அதற்குச் சொல்லுகிறோம். பெரியாழ்வார் திரு மொழியில் (4-4-4) * நரகநாசனை நாவிற்கொண்டழையாத மானிடசாதியர் பருகு நீருமுடுக்குங்கூறையும் பாவஞ்செய்தனதான் கொலோ * என்றவிடத்து வியாக்கியா னத்தில் —"........நாமரூபவிசிஷ்டமான ஸகல வஸ்துக்களிலும் ஓரோ ஜீவாதிஷ்டாந முண்டென்று கொள்ளவேணும்" என்றருளிச்செய்து ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலிருந்து ப்ரமாணமெடுத்துக் காட்டுமிடத்து, "சக்தி: க்ஷேத்ரஜ்ஞஸம்ஜ்ஞிதா, ஸர்வபூதேஷு பூபால! தாரதம்யேந வர்த்ததே. அப்ராணிமத்ஸு ஸ்வல்பா ஸா ஸ்தாவரேஷு ததோதிகா." என்னும் வசனம் காட்டியருளினார் மணவாளமாமுனிகள். அதுகொண்டு தெளிக. (13)

त्वद्दृष्टिजुष्टमिदमाविरभूदशेषं नो चेत्कटाक्षयसि नैव भवेत्प्रवृत्तिः ।
स्थातुं च वाञ्छति जगत्तव दृष्टिपातं तेन श्रुतौ जगदिषे हि जगत्त्वमेव ॥३२॥

த்வத்த்ருஷ்டி ஜுஷ்டமிதமாவிரபூதசேஷம்
நோசேத் கடாக்ஷயஸி நைவ பவேத் ப்ரவ்ருத்தி:
ஸ்த்தாதுஞ்ச வாஞ்சதி ஜகத்தவ த்ருஷ்டிபாதம்
தேந ச்ருதௌ ஜகதிஷே ஹி ஜகத் த்வமேவ. (32)

இதம் அசேஷம் த்வத்த்ருஷ்டிஜுஷ்டம் (ஸத்) ஆவிரபூத்; நோசடாக்ஷயஸி சேத் ப்ரவ்ருத்தி: நைவ பவேத்; ஜகத் ஸ்தாதுஞ்ச தவ த்ருஷ்டிபாதம் வாஞ்சதி; தேந ச்ருதௌ த்வமேவ ஜகத் ஜகதிஷே.

(எம்பெருமானே!) இவ்வுலக மெல்லாம் தேவரீருடைய திருக்கண்ணோக்கத்தைப் பெற்றதாய்க் கொண்டு ஆவிர்ப்பாவ மடைந்தது; தேவரீர் கடாக்ஷித்தருளவில்லை யென்றால் (இவற்றுக்கு ஒரு) ப்ரவ்ருத்தியே உண்டாக மாட்டாது; இந்த ஜகத் தானது ஸத்தை பெறுவதற்கும் தேவரீருடைய கடாக்ஷத்தையே விரும்புகின்றது. ஆக இக்காரணங் களினாலேயே வேதங்களில் தேவரீரே ஜகத்தாகச் சொல்லப்படாநின்றீர்.

* * * கீழ்ச்லோகத்தில் அத்வைதவாதிகளின் ஒரு ப்ரலாபத்தை உபக்ஷேபித்த ப்ரஸங்கத்தாலே அத்வைதச்ருதிநிர்வாஹம் காட்டியருளுகிறாரிதில். இந்த ச்லோகத்தின் சரமபாதம் "தேந ச்ருதௌ ஜகதிஷே ஹி ஜகத் த்வமேவ" என்பது; * ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம * ஐததாத்ம்யமிதம் ஸர்வம் * இத்யாதிச்ருதிகளில் ஜகத்துக்கும் ஈச்வரனுக்கும் அபேதம் சொல்லப்பட்டுள்ளது. "ஸிம்ஹோ மாணவக:" "அக்நிர் மாணவக:" இத்யாதிலோகவ்யவஹாரங்களிலே காண்கிற அபேதத்தை நிர்வஹிக்கும் வழியை வ்யுத் பந்நர்கள் யாவரும் உணர்ந்திருக்கிறார்கள். 'அக்நிர் மாணவக:' என்பதொன்றேயன்று; இப்படிப்பட்ட ஸாமாநாதிகரண்ய நிர்தேசம் உலகிற் பலவாறு காண்பதுண்டு. கார்ய காரண பாவம், சரீரசரீரிபாவம், ஸமாநதர்ம வைசிஷ்ட்யம் முதலான பலபடிகளாலே அபேத நிர்வாஹம் செய்யக்கடவதாயிருக்கும். ஜகத்துக்கும் ப்ரஹ்மத்துக்கு முண்டான அபேதவ்யபதேசம் நிர்வஹிக்கப்பட வேண்டிய வழி இந்த ச்லோகத்தி லருளிச்செய் யப்படுகிறது. ஸ்ரீரங்க கத்யத்தில் * ஸ்வாதீநத்ரிவித சேதநாசேதந ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம் * என்றருளிச்செய்த சூர்ணை இங்கு அநுஸந்தேயம்.

[இதம் அசேஷம் த்வத்த்ருஷ்டிஜுஷ்டம் (ஸத்) ஆவிரபூத்] ஸ்ருஷ்டிக்கு முன் எம்பெருமான் ஸ்ருஜ்யவஸ்துக்களில் திருக்கண் சாத்துகிறானென்பதைச் சொல்லுகிற உபநிஷத்தில் * தத் ஐக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி * என்னப்பட்டது. இங்கு ஐக்ஷத என்றிருப்பதைக் கடாக்ஷித்தே 'த்வத்த்ருஷ்டி ஜுஷ்டம்' என்றருளிச்செய்தார். ஈக்ஷணமாவது அநுக்ரஹத்தோடுகூடிய ஸங்கல்பம். த்ருஷ்டி என்றதுமதுவே. தேவரீர் அநுக்ரஹ விசிஷ்டராய்க்கொண்டு ஸங்கல்பஞ் செய்தருளவேதான் கார்யவர்க்கங்க ளெல்லாம் உண்டாயின. இப்படி உண்டாகைக்குக் காரணமான ஈக்ஷணமேதான் அந்தந்த வஸ்துக்களின் ப்ரவ்ருத்திகளுக்கும் காரணமென்பதை இரண்டாவது பாதத்தில் வ்யதிரேகமுகேந அருளிச்செய்கிறார் [நோசேத் கடாக்ஷயஸி நைவ பவேத் ப்ரவ்ருத்தி:] அவ்வோவஸ்துக்களின் உத்பத்திக்கே ஈக்ஷணம்தான் காரணமென்னும்போது, உத்பந்நங் களான கார்யவர்க்கங்களின் ப்ரவ்ருத்திக்கும் அந்த ஈக்ஷணமே காரணமென்பது சொல் லவும் வேணுமோ? தேவரீர் கடாக்ஷித் தருளாவிடில் ப்ரவ்ருத்தியு மில்லையாகுமன்றோ-

[ஜகத் ஸ்தாதுஞ்ச தவ த்ருஷ்டிபாதம் வாஞ்சதி] 'ஸ்தாதும்' என்றது ஸ்திதியைப் பெறுவதற்கு என்றபடி. ஸ்திதியாவது நிலைத்து நிற்கை; ரக்ஷணம் பெறுகையிலே பர்யவஸிதம். ஆக, ரக்ஷிக்கப் பெறுவதற்கும் தேவரீருடைய கடாக்ஷத்தையே ப்ரதி க்ஷியாநின்றதெனகை. * ந ஹி பாலந ஸாமர்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம் * என்னக் கடவதிறே. [தேந] கீழ் மூன்று பாதங்களிலுமருளிச் செய்த மூன்று விஷயங்களையும் உபஸம்ஹரிக்கிறபடி. ஜகத்தினுடைய உத்பத்தி ப்ரவ்ருத்தி ஸ்திதிகள் தேவரீருக்கு அதீநமாயிருக்கையாலே யென்றபடி. [ச்ருதௌ த்வமேவ ஜகத் ஜகதிஷே] வேத வேதாந்தங்களில் தேவரீரே ஜகத்தாகச் சொல்லப்படாநின்றீர். இவ்வர்த்தத்தை பட்டர் * स्थित्युत्पत्तिप्रवृत्तिप्रसननियमनव्यापनैरात्मनस्ते शेषोऽशेषः प्रपञ्चो वपुरिति भवतस्तस्य चाभेदवादाः * என்கிற ச்லோகத்தினால் வியாக்கியானித்தருளினர்.

ஜகதிஷே—சொல்லப்பட்டாய். 'गद—व्यक्तायां वाचि' என்கிற தாதுவில் கர்மணி லிட்டில் மத்யமபுருஷ ஏகவசநரூபமிது. ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் * தேஹோ தேஹீதி காரணே * என்னும் ச்லோகத்தில் * விச்வம் த்வய்யபிமந்யஸே ஜகதிஷே தேநாத்வதீயஸ் ததః * என்றருளிச்செய்யப்பட்டதும் இங்கே நினைக்கத்தக்கது. (32)

* पुनरपि व्याख्यायते:—வேதாந்தங்களில் காணும் அத்வைத வாதத்தைக் கண்டு உண்மையுணராது பலர் மயங்குவர்; * ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம * என்பது போன்ற பல ச்ருதி வாக்கியங்களில் ஜகத்துக்கும் ப்ரஹ்மத்துக்கும் அபேதம் சொல்லப்பட்டிருப்பதானது எதனாலென்பதை அத்வைதிகள் உணரப்பெறாமல், ஜகத்துக்கும் ப்ரஹ்மத்துக்கும் உண்மையாகவே அபேதமிருப்பதாகவும் அதையே ச்ருதிகள் சொல்லியிருப்பதாகவும் கூறுகின்றார்கள். அது தவறு. "அக்நிர் மாணவகஃ," "ஸிம்ஹோ மாணவகஃ," என்றால், நெருப்பும் மாணவகனும் ஒன்று, சிங்கமும் மாணவகனும் ஒன்று என்று உண்மையாகவே அபேதம் விவக்ஷிதமன்றே. சில அம்சங்களிலுள்ள ஸாம்யத்தை யிட்டு அபேதமாகச் சொல்லுகிறதித்தனை. அபேதமாகச் சொல்லுவதற்கு ஸாம்ய மென்கிற ஒன்று மாத்திரம் மூலமன்று; மற்றும் பலவுமுண்டென்பதை லோகாநுபவத்திற் காண்கிறோம். "அமாத்ய: ராஜைவ" [மந்திரியும் அரசனும் ஒருவனே] என்கிறோம்; இதனால் இரண்டு வ்யக்திகள் இல்லையென்றும் ஒரேவ்யக்திதானுள்ளதென்றும் தேறிவிடுமோ? 'இருவரும் ஒரே கருத்தினர்' என்கிற விவக்ஷையினால் இருவரையும் ஒருவராகவே சொல்லி விடுகிறோம். அபேதவ்யபதேசத்திற்கு இங்ஙனே பல நிபாமகங்களுண்டு. ஜகத்துக்கும் ப்ரஹ்மத்திற்கு முண்டான அபேதவ்யபதேசத்திற்கு நிபாமகம் இந்தச்லோகத்தில் அருளிச் செய்யப்படுகிறது. பரப்ரஹ்மத்திற்கு அதீனமான உத்பத்தியையும், பரப்ரஹ்மத்திற்கு அதீனமான ஸத்தையையும், பரப்ரஹ்மத்திற்கு அதீநமான ப்ரவ்ருத்தியையும் உடையது ஸகல ஜகத்தும்; இவ்விஷயமே ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * स्वाधीनत्रिविधचेतनाचेतनस्वरूपस्थितिप्रवृत्तिभेदम्—ஸ்வாதீநத்ரிவிதசேதநாசேதந ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்தி பேதம் * என்கிற சூர்ணையினால் சொல்லப்பட்டது. திருவாய் மொழியில் முதற்பதிகத்தில் * நாமவனிவனுவன் * அவரவர் தமதமது * நின்றனரிருந்தனர் * என்கிற மூன்று பாசுரங்களினாலும் முறையே இதுதான் அருளிச் செய்யப்பட்டது. ஆக ஜகத்தானது பரப்ரஹ்மத்திற்கு ஸ்வாதீநோத்பத்திகமாயும் ஸ்வாதீநஸ்திதிகமாயும் ஸ்வாதீநப்ரவ்ருத்திகமாயு மிருக்கையாலே ப்ரஹ்மத்திற்கும் ஜகத்துக்கும் அபேதவாதம் ச்ருதிகளில் நிகழ்ந்ததாயிற்று என்பது இந்தச்லோகத்தினால் சொல்லப்பட்டதாயிற்று.

[தவத்ருஷ்டிஜுஷ்டமிதம் ஆவிர்பூதசேஷம்] என்கிற முதல் பாதத்தினால் எம்பெருமானுடைய ஸங்கல்பத்தினாலேயே உலகமெல்லாம் உண்டானமை சொல்லிற்று. [நோசேத் கடாக்ஷயஸி நைவ பவேத் ப்ரவ்ருத்தி:] என்கிற இரண்டாம் பாதத்தி

ளுல் எம்பெருமானுடைய ஸங்கல்பத்தினுலேயே உலகமெல்லாம் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்குக் கடவதாகின்ற தென்னுமிடம் சொல்லிற்று. [ஸ்தாதுஞ்ச வாஞ்சதி ஜகத் தவ த்ருஷ்டிபாதம்] என்கிற மூன்ரும் பாதத்தினுல் எம்பெருமானுடைய ஸங்கல்பத்தினுலேயே உலகமெல்லாம் ஸத்தை பெறுகின்ற தென்னுமிடம் சொல்லிற்று. ஜகத்துக்கும் ப்ரஹ்மத்துக்கும் ச்ருதிகளில் சொல்லப்பட்டுள்ள அபேதத்திற்கு இவையே நியாமகமென்று நான்காம் பாதத்தினுல் சொல்லித் தலைக்கட்டப்பட்டதாயிற்று. .... ...(32).

एवं भगो ! इह भवत्परतन्त्र एव शब्दोऽपि रूपवदमुष्य चराचरस्य ।
ऐश्वर्यमीदृशमिदं श्रुतिषूदितं ते पापीयसामयमहो त्वयि मोहहेतुः ॥३३॥

**ஏவம் பகோ இஹ பவத்பரதந்த்ர ஏவ**
**சப்தோபி ரூபவதமுஷ்ய சராசரஸ்ய,**
**ஐச்வர்யமீத்ருசமிதம் ச்ருதிஷூதிதம் தே**
**பாபீயஸாமயமஹோ த்வயி மோஹஹேது:** (33)

ஹே பகோ! இஹ அமுஷ்ய சராசரஸ்ய சப்தோபி ரூபவத் ஏவம் பவத்பரதந்த்ரஃ ஏவ ; ஈத்ருசம் இதம் ஐச்வர்யம் தே ச்ருதிஷு உதிதம்; அயம் பாபீயஸாம் த்வயி மோஹஹேது: அஹோ.

பகவானே! இங்குக் காணப்படுகின்ற ஸகல சராசரங்களினுடையவும் நாமருபங்கள் இப்படி தேவரீரிட்ட வழக்கே; இப்படிப்பட்ட இந்த வைபவமானது தேவரீருடையதாக வேதங்களில் ஓதப்பட்டது. ஆனல் இந்த ஐச்வர்ய குணமானது தௌர்ப்பாக்ய சாலிகளுக்கு தேவரீர் திறத்து மோஹ ஹேதுவாகின்றதந்தோ!.

* * * கீழ்ச்லோகத்தில் * **ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம** * இத்யாதி ஸாமாநாதிகரண்ய நிர்வாஹம் பண்ணத் தொடங்கினர்; அதற்கு சேஷபூதமாகவே இந்த ச்லோகமும் அவதரிக்கின்றது. भगो ! என்றது भगवन् ! என்றபடி. * **விபாஷா பவத்பகவதித்யாதி** அநுசாஸநத்தினுல் **பகவந்!** என்பதற்குப் பர்யாயமாக **பகோ!** என்றும் ரூபஸித்தியாகுமென்றுணர்க. எம்பெருமானே! [**அமுஷ்ய சராசரஸ்ய**] கண்ணுற் காணப்படுமிந்த சராசரங்களினுடைய. [**ரூபவத் சப்தோபி பவத்பரதந்த்ர ஏவ**] 'ரூபவத்' என்றது ரூபமுமெனறபடி. "தேவதத்தன் யஜ்ஞதத்தன் போல யோக்யன்" என்ருல் 'தேவதத்தனும் யஜ்ஞதத்தனும் யோக்யர்கள்' என்று பொருள்படுவதுபோல் இதனைக் கொள்க. ரூபமும் நாமமும் தேவரீரிட்டவழக்கு. * **அநேந ஜீவேநாத்மநா அநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி** * என்று ச்ருதி ஓதினபடியே ஒவ்வொன்றிலும் அநுப்ரவேசித்து நாமரூப வ்யாகரணம் பண்ணிற்றுதேவரீரேயாகையாலே அதுகாரணமாக ஸர்வவஸ்து ஸாமாநாதிகரண்யம் தேவரீருக்கு யுக்தமானதேயென்று காட்டினபடி. * ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் புவநாநி விஷ்ணு: * இத்யாதியாக ஸம்ஸ்க்ருதவேதங்களும். * தீயாய் நீராய் நிலனுய் விசும்பாய்க்காலாய்த் தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய் * இத்யாதியாக த்ராவிடவேதங்களும் ஸகலபதார்த்தங்களோடும் தேவரீரை ஸமாநாதிகரித்துச் சொல்லியிருக்கையாகிற இப்பெருமை தேவரீருக்கே அஸாதாரணமென்கிறது மூன்ருவது பாதத்தினுல். ஸர்வவஸ்து ஸாமாநாதிகரண்யார்ஹத்வமாகிற வஸ்துபரிச்சேதராஹித்யம் எம்பெருமானுக்குண்டான ஐச்வர்யங்களுள் ஒன்ருதலால் [**ஐச்வர்யமீத்ருசமிதம் ச்ருதிஷு உதிதம் தே**] என்ருர்.

சாஸ்த்ரங்களிற் காணும் ஸாமாநாதிகரண்யத்தை இங்ஙனே நிர்வஹிக்கவேணுமென்பதறியாதே, வஸ்துதோ பேதமேகிடையாதென்று சிலர் [அத்வைதிகள்] ப்ரமிப்பதானது பாபப்ராசுர்யத்தினுலத்தனை யென்கிருர் நான்காவது பாதத்தினுல், [**அயம் பாபீயஸாம் த்வயி மோஹஹேது:**] இங்கு **அயம்** என்கிற பும்லிங்க நிர்தேசமானது மேலுள்ள

ஹேதுஃ' என்ற பதத்தை நோக்கி. * சைத்யம் ஹி யத் ஸா ப்ராக்ருதிர் ஜலஸ்ய * என்ற ப்ரயோகத்தைநினைப்பது. * க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர ! * என்ற யதிராஜ விம்சதி ப்ரயோகமு மித்தகைத்தே. ஆக இந்த ச்லோகத்திஞல் சொல்லிற்றுயிற்றதென்னென்னில் ; எம்பெருமான் ஸகல சராசரங்களிலுமுள்ள ஒவ்வொரு வஸ்துவிலும் அநுப்ரவேசித்து நாமரூபங்களை வகுத்தது காரணமாகவே அப்பெருமான்தானே ஸகல பதார்த்தங்களாகவும் (அபேதமாகச்) சொல்லப்படாநின்றுன் ; இது எம்பெருமானுக்கு அஸாதாரணமானவொரு சிறப்பு; இவ்வுண்மையைச் சிலர் தெரிந்துகொள்ளாமல். வஸ்துதஃ நாநாவஸ்துக்கள் இடையாவென்றும். நாநாவாகத்தோற்றுவது மாயாவிலஸித மென்றும் ஒன்றே யுள்ளதென்றும் சொல்லுகிறார்கள். அது மருளேயன்றித் தெருளன்று—என்றதாயிற்று. ... ... ... ... (33)

ये त्वत्कटाक्षलवलक्ष्यमिव क्षणं तैरैश्वर्यमीदृशमलभ्यमलम्भि पुंभिः ।
यत्केऽपि सञ्जगरिरे परमेशितृत्वं तेषामपि श्रुतिषु तन्महिमप्रसङ्गात् ॥३४॥

**யே த்வத்கடாக்ஷலவலக்ஷ்யமிவ க்ஷணம் தைஃ**
**ஐச்வர்யமீத்ருசமலப்யமலம்பி பும்பிஃ,**
**யத் கேபி ஸஞ்ஜகரிரே பரமேசித்ருத்வம்**
**தேஷாமபி ச்ருதிஷு தந்மஹிமப்ரஸங்காத். (34)**

யே க்ஷணம் த்வத் கடாக்ஷ லவ லக்ஷ்யமிவ (அபூவந்) தைஃ பும்பிஃ அலப்யம் ஈத்ருசம் ஐச்வர்யம் அலம்பி; கேபி தேஷாமபி பரமேசித்ருத்வம் ச்ருதிஷு ஸஞ்ஜகரிரே இதியத். (தத்) தந்மஹிம ப்ரஸங்காத்.

(எம்பெருமானே!) எவர்கள் க்ஷண்காலம் தேவரீருடைய ஸ்வல்ப கடாக்ஷத்திற்கு இலக்கானுர்களோ, அப்புருஷர்களால் அருமையான இப்படிப்பட்ட ஐச்வரியம் அடையப்பட்டது. சிலர், அப்புருஷர்களுக்கும் வேதங்களில் பாரம்யம் சொல்லப்பட்டிருப்பதாகச் சொல்லுகிறார்க ளென்பது (எதனுலென்னில்) அப் பெருமானுடைய பெருமையில் ஏகதேசமிருப்பதனுலே.

* * * ஸ்ரீமந்நாராயணனைத் தவிர்த்து இதர தேவதைகளிடத்திலும் ஈச்வர சப்தமும் பரமேச்வர சப்தமும் வழங்கிவரக் காண்கையாலே அந்த தேவதாந்தரங்களுக்கும் பரத்வமுண்டோவென்று சங்கிப்பார்க்குத் தெளிவு பிறக்கும்படி இந்த ச்லோக மருளிச் செய்யப்படுகின்றது. [யே க்ஷணம் த்வத்கடாக்ஷலவலக்ஷ்யமிவ, தைஃ பும்பிஃ ஈத்ருசம் அலப்யம் ஐச்வர்யம் அலம்பி] ஜகத்ஸ்ருஷ்டியை எம்பெருமானொருவனே பண்ணுகிறுனென்னில், பதினன்கு லோகங்களைப் படைப்பவனுக நான்முகனுளன் ; நித்ய ஸ்ருஷ்டி கர்த்தாக்களாக தசப்ரஜாபதிகள் உள்ளார்கள், மற்றும் ஸமய விசேஷங்களிலே விச்வாமித்ராதிகளும் * அந்யமிந்த்ரம் கரிஷ்யாமி * என்று ஸங்கல்பித்து ஓரோஸ்ருஷ்டிகளைச் செய்ததாகக் காண்கிறோமே; அந்தப் பெருமை அவர்களுக்கு எப்படி யுண்டாயிற்றென்ன; அதெல்லாம் எம்பெருமானுடைய கடாக்ஷ லவலேசத்திஞலுண்டான பெருமையே யென்கிறது.

* युगकोटि सहस्राणि विष्णुमाराध्य पद्मभूः । पुनस्त्रैलोक्यधातृत्वं प्राप्तवानिति शुश्रुम.—யுககோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூஃ, புநஸ் த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதி சுச்ரும. * என்பதை இங்கே அநுஸந்திப்பது. "கடாக்ஷ லவலக்ஷ்யம்" என்றுதே "லக்ஷ்யமிவ" என்கையாலே அந்த பகவத் கடாக்ஷந்தானும் நன்றுக விழுந்ததோ இல்லையோ வென்று ஸந்தேஹிக்கும்படியான நிலைமை காட்டப்பட்டது. அத்யல்ப கடாக்ஷத்தின் பலனுகவே பிரமன் முதலானுர்க்கு இப்படிப்பட்ட பெருமையுண்டாயிற்

றென்றபடி. [அலப்யம் ஐச்வர்யம்] ஸாமாந்ய புருஷர்களுக்குக் கிடைக்கமாட்டாத தான பெருமை என்றபடி.

[யத்கேபி இத்யாதி.] பரமேச்வரனென்கிற ப்ரஸித்தியை ருத்ரனிடத்திலே காணு நின்றோம்; "வந்தே பார்வதீ பரமேச்வரௌ" என்கிறார்கள் மஹாகவிகளும். இது எப்படி பொருந்தும்? * தமீச்வராணாம் பரமம் மஹேச்வரம் * என்று உபநிஷத்துக்களிலே ஸ்ரீமந்நாராயணனுக்கே பரமமஹேச்வரத்வம் சொல்லப்படாநிற்க, இதரதேவதைக்குப் பரமேச்வரத்வம் பொருந்துகிறபடி எங்ஙனே? என்ன; [தந்மஹிம ப்ரஸங்காத்] என்கிறார். எம்பெருமானுடையதான பெருமையின் ஏகதேசஸம்பந்தம் இருப்பதனாலே என்றபடி. * अन्यत्र तद्गुणलेशयोगात् औपचारिकः—அந்யத்ர தத்குண லேசயோகாத் ஔபசாரிகः * என்கிற ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியை இங்கே ஸ்மரிப்பது. 'ஸஞ்ஜஜ்ஞிரே' என்ற பாடம் நவீநமாகையாலே மறுக்கத்தக்கது. அப்படி ரூபம் தேறாது. (34)

नित्येषु वस्तुषु भवन्निरपेक्षमेव तत्तत्स्वरूपमिति केचिदिह भ्रमन्तः ।
ऐश्वर्यमत्र तव सावधि सङ्गिरन्ते ब्रूते त्रयी तु निरुपाधिकमीशनं ते ॥३५॥

*நித்யேஷு வஸ்துஷு பவந்நிரபேக்ஷமேவ*
*தத்தத்ஸ்வரூபமிதி கேசிதிஹ ப்ரமந்த:,*
*ஐச்வர்யமத்ர தவ ஸாவதி ஸங்கிரந்தே*
*ப்ரூதே த்ரயீ து நிருபாதிகமீசநம் தே.* **(35)**

**(பகவந்!) இஹ கேசித் நித்யேஷு வஸ்துஷு தத்தத் ஸ்வரூபம் பவந்நிரபேக்ஷமேவ இதி ப்ரமந்த: அத்ர தவ ஐச்வர்யம் ஸாவதி ஸங்கிரந்தே, த்ரயீ து தே ஈசநம் நிருபாதிகம் ப்ரூதே.**

(எம்பெருமானே!) இவ்வுலகில் சில அறிவிலிகள் நித்ய வஸ்துக்களில் அவ்வவற்றின் ஸ்வரூபம் தேவரீரையபேக்ஷியாமலே ஸ்வத ஏவ நித்யமாயிருப்பதாக மருள் கொண்டவர்களாய் இவ்விஷயத்தில் தேவரீருடைய ஐச்வரியத்தை ஸாவதிகமாகக் கூறுகின்றார்கள்; வேதமோ என்றால் நிருபாதிகமான ஐச்வரியத்தையே தேவரீருக்குக் கூறுகின்றது.

* * *—எம்பெருமானுடைய பெருமையில் குறைநினைப்பாருடைய ஒருவிதமான நினைவை அநுவதித்துக் கண்டிக்கிறார் இந்த ச்லோகத்தினால். எம்பெருமானை ஸகல ஜகத்காரண பூதனாக இசைந்தால் நித்ய வஸ்துக்களைத்தவிர்த்து அநித்ய வஸ்துக்களுக்கு மாத்திரமே எம்பெருமான் காரணபூதன் என்றிசையவேண்டும்; நித்ய வஸ்துக்களுக்குங்கூட அவனே காரண பூதனென்று இசைந்தால் அப்போது அந்த வஸ்துக்களுக்கு நித்யத்வமானது வ்யாஹதமாகும்; 'மம மாதா வந்த்யா' (என் தாய் மலடி) என்பதுபோலே அநுபபந்நமான உக்தியாகும். ஆகவே, நித்யவஸ்துக்களில் எம்பெருமானுக்குக் காரணத்வம் கிடையாதென்றே கொள்ளவேண்டும்; இங்ஙனே கொள்ளுமளவில் 'ஸகலவஸ்துஸ்வரூபமும் பகவத் ஸங்கல்பாதீநமே' என்கிற வாதம் குலைந்ததாகும். நித்ய வஸ்துக்கள் தவிர மற்ற வஸ்துக்களின் ஸ்வரூபமே பகவத் ஸங்கல்பாதீநமென்று கொள்ளவேண்டியதாமே; அப்படி கொண்டாலென்ன? என்னில்; அப்போது எம்பெருமானுடைய பெருமைக்கு ஸங்கோசம் விளைந்ததாயிற்றன்றோ? அவனுக்கு நிரவதிகமான ஐச்வர்யம் கிடையாது ஸாவதிகமாகவே அது உள்ளது என்று கொள்ள வேண்டிற்றாகும—என்பர் உண்மையுணராதவர்கள். இவ்விஷயத்தை மூன்றுபாதங்களினாலே அருளிச்செய்து, [ப்ரூதே த்ரயீ து நிருபாதிகம் ஈசநம் தே] என்கிற நான்காவது பாதத்தினாலே அந்தவாதம் வேதாந்த விருத்தம் என்று க்ஷேபித்தருளுகிறார். * பதிம் விச்வஸ்யாத்மேச்வரம் * பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே * என்றிவை முதலான ச்ருதி வாக்யங்களில் எம்பெருமானுக்கு நிரவதிகமானபெருமை பேசப்படாநிற்க, அதை ஸங்குசிதமாக்குவது ஸமுசிதமன்றுஎன்றபடி.

ஆனால், நித்யவஸ்துக்கள் திறத்திலும் எம்பெருமானுக்குக் காரணத்வம் இசைய முடியுமோ வென்னில், அதைப்பற்றி அடுத்த ச்லோகத்தில் அருளிச் செய்யப்படுவது காண்க. ... ... ... ... (35)

इच्छात एव तव विश्वपदार्थसत्ता नित्यं प्रियास्तव तु केचन ते हि नित्याः ।
नित्यं त्वदेकपरतन्त्रनिजस्वरूपा भावत्कमङ्गलगुणा हि निदर्शनं नः ॥३६॥

*இச்சாத ஏவ தவ விச்வபதார்த்தஸத்தா*
*நித்யம் ப்ரியாஸ் தவ து கேசந தே ஹி நித்யா:,*
*நித்யம் த்வதேகபரதந்த்ர நிஜஸ்வரூபா:*
*பாவத்கமங்கலகுணா ஹி நிதர்சநம் ந:.* **(36)**

விச்வபதார்த்தஸத்தா தவ இச்சாத: ஏவ; கேசந து தவ நித்யம் ப்ரியா:, தே ஹி நித்யா:; நித்யம் த்வதேக பரதந்த்ர நிஜஸ்வரூபா: பாவத்கமங்கலகுணா: ஹி ந: நிதர்சநம்.

*(எம்பெருமானே!) ஸகல பதார்த்தங்களினுடையவும் ஸத்தையானது தேவரீருடைய இச்சையினாலேயேயாகும்;. தேவரீருடைய நித்யேச்சைக்கு விஷயபூதங்களான சில வஸ்துக்களே நித்ய வஸ்துக்களாம்; எப்போதும் தேவரீரொருவர்க்கே அதீநமான ஸ்வரூபத்தையுடையவைகளான தேவரீரது திருக்கல்யாண குணங்களே (இவ்விஷயத்தில்) நமக்கு உதாஹரணமாகும்.*

* * * கீழ்ச்லோகத்திற்கு சேஷபூதமானது இந்த ச்லோகம். நித்யவஸ்துக்களினுடைய ஸத்தையும் எம்பெருமானுடைய அதீநந்தானென்னுமிடம் உபபத்தியுடன் மூதலிக்கப்படுகிறது இதில். [விச்வ பதார்த்தஸத்தா தவ இச்சாத ஏவ] நித்ய வஸ்துக்கள் அநித்யவஸ்துக்கள் எனகிற விபாகமின்றிக்கே ஸகலபதார்த்தங்களினுடையவும் ஸத்தையானது எம்பெருமானுடைய ஸங்கல்பாதிநமேயா மென்றபடி. அப்படியானால் சில பதார்த்தங்களுக்கு நித்யவஸ்துக்களென்னும் பெயர் வந்தபடியெங்ஙனே? எம்பெருமானுடைய இச்சையுண்டானபோது உண்டாகி அது இல்லையானபோது இல்லையாக வேண்டுமே; ஆகவே நித்யவஸ்து வென்னக்கூடாதே எனகிற சங்கைக்குப் பரிஹாரம் உணர்த்துகிறது இரண்டாம் பாதம் [நித்யம் ப்ரியாஸ் தவ து கேசந தே ஹி நித்யா:] 'இவை நித்யமாயிருக்கக்கடவன' என்று நித்யேச்சாவிஷய பூதங்களானவை நித்யவஸ்துக்களென்னப்படுகின்றன என்றபடி.

நம்முடைய ஸித்தாந்தத்தில் எல்லாவஸ்துக்களுமே நித்யங்களாகக் கொள்ளப்படுகின்றன. உலகில் நம்கண்முனனே அழியும் பல பதார்த்தங்களைக்காணுகின்றோம்; அவை அநித்யம்போல் தோன்றினாலும் அவையும் ஒருபடி நித்யங்களேயாம்; அவை ப்ரவாஹதோ நித்யங்களென்னப்படும். சிலபானைகளும் சிலதுணிகளும் சிலவீடுகளும் அழிந்து போனாலும் அவற்றோடு ஸஜாதீயங்களாயுள்ள வஸ்துக்கள் எங்கும் எப்போதும் பல பல காணப்படுகையாலே அவை ப்ரவாஹதோ நித்யங்களெனப்படுகின்றன. அவற்றைப் பற்றி இங்கு விசாரமில்லை. ஸ்வரூபதோ நித்யங்களான வஸ்துக்களைப்பற்றியே இங்கு சங்கையும் பரிஹாரமும் நிகழ்கின்றன, ஸத்தான பதார்த்தத்தினுடைய உத்பத்தி விநாச அத்யந்தாபாவமே ஸ்வரூபேண நித்யத்வமெனப்படுகிறது. உத்பத்திவிநாசங்கள் கூடாநிற்கச் செய்தேயும் பூர்வகாலத்திலுண்டான நாமரூப லிங்காதிகளின் மாறுபாடு சிறிதுமில்லாமை ப்ரவாஹரூபேண நித்யத்வம். சித்து அசித்து காலம் என்னுமிவை ஸ்வரூபதோ நித்யங்களாகையாலே இவற்றைப்பற்ற எம்பெருமானுக்குக் காரணத்வம் இசையவேண்டாமையாலே சங்கைக்கு உதயமுண்டாயிற்று. இவற்றின் விஷயத்திலும் எம்பெருமானுக்கு நித்யஸங்கல்பமுள்ளதென்று கொண்டு சங்காபரிஹாரம் செய்யப் பட்டதாயிற்று.

இதற்கு த்ருஷ்டாந்தமொன்று காட்டப் படுகிறது உத்தரார்த்தத்தினால். ஸத்ய காமத்வ ஸத்யஸங்கல்பத்வ ஸர்வஜ்ஞத்வாதிகளான திருக்கல்யாண குணங்கள் ஸ்வரூப தோ நித்யங்களே ; ஆனாலும் இவை பகவததீநமான ஸத்தையையுடையன என்பது நிர்விவாதம். இவை நித்யங்களாயிருக்கச் செய்தேயும் பகவதேகபரதந்த்ர நிஜஸ்வரூபங் களாயிருக்கக் குறையில்லையே. ஆகவே நித்யவஸ்துக்கள் திறத்திலே பகவத்ஸங்கல் பத்தை ஒதுக்கவேண்டிய ப்ரஸக்தி யில்லாமையாலே கீழ்ச்லோகத்தில் " கேசித் இஹ ப்ரமந்த: " என்று அருளிச்செய்தது மிகப்பொருத்தமென்றுணர்க. நித்யவஸ்துக்களின் ஸ்வரூபமும் பகவத்ஸாபேக்ஷமேயல்லது தந்நிரபேக்ஷமன்று என்று நிகமிக்கப்பட்ட தாயிற்று. ... ... ... (36)

विश्वस्य विश्वविधकारणमच्युत ! त्वं कार्यं तदेतदखिलं चिदचित्स्वरूपम् ।
त्वं निर्विकार इति वेदशिरस्सु घोषो निस्सीममेव तव दर्शयतीशितृत्वम् ॥३७॥

**விச்வஸ்ய விச்வவிதகாரணமச்யுத ! த்வம்**
**கார்யம் ததேததகிலம் சிதசித்ஸ்வரூபம்,**
**த்வம் நிர்விகார இதி வேதசிரஸ்ஸு கோஷ:**
**நிஸ்ஸீமமேவ தவ தர்சயதீசித்ர்த்வம்.** (37)

**ஹே அச்யுத ! விச்வஸ்ய விச்வவித காரணம் த்வம் ; சிதசித் ஸ்வரூபம் ததேதத் அகிலம் கார்யம் ; த்வம் நிர்விகார: இதி வேதசிரஸ்ஸு கோஷ : தவ நிஸ்ஸீமமேவ ஈசித்ர்த்வம் தர்சயதி.**

எம்பெருமானே ! எல்லாவற்றுக்கும் எல்லாவகை யான காரணமும் தேவரீரேயாகின்றீர் ; சேதநா சேதநாத்மகமான இவையெல்லாம் தேவரீருக்குக் காரியப்பொருளாகின்றன ; தேவரீர் விகாரமற்ற வரென்று வேதாந்தங்களில் முறையிடப்படுவதா னது தேவரீருடைய எல்லைகடந்த சக்திவிசேஷத் தைக் காட்டுகின்றது.

* * * உலகுக்கெல்லாம் எம்பெருமானே மூவகைக்காரணமு மொன்று அருளிச் செய்து, உபாதாநகாரணமும் எம்பெருமானேயாயில் அவனுக்கு விகாரித்வம் வருமே யென்கிற சங்கைக்குப் பரிஹாரமுமருளிச் செய்கிறார் இந்த ச்லோகத்தில். [**ஹே அச்யுத ! த்வம் விச்வஸ்ய விச்வவித காரணம்**] உலகில் நாம் ஒவ்வொரு பதார்த்தமு முண்டாகைக் குறுப்பாக மூவகைக் காரணங்களைக் காணுகின்றோம் ; உபாதாந காரணம், ஸஹகாரி காரணம், நிமித்தகாரணம் என்பன அவை. ஒருபானை யுண்டாகவேணுமானால் மண் என் கிற உபாதாந காரணமும், தடி சக்கரம் தண்ணீர் முதலான ஸஹகாரி காரணமும், குயவ னென்கிற நிமித்த காரணமும் வேண்டியிரா நின்றன. ஒரு துணியுண்டாக வேணுமா னால் நூல் என்கிற உபாதாந காரணமும் துரீவேமாதிகளான ஸஹகாரி காரண கலாப மும், சேணிய னென்கிற நிமித்தகாரணமும் வேண்டியிரா நின்றன. இங்ஙனே ஒவ்வொன் றிலும் காணலாம். முழுமுதற் பிரபஞ்ச ஸ்ருஷ்டிக்கும் இம் மூவகைக் காரணங்களும் வேண்டியிருக்குமே ; பகவான் ஏதாவது ஒரு காரணமாகத்தானே யிருக்கமுடியும் ; ஔ சித்யாத் நிமித்த காரணமாக இருக்கலாம் ; மற்றை யுபாதாந ஸஹகாரி காரணங்கள் எவை ? என்று கேள்விபிறக்கும். மூவகைக்காரணங்களும் எம்பெருமானேயென்பது வேதாந்திகளின் கொள்கை.

தத்வத்ரயத்தில் ஈச்வரப்ரகரணத்தில் (152.) " இவனே ஸகலஜகத்துக்கும் காரண பூதன்.......(165) இவன்தானே ஜகத்தாய்ப் பரிணமிக்கையாலே உபாதாநமுமா யிருக்கும். ஆனால் நிர்விகாரனென்னும்படி யென்னென்னில், ஸ்வரூபத்துக்கு விகாரமில் லாமையாலே. ஆனால் பரிணாமமுண்டாம்படி யென்னென்னில், விசிஷ்டவிசேஷண ஸத்வாரகமாக. ஒருசிலந்திக்குண்டான ஸ்வபாவம் ஸர்வசக்திக்குக் கூடாதொழியா

நிறே.'' என்றருளிச்செய்தவையும், அவ்விடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியான திவ்ய ஸ்ரீஸூக்திகளும் இங்கே அநுஸந்தேயங்கள. எம்பெருமான் ஸ்வேநரூபேண நிமித்தகாரண பூதன்; சேதநாசேதந சரீரகனுய்க்கொண்டு உபாதாநகாரணபூதன; ஸங்கல்பவிசிஷ்ட வேஷேண ஸஹகாரிகாரண பூதன் என்று கொள்வது.

[சித்சித்ஸ்வரூபம் ததேதத்கிலம் கார்யம்] சேதநாசேதநாத்மகமான எல்லாமும் ஒன்றொழியாமே அப்பெருமானுக்குக் காரியப்பொருளாயுள்ளன. என்றவாறே, ஒரு சங்கை தோன்றக்கூடியதுண்டு; உலகில் உபாதாநகாரணமாயிருக்கிறவஸ்து தான் விகாரமடையாமல் ஒருகாரியத்தையுண்டாக்க முடியாதே; ஜகத்துக்கு எம்பெருமானே உபாதாநகாரணமென்னில் இவன் விகாரப்படுவதாக இசையவேண்டிவருமே; எம்பெருமானுக்கு விகாரித்வமும் உண்டோ? என்று சங்கைதோன்ற, அதற்கு உத்தரமாக வுள்ளது உத்தரார்த்தம். வேதாந்தங்களில் எம்பெருமான் நிர்விகாரனென்றே ஓதப் பட்டிருக்கையாலே தத்ஸ்வரூபத்திற்கு விகாரம் கொள்ள ப்ரஸக்தியில்லை; அப்படியாகில் உபாதாநகாரணத்வம் அவனுக்கில்லையென்று இசையவேண்டு மத்தனையென்னில்; ஸ்வரூபம்விகாரமடையாமலே உபாதாநகாரணமாயிருக்கையே எம்பெருமானுடைய மிகச் சிறந்த சக்தி விசேஷம் என்றாராயிற்று.

எம்பெருமானுடைய ஷாட்குண்யத்திலே வீர்யமென்பது ஒரு குணம். அந்த குணத்தின் தன்மையை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில்—* मृगनाभिगन्ध इव यत्सकलार्थान् निजसन्निधेरविकृतो विकुरुषेऽपि । प्रियरङ्ग ! वीर्यमिति तत्तु वदन्ते—ம்ருகநாபிகந்த இவ யத் ஸகலார்த்தாந் நிஜஸந்நிதேரவிக்ருதோ விக்ருஷேஷி, ப்ரியரங்க! வீர்யமிதி தத் து வதந்தே * என்றருளிச்செய்தார். தான் விகாரமுறாமலே ஸ்ருஜ்ய பதார்த்தங்களை விகரிப்பிக்கை ஷாட்குண்யபரிபூர்ணனுடைய ப்ரபாவாதிசயம் என்றதாயிற்று. ... ... .... (37)

किंसाधनः क्व निवसन् किमुपाददानः कस्मै फलाय सृजतीश इदं समस्तम् ।
इत्याद्यनिष्ठितकुतर्कमतर्कयन्तः त्वद्वैभवं श्रुतिविदो विदुरप्रतर्क्यम् ॥३८॥

**கிம்ஸாதந: க்வ நிவஸந் கிமுபாததாந:**
**கஸ்மை பலாய ஸ்ருஜதீச இதம் ஸமஸ்தம்,**
**இத்யாத்யநிஷ்டிதகுதர்க்கமதர்க்கயந்த:**
**த்வத்வைபவம் ச்ருதிவிதோ விதுரப்ரதர்க்யம். (38)**

"ஈச: கிம்ஸாதந: க்வ நிவஸந் கிம் உபாததாந: கஸ்மை பலாய இதம் ஸமஸ்தம் ஸ்ருஜதி?" இத்யாதி அநிஷ்டிதகுதர்க்கம் அதர்க்கயந்த: ச்ருதிவித: த்வத்வைபவம் அப்ரதர்க்யம் விது:.

"பகவான் எதை ஸாதனமாகக் கொண்டு எவ்விடத்திலிருந்துகொண்டு எப்பொருளை உபாதானமாகக் கொண்டு எந்தபலனுக்காக இவ்வுலகங்களை யெல்லாம் படைக்கிறான்?" என்றிப்படியெல்லாம் அமர்யாதமாகச் சிலர் செய்யும் குதர்க்கங்களைச் சிறிதும் பொருள்படுத்தாத வேதாந்திகள் (எம்பெருமானே!) தேவரீருடைய வைபவத்தை அப்ரமேயமாக அறிந்துள்ளார்கள்.

* * * காரணத்வ ப்ரதிபாதநப்ரஸங்கத்திலே சில குதர்க்கவாதிகளின் குத்ஸித வாதங்களை யநுவதித்து, எம்பெருமானுடைய அப்ரமேயமான பெருமையின் முன்னிலையிலே இப்படிப்பட்ட குதர்க்கங்கள் தலைகாட்டமாட்டாவென்று கிள்ளிக்களைந்தருளினார் இந்தச்லோகத்தில். [கிம்ஸாதந இத்யாதி.]

உலகில் கடபடாதிபதார்த்தங்களின் நிர்மாணத்தைக் காண்பவர்கள் சிலவஸ்துக்களை ஸஹகாரிகாரணமாகக் கொண்டும் உபாதாநகாரணமாகக் கொண்டும் ஓரிடத்திலிருந்துகொண்டும் ஏதேனுமொரு ப்ரயோஜனத்தை விரும்பியும் நிர்மாணம் செய்யக் காண்கையாலே, எம்பெருமான் செய்யும் ப்ரபஞ்சஸ்ருஷ்டியும் இம்முறையிலேயே நடைபெறவேணுமென்றுகொண்டு " ஈசः கிம்ஸாதநः கிம்உபாதாநः க்வ நிவஸந் கஸ்மை பலாய ஸ்ருஜதி ? " என்று கேள்விகள் கேட்கத் தொடங்குவர்கள். இக்கேள்விகளின் உட்கருத்து யாதெனில் ; கேண்மின் ;—[கிம்ஸாதந :?] எதை ஸாதனமாகக்கொண்டு எம்பெருமான் ஜகத்ஸ்ருஷ்டிபண்ணுகிறான்? என்பது ஒரு கேள்வி. ஏதேனுமொரு வஸ்துவைக்காட்டி இதை ஸாதனமாகக்கொண்டு ஸ்ருஷ்டிக்கிறானென்று சொன்னால் 'அந்த ஸாதநவஸ்துவை ஸ்ருஷ்டிக்கும்போது எந்தவஸ்துவை ஸாதனமாகக் கொள்கின்றான்?' என்று உடனே கேட்பார்கள். இங்ஙனே ப்ரச்நபரம்பரைகளுக்கு ஓய்வில்லையாகும். இப்படியே உபாதாநகாரண விஷயத்திலும் ப்ரச்நபரம்பரைகள் ஓயாது சென்று கொண்டிருக்கும். ஸ்ருஷ்டிக்கும்போது ஓரிடத்திலிருந்துகொண்டு ஸ்ருஷ்டிக்க வேண்டுகையாலே எம்பெருமான் எவ்விடத்திலிருந்து கொண்டு ஸ்ருஷ்டிக்கிறானென்று கேட்பது மற்றொருகேள்வி ; ஓரிடத்தைக் குறிப்பிட்டு இவ்விடத்திலிருந்து கொண்டு ஸ்ருஷ்டிக்கிறானென்று சொன்னால் அவ்விடத்தை ஸ்ருஷ்டிக்கும் போது எவ்விடத்திலிருந்து கொண்டு ஸ்ருஷ்டிக்கிறானென்று உடனே கேட்பார்கள். இந்த ப்ரச்நபரம்பரைகளுக்கும் ஓய்வில்லையாகும். எம்பெருமான் செய்யும் ஸ்ருஷ்டி எந்தப்ரயோஜனத்திற்காகவென்று மற்றொருகேள்வி. 'ஒரு ப்ரயோஜனத்திற்காகவுமன்று' என்று சொன்னால் "ப்ரயோஜநமநுத்திச்ய ந மந்தோபி ப்ரவர்த்ததே" என்று க்ஷேபிப்பார்கள். ஏதேனுமொருப்ரயோஜநமுண்டென்று சொன்னால் 'இதுவரையில் இந்த ப்ரயோஜனம் கைகூடப்பெறாத எம்பெருமானை அவாப்தஸமஸ்தகாமனென்று எங்ஙனே கூறுகின்றீர்கள்?' என்று க்ஷேபிப்பார்கள். ஆக இப்படிப்பட்ட குதர்க்கவாதங்கள் பகவத்ப்ரபாவத்தை உள்ளபடியுணர்ந்த வேதாந்திகளான ப்ரஹ்மவித்துக்களின் கோஷ்டிகளிலே விலைச்செல்லமாட்டாவென்று தலைக்கட்டுகிறார். பரிச்சிந்நசக்தியுக்தர்களான அஸ்மாத்ருச ப்ராக்ருதர்களிடத்திலே காண்பவைகளைக் கொண்டு அபரிச்சிந்ந சக்தியுக்தனான பரமபுருஷன்செய்கைகளிலே குசோத்யங்கள் பண்ணுவது கூடாதென்பதே பரமதாத்பர்யம். சாரீரகமீமாம்ஸையில் *க்ருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயவத்வசப்தகோபோ வா* என்கிற ஸூத்ரத்தில் ஒரு சோத்யத்தை உத்க்ஷேபித்துக்கொண்டு *ச்ருதேஸ் து சப்தமூலத்வாத்* என்பதேயன்றோ ஸித்தாந்த ஸூத்ரமாக அமைக்கப்பட்டது. சாஸ்த்ரைக ஸமதிகம்யமான பரப்ரஹ்மத்தினிடத்தில் லௌகிகத்ருஷ்ட்யா ஒரு குசோத்யமும் செய்யத்தகாதென்பதே ஸூத்ரிதமாயிற்று. இந்த ச்லோகந்தன்னில் " த்வத்வைபவம் அப்ரதர்க்யம் " என்பதே உயிரான வார்த்தை. " கஸ்மை பலாய ஸ்ருஜஸீச : ? " என்கிற கேள்வியை சாரீரகமீமாம்ஸையில் * ந ப்ரயோஜநவத்த்வாத் * என்கிற ஸூத்ரத்தினால் உத்க்ஷேபித்துக்கொண்டு * லோகவத் து லீலாகைவல்யம் * என்கிற ஸூத்ரத்தினால் ஸமாதான முரைக்கப்பட்டமை யுணர்க. அதுவே அடுத்த ச்லோகத்தினாலருளிச்செய்யப்படுகின்றது. ... (38)

यत्संवृतं दशगुणोत्तरसप्ततत्त्वैरण्डं चतुर्दशजगद्भवधातृधाम ।
अण्डानि तत्सुसदृशानि परश्शतानि क्रीडाविधेस्तव परिच्छदतामगच्छन् ॥३९॥

யத் ஸம்வ்ருதம் தசகுணோத்தர ஸப்ததத்வை:
அண்டம் சதுர்தசஜகத் பவ தாத்ரு தாம,
அண்டாநி தத்ஸுஸத்ருசாநி பரச்சதாநி
க்ரீடாவிதேஸ் தவ பரிச்சததாமகச்சந். (39)

தசகுணோத்தர ஸப்ததத்வைஃ ஸம்வ்ரு

தம் சதுர்தசஜகத் பவ தாத்ரு தாம யத்

அண்டம் தத்ஸுஸத்ருசாநி பரச்ச

தாநி அண்டாநி தவ க்ரீடாவிதேஃ பரிச்

சததாம் அகச்சந்.

(எம்பெருமானே! மேன்மேலும் பதின்மடங்காகப்பெருகியுள்ள ஏழு தத்வங்களினாலே சூழப்பட்டும் பதினான்கு உலகங்களையுடைத்தாயும் அரனுக்கும் அயனுக்குமிருப்பிடமாயும் யாதொருஅண்டம் இராநின்றதோ, அதனோடு மிகவும் ஒத்திருப்பவையும் பல நூற்றுக்கணக்காக வுள்ளவையுமான அண்டங்களானவை தேவரீருடைய லீலைக்கு உபகரணமாக இருக்குந் தன்மையை யடைந்துள்ளன.

* * *—அவாப்தஸமஸ்தகாமனான ஸர்வேச்வரனுக்கு ஒருபலனை விரும்பி ஸ்ருஷ்டிக்க வேண்டிய ப்ரஸக்தியில்லை; நிஷ்ப்ரயோஜநமாக ஸ்ருஷ்டிக்கிறானென்னில் * ப்ரயோஜநமநுத்திச்ய ந மந்தோபி ப்ரவர்த்ததே யாகையாலே ஸ்ருஷ்டி ப்ரவ்ருத்தியே அஸம்பாவிதமாகிறதே என்று வாதம் ப்ரஸக்தமாக, இவ்விபூதிக்கு லீலாவிபூதி யென்று பெயராகையாலே "மன்பல்லுயிர்களுமாகிப் பலபல மாயமயக்குக்களால் இன்புறு மிவ்விளையாட்டுடையான்" என்று ஆழ்வாரருளிச் செய்தபடியே எம்பெருமானுடைய லீலைக்காகவே சதுர்தச புவநாத்மகமான அண்டமும் அதையொத்த பலபல அண்டங்களும் அமைந்தன வென்றருளிச் செய்கிறாரிதில்.

[சதுர்தச ஜகத்] என்பதில் பஹுவ்ரீஹிஸமாஸம் கொள்ளவேணும். "சதுர்தச ஜகந்தி யஸ்மிந் தத்—சதுர்தசஜகத்" என்று கொள்வது. பதினான்கு லோகங்களாவன—கீழில் அண்டகடாஹத்துக்குமேல் எண்பத்துமூன்று நூறாயிரத்தைம்பதினாயிரம் யோஜன முயர்த்தியுடைத்தான கர்ப்போதகத்தின்மேலே * ஸப்ததிஸ் து ஸஹஸ்ராணாம் த்விஜோச்ச்ராயோபி கத்யதே, தச ஸாஹஸ்ரமேகைகம் பாதாளம் முநிஸத்தம அதலம் விதலஞ்சைவ நிதலஞ்ச கபஸ்திமத், மஹாக்யம் ஸுதலஞ்சாக்ர்யம் பாதாலஞ்சைவ ஸப்தமம். * என்கிறபடியே ஓரொன்று பதினாயிரம் யோஜநத்தளவு உயர்த்தியையும் பரப்பையுமுடைத்தாய் தைத்யதானவ பந்நகஸுபர்ணாதிகள் வாழுமிடமாய் மணலாயும் மலையாயும் பொன்னாயுமிருக்கிற ஸ்தல விசேஷங்களையுடையவையாய், விலக்ஷணமான மாளிகைகளாலும் ப்ராஸாததோரணங்களாலும் அலங்க்ருதமாய் ஸ்வர்க்காதிகளிலுங் காட்டில் பரமபோக்யமாய், அதலமென்றும் விதலமென்றும் நிதலமென்றும் (கபஸ்திமத்தென்கிற மறுபெயரையுடைய) தலாதலமென்றும் மஹாதலமென்றும் ஸுதலமென்றும் பாதாலமென்றும் பெயரையுடைத்தான கீழுலகங்களேழும், இதுக்கு மேல் எழுபதினாயிரம் யோஜனம் அகலத்தையுடைத்தாய் ஸப்தத்வீப ஸாகர பர்வதாதி விசிஷ்டமாய் பாதசாரிகளான மநுஷ்யாதிகள் வர்த்திக்கும் தேசமாய் பத்மாகாரமான பூலோகமும், பூலோகத்துக்குமேல் ஆதித்யனுக்குக்கீழ் நூறாயிரம் யோஜநத்தளவு உயர்த்தியையுடைத்தாய் கந்தர்வாதிகள் வாழும் தேசமான புவர்லோகமும், ஆதித்யனுக்குமேல் த்ருவனுக்குக்கீழ் பதினாயிரம் யோஜனத்தளவு உயர்த்தியையுடைத்தாய் ஸாதிகாரரான க்ரஹ நக்ஷத்ர இந்த்ராதிகள் வாழுமிடமான ஸ்வர்லோகமும், த்ருவனுக்கு மேல் ஒருகோடி யோஜனத்தளவு உயர்த்தியையுடைத்தாய் * விநிவ்ருத்தாதிகாராஸ் து மஹர்லோக நிவாஸிநஃ * என்கிறபடியே அதிகாரபதவியினின்று விலகினவர்களாய் அதிகாராபேக்ஷிகளான இந்த்ராதிகள் வாழும் தேசமான மஹர்லோகமும், அந்த மஹர்லோகத்துக்குமேல் இரண்டுகோடி யோஜனத்தளவு உயர்த்தியையுடைத்தாய் ப்ரஹ்மபுத்ரர்களான ஸநகாதி பரமயோகிகள் வாழுமிடமான ஜநர்லோகமும், ஜநர்லோகத்துக்குமேல் எட்டுகோடி யோஜனத்தளவு உயர்த்தியையுடைத்தாய் வைராஜரென்கிற ப்ரஜாபதிகள் வாழுமிடமான தபோலோகமும், தபோலோகத்துக்குமேல் நாற்பத்தெட்டுகோடி யோஜனத்தளவு உயர்த்தியையுடைத்தாய், * தேஷாமேஷாம் கேசநப்ரஹ்மலோகாஃ ருத்ரஸ்யாங்யே ஸந்தி லோகா விசாலாஃ, தாந் தாந். லோகாந் தாநுபாஸ்ய வ்ரஜந்தி *

என்கிறபடியே ப்ரஹ்மவிஷ்ணு சிவர்களும், அவர்களையுபாஸித்து அவர்களை ப்ராபித்த வர்களும் வாழுமிடமான ஸத்ய லோகமும் ஆக இப்படியிருந்துள்ள சதுர்தச புவனங் களாம். இவற்றோடே கூடியிருக்கும்படியைச் சொன்னபடி.

[தசகுணோத்தரஸப்ததத்வைஃ ஸம்வ்ருதம்] ஒன்றுக்கொன்று பதிற்றுமடங்கான ஏழாவரணங்களாலும் சூழப்பட்டதென்கை. கீழ்சொன்ன பதினாலு லோகத்தையும் அண்டகடாஹம் ஆவரித்துநிற்கும். அண்ட கடாஹத்தோடு கூடின இவ்வண்டம் தன்னில் பதிற்றுமடங்கு பரந்திருக்கிற ஜலதத்வத்தாலே ஆவரிக்கப்பட்டிருக்கும். இப்படி தசோத்தரமாய்க்கொண்டு ஜலதத்வத்தை தேஜஸ்தத்வமாவரிக்கும். அப்படி அத்தை வாயுதத்வம் ஆவரிக்கும். வாயுவை ஆகாசம் ஆவரிக்கும். ஆகாசத்தை அஹங் காரமாவரிக்கும். அஹங்காரத்தை மஹத்தத்வம் ஆவரிக்கும். அந்த மஹத்தத்வத்தை அவ்யக்தமாவரிக்கும். இப்படி தசோத்தரங்களான ஸப்தாவரணங்களாலும் சூழப் பட்டிருக்கும்.

[தத்ஸஹஸ்ருசாநி பரச்சதாநி அண்டாநி] * அண்டாநாம் து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராணி அயுதாநி ச, ஈத்ருசாநாம் ததா தத்ர கோடிகோடி சதாநி ச * என்கிற ஸ்ரீவிஷ்ணுபுராண வசனம் இங்கே அநுஸந்தேயம். ஆக இவையெல்லாம் [தவ க்ரீடா விதேஃ பரிச்சததாம் அகச்சந்] க்ரீடாபரனான பாலகனுக்கு விளையாட்டுக் கருவிகள்போல, க்ரீடாரஸமநுபவிக்க விரும்பிய எம்பெருமானுக்கு லீலோபகரணங்களாயிருக்கும். * ஹரே விஹரஸி க்ரீடாகந்துகைரிவ ஜந்துபிஃ * மோததே பகவாந் பூதைஃ பாலஃ க்ரீட நகைரிவ * இத்யாதி ப்ரமாணங்களை இங்கு நினைப்பது. ... ... (39)

इच्छाविहारविधये विहितान्यमूनि स्यात्त्वद्विभूतिलवलेशकलायुतांशः ।
या वै न जातु परिणामपदास्पदं सा कालातिगा तव परा महती विभूतिः ॥४०॥

**இச்சாவிஹாரவிதயே விஹிதாந்யமூநி**
**ஸ்யாத் த்வத்விபூதிலவலேசகலாயுதாம்சஃ,**
**யா வை ந ஜாது பரிணாமபதாஸ்பதம் ஸா**
**காலாதிகா தவ பரா மஹதீ விபூதிஃ. (40)**

இச்சாவிஹாரவிதயே விஹிதாநி அமூநி த்வத்விபூதி லவ லேச கலா அயுதாம்சஃ ஸ்யாத்; யா வை ஜாது ந பரிணாம பதாஸ்பதம் காலாதிகா ஸா தவ விபூதிஃ மஹதீ.

(எம்பெருமானே!) யதேஷ்டமான லீலைக்காகப் படைக்கப்பட்ட இவ்வண்டங்களானவை தேவரீ ருடைய ஐச்வரியப் பரப்பிலே மிகச்சிறுபகுதி யான ஏகதேசமாயிருக்கும்; யாதொரு விபூதியானது ஒரு காலும் பரிணமிக்க மாட்டாததும் காலம் நடை யாடப்பெறாததுமா யிருக்கின்றதோ, அந்த நித்ய விபூதியானது தேவரீருக்கு மிகப் பெரிதாயுள்ளது.

* * * —கீழ்ச்லோகத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட லீலா விபூதியிற் காட்டிலும் ஸர்வப்ரகாரங்களாலும் பெருமை பெற்ற நித்யவிபூதியின் ப்ரசம்ஸைக்கு அடியிடு கிறதாயிற்று இந்தச்லோகம். ஸ்தோத்ரரத்நத்தில் * கஸ்யாயுதாயுத சதைக கலாம்சகாம்சே விச்வம் விசித்ரசிதசித்ப்ரவிபாக வ்ருத்தம் * என்றருளிச்செய்ததை யடியொற்றி "த்வத் விபூதிலவலேச கலாயுதாம்ச: ஸ்யாத் * என்றருளிச் செய்கிறார், லீலோபகரணமாகப் படைக்கப்பட்ட இவ்வண்டங்களெல்லாம் தேவரீருடைய மஹிமையில் மிகச்சிறுபங் காயிருக்கும். இவை கிடக்க; [யா வை ந ஜாது இத்யாதி.] ஒருகாலும் பரிணாமபதாஸ் பதமல்லாதது நித்யவிபூதி, தத்வத்ரயத்தில் அசித்ப்ரகரணத்தில் (79) "இதில் சுத்த ஸத்வமாவது.........விமாந கோபுர மண்டப ப்ராஸாதாதிரூபேண பரிணமிக்கக்கடவ தாய்" என்றருளிச் செய்திருக்கையாலே பரிணாமபதாஸ்பதமென்று தெரிகிறதே;

"யா வை ந ஜாது பரிணாமபதாஸ்பதம்" என்னலாமோவென்று சிலர் சங்கிக்கக் கூடும்; கேணமின; மேலெடுத்த தத்வத்ரய ஸ்ரீஸூக்தியில "கர்மத்தாலன்றிக்கே கேவலபகவதிச்சையாலே விமாந கோபுர மண்டப ப்ராஸாதாதிரூபேண பரிணமிக்கக்கடவதாய்" என்றருளிச் செய்திருக்கையாலே கர்மக்ருத பரிணாமமில்லையெனகிறதித்தனை. சேதநன் தானபண்ணின கருமங்களுக்குத் தகுதியாக இச்சிக்க, அந்த இச்சைக்கு அநுகுணமாக பகவத்ஸங்கல்பத்தாலே இருபத்திநாலு தத்வமாய்க் கொண்டு பரிணமித்து சேதநர்க்கு போக்யபோகோபகரண போகஸ்தானங்களாக ஆகின்றது ப்ரக்ருதிதத்வம்; அதுபோலல்லாமல் தனனுடைய போகார்த்தமாகவுண்டான பகவதிச்சையாலே விமாந கோபுராதிரூபேண பரிணமியாநிற்கும் இது. ஆகவே கர்மக்ருத பரிணாமமில்லாமையைப்பற்ற "ந ஜாது பரிணாமபதாஸ்பதம்" எனவருளிச் செய்தது.

[காலாதிகா] * காலம் ஸ பசதே யத்ர ந காலஸ் தத்ர வை ப்ரபு: * என்றும் * கலாமுஹூர்த்தாதிமயச்ச காலோ ந யத்விபூதே: பரிணாமஹேது: * என்றும், * யத் காலாதபசேலிமம் * என்றும் சொல்லுகிறபடியே காலக்ருத பரிணாமமில்லாத தேசமென்றபடி. தத்வத்ரயத்தில் ஈச்வரப்ரகரணத்தில் (183) "அதில பரத்வமாவது அகாலகால்யமான நலமந்தமில்லதோர் நாட்டிலே" என்ற விடத்துக்கு வியாக்கியான மருளிச் செய்யாநின்ற மணவாள மாமுனிகள் காலக்ருத பரிணாமமில்லாமைக்குக் காட்டியருளும் ப்ரமாணங்களிடையே "யா வை ந ஜாது பரிணாமபதாஸ்பதம் ஸா காலாதிகா தவ பரா மஹதீ விபூதி:" என்று இந்த ச்லோகப்பகுதியையும் எடுத்துக்காட்டியருளியிருக்கையாலே 'ந ஜாது பரிணாம பதாஸ்பதம்' என்றதும் காலக்ருத பரிணாமமில்லாமையைச் சொன்னபடியே யாமென்று கொள்ளத்தகும். அப்போது 'காலாதிகா' என்ற விசேஷணம் தத்விவரணமாமத்தனை. ஆக இப்படிப்பட்ட விபூதியானது [மஹதீ] நித்ய முக்தராலும் ஈச்வரனாலும் அளவிடவொண்ணாத மஹிமையுடையது. ஸ்ரீ வைகுண்டகத்யத்தில * தேஷாமபி இயத்பரிமாணம் இயதைச்வர்யம் ஈத்ருசஸ்வபாவமிதி பரிச்சேத்துமயோக்யே * என்றருளிச் செய்ததுங் காண்க.

ஆக இந்த ச்லோகம் நித்யவிபூதிஸத்தையைச்சொன்னவளவேயாம். இதின் ஒப்புயர்வற்ற பெருமைகளை மேல ஐந்து ச்லோகங்களினால் விரிவாக அருளிச்செய்வர். (40)

यद्वैष्णवं हि परमं पदमामनन्ति खं वा यदेव परमं तमसः परस्तात् ।
तेजोमयं परमसत्त्वमयं ध्रुवं यदानन्दकन्दमतिसुन्दरमद्भुतं यत् ॥४१॥

**யத் வைஷ்ணவம் ஹி பரமம் பதமாமநந்தி**
**கம் வா யதேவ பரமம் தமஸ: பரஸ்தாத்,**
**தேஜோமயம் பரமஸத்வமயம் த்ருவம் யத்**
**ஆநந்தகந்தம் அதிஸுந்தரம் அத்புதம் யத். 41**

யத் ஹி வைஷ்ணவம் பரமம் பதம் ஆமநந்தி. யதேவ வா தமஸ: பரஸ்தாத் பரமம் கம், யத் தேஜோமயம் பரம ஸத்வமயம் த்ருவம், யத் ஆநந்தகந்தம் அதிஸுந்தரம் அத்புதம்.

யாதொரு ஸ்தானத்தை விஷ்ணு ஸம்பந்தியான பரமபத மென்கிறார்களோ, எந்த ஸ்தானமானது தமஸ்ஸுக்கு அப்பால் பரமாகாசமென்னப்படுகிறதோ, எந்த ஸ்தானமானது தேஜோமயமாயும் நிஷ்க்ருஷ்ட ஸத்வமாயும் சாச்வதமாயுமுள்ளதோ, எந்த ஸ்தானமானது ஆனந்தகந்தமாயும் மிகவழகியதாயும் ஆச்சரியமாயுமுள்ளதோ.

* * * ஸ்ரீவைகுண்ட மஹிமவர்ணந பரமாக ப்ரவ்ருத்தமான இது முதலான ஐந்து ச்லோகங்கள் குளகமாகும். அதாவது, நான்கு ச்லோகங்களில க்ரியாபதம்

கிடையாது; ஐந்தாவது ச்லோகத்தில் * வைகுண்ட நாம தவ தாம ததாமநந்தி* என்று க்ரியையுள்ளவிடத்திலே இவையெல்லாம் அந்வயிக்கக் கடவன. இந்த ச்லோகத்தில் ஆமநந்தி என்று க்ரியையிருந்தாலும் அது அவாந்தரக்ரியையேயல்லது பரமமான க்ரியையன்றே. யாதொரு விபூதியை வைஷ்ணவபதமென்றும் பரமபதமென்றும் சொல்லுகிறார்களோ; * க்ஷயந்தமஸ்ய ரஜஸஃ பராகே * என்றும் * தமஸஸ் து பாரே * என்றும் * தமஸஃ பரஸ்தாத் * என்றும் சொல்லுகிறபடியே ரஜஸ்தமஸ்ஸுக்களுக்கு அப்பால் அவை கலசாதே பரமாகாச மென்னப்படுகிறது யாதோ;

[தேஜோமயம்] * ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோயமக்நி: * என்றும் * அத்யர்க்காநல தீப்தம் தத் ஸ்தாநம் விஷ்ணோர் மஹாத்மநஃ, ஸ்வயைவ ப்ரபயா ராஜந்! துஷ்ப்ரேக்ஷம் தேவதாநவை; *என்றும் சொல்லுகிறபடியே அக்நி ஆதித்யன் முதலான தேஜஃபதார்த்தங்களையும் மின்மினியாக்கும்படி அளவிறந்த தேஜஸ்ஸே வடிவாயிருக்குமது, * சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதி * என்ற ஆழ்வாரருளிச் செயலுங்காண்க. [பரமஸத்வமயம்] ரஜோகுண தமோ குணங்கள் கலசாத சுத்தஸத்வமே வடிவெடுத்ததாயிருக்கும். [த்ருவம்] * யத் தத் புராணமாகாசம் ஸர்வஸ்மாத் பரமம் த்ருவம், யத் பதம் ப்ராப்ய தத்வஜ்ஞா முச்யந்தே ஸர்வகில்பிஷை: * என்ற ப்ரமாணவசனத்தில் த்ருவம் என்றதை அநுவதித்தபடி. அநாதிநிதநமாயிருக்குமதென்றபடி. [ஆநந்தகந்தம்]* நலமந்தமில்லதோர் நாடிறே. [அதிஸுந்தரம்] ஸ்ரீ வைகுண்டகத்யத்தில் காணும் வர்ணனையின்படியே ஸௌந்தர்யம் எல்லை காணவொண்ணாதபடியிருக்குமது. [அத்புதம்] அநுக்ஷணம் அபூர்வமாய் ஆச்சர்யாவஹமாயிருக்குமது. ஆக இப்படிப்பட்ட யாதொரு ஸ்தானமுளதோ, (தத் தவ தாம ஆமநந்தி) என்று மேலோடே அந்வயம். ... ... ... (41)

यद्ब्रह्मरुद्रपुरुहूतमुखैर्दुरापं नित्यं निवृत्तिनिरतैस्सनकादिभिर्वा ।
सायुज्यमुज्ज्वलमुशन्ति यदापरोक्ष्यं यस्मात्परं न पदमञ्चितमस्ति किञ्चित् ॥४२॥

***யத் ப்ரஹ்மருத்ரபுருஹூதமுகைர் துராபம்***
***நித்யம் நிவ்ருத்திநிரதைஸ் ஸநகாதிபிர் வா,***
***ஸாயுஜ்யமுஜ்ஜ்வலமுசந்தி யதாபரோக்ஷ்யம்***
***யஸ்மாத் பரம் ந பதமஞ்சிதமஸ்தி கிஞ்சித்.*** 42

**யத்** ப்ரஹ்மருத்ரபுருஹூதமுகைஃ நித்யம் நிவ்ருத்திநிரதைஃ ஸநகாதிபிர் வா **துராபம்**, யதாபரோக்ஷ்யம் உஜ்ஜ்வலம் ஸாயுஜ்யம் **உசந்தி**, யஸ்மாத் அஞ்சிதம் **பதம்** பரம் **கிஞ்சித் நாஸ்தி**;

எந்த ஸ்தானமானது அயன் அரன் இந்திரன் முதலானோராலும், நிவ்ருத்திதர்மநிஷ்டர்களான ஸநகாதிகளாலு மடையமுடியாததோ, எந்த ஸ்தானத்தை ஸாக்ஷாத்கரிப்பதை முக்ய ஸாயுஜ்யமாகச் சொல்லுகிறார்களோ, எந்த ஸ்தானத்திற் காட்டிலும் சிறந்தஸ்தானம் வேறொன்றில்லையோ;

*** [ப்ரஹ்ம ருத்ரபுருஹூத முகை: யத் துராபம்] ஸ்ருஷ்டிக்குக் கடவனான **பிரம**னுக்கும் ஸம்ஹாரத்துக்குக் கடவனான ருத்ரனுக்கும் த்ரைலோக்யாதிபதியான **இந்திர**னுக்கும் மற்றுமுள்ள தேவர்களுக்கும் புகவரிதானது பரமபதம். * நேரே **கடிக்கமலத்**துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணனடிக் கமலந்தன்னை அயன் * என்று **பொய்கை**யாழ்வார் அயனொருத்தனுக்குச் சொன்னது அவனோடு துவக்குண்டார்க்கு மொக்குமே. * பின்னிட்ட சடையானும் பிரமனுமிந்திரனும் துன்னிட்டுப் புகலரிய **ஸ்தானமிறே** ஸ்ரீவைகுண்டம். [நித்யம் நிவ்ருத்திநிரதைஸ் ஸநகாதிபிர் வா] முன்பாதத்திலுள்ள 'துராபம்' என்பது இங்கும் அந்வயிக்கும். நிவ்ருத்தி தர்மநிஷ்டர்களான ஸநக ஸநந்தநாதிகளுக்கும் புகவரிதானதென்கை. *ஸநூஹிதைஸ் ஸாது ஸநந்தநாதிபிஸ் ஸுதுர்லபம்* என்று வரதராஜஸ்தவத்திலுமருளிச்செய்வது காண்க. [யதாபரோக்ஷ்யம் உஜ்ஜ்வலம் ஸாயுஜ்ய

முக்தி] * ब्रह्मणस्सायुज्यं....यन्ति-ப்ரஹ்மணஸ்ஸாயுஜ்யம்....யந்தி* என்று ச்ருதிகளில் ஸாயுஜ்ய ப்ராப்தியாகச் சொல்லப்படுகிறது பரமபதஸாக்ஷாத்காரத்தையேயிறே .["समानगुण भागित्वं सायुज्यमिति कथ्यते— ஸமாநகுணபாகித்வம் ஸாயுஜ்யமிதி கத்த்யதே"] ஆத்மாவுக்கு இயற்கையாயிருந்து * மாய வன் சேற்றள்ளல் பொய்ந்நிலத்தில் வீழ்ச்சியினாலே திரோஹிதமாய்க் கிடந்த ஜ்ஞாநாநந்தாதிகளுக்கு ப்ராதுர்ப்பாவம் பரமபதப் ராப்திஸமகாலிகம் என்பது கருத்து. உஜ்ஜ்வலம் ஸாயுஜ்யம் என்றது முக்கியமான ஸாயுஜ்யமென்றபடி.

[யஸ்மாத் பரம் ந பதமஞ்சிதமஸ்தி கிஞ்சித்] 'இந்த லோகத்திற் காட்டிலும் அந்த லோகம் மேற்பட்டது, அதிற்காட்டிலும் அது மேற்பட்டது, என்று சொல்லிக்கொண்டு போகலாம்; அப்படிப்பட்ட வாக்விந்யாஸங்கள் பரமபதத்தளவிலே வந்தவாறே முற்றுப் புள்ளியிட்டு நிற்கவேண்டுமத்தனை. இதற்குமேலும் சொல்லலாவதொரு ஸ்தானமில்லையே. ... ... ... ... (42)

रूपेण सद्गुणगणैः परया समृद्ध्या भावैरुदारमधुरैरपि वा महिम्ना ।
तादृक्तदीदृगिदमित्युपवर्णयन्त्यो वाचो यदीयविभवस्य तिरस्क्रियायै ॥४३॥

ரூபேண ஸத்குணகணை: பரயா ஸம்ருத்த்யா
பாவைருதாரமதுரைரபி வா மஹிம்நா,
தாத்ருக் ததீத்ருகிதமித்யுபவர்ணயந்த்யோ
வாசோ யதீயவிபவஸ்ய திரஸ்க்ரியாயை. 43

ரூபேண ஸத்குணகணை: பரயா ஸம்ருத்த்யா உதாரமதுரை: பாவைர்வா மஹிம்நா அபிவா 'தத் தாத்ருக் இதம் ஈத்ருக்' இதி உபவர்ணயந்த்ய: வாச: யதீய விபவஸ்ய திரஸ்க்ரியாயை;

தேஜஸ்ஸினாலும் ஸத்குண ஸமூஹங்களினாலும் சிறந்த ஸம்ருத்தியினாலும், மற்றுமுள்ள அதிசயத்தினாலும், 'அது அப்படிப்பட்டது, இது இப்படிப்பட்டது' என்று வருணிக்கின்ற வாக்குக்களானவை எந்தஸ்தானத்தின் பெருமைக்குத் திரஸ்கார காரணமாகின்றனவோ;

* * * வாய்கொண்டு வருணிக்கவே முடியாத அதிசய முடைய ஸ்தான விசேஷம் பரமபதம்—என்கிறது இதில். உலகில் கவிகள் எந்த ஸ்தானத்தையும் போரப் பொலிய வருணிப்பதுண்டு; ரூபத்தையிட்டும் சிறந்த நற்குணங்களை யிட்டும் ஸம்ருத்தியையிட்டும் ஆங்காங்குள்ள சீரிய பொருள்களையிட்டும் 'அது அப்படிப்பட்டது, இது இப்படிப்பட்டது' என்று வருணிக்கக் காணாநின்றோமிறே: அப்படி பரமபதத்தையும் வருணிக்கப்புகுந்தால் அது இதனைத் திரஸ்காரம் செய்ததாகுமத்தனை போக்கிப் புகழ்ந்ததாக ஆகமாட்டாது என்கிறார். இதுதன்னைச் சுருக்கியே பட்டர் ஸ்ரீகுணரத்ந கோசத்திலே "யத் துர்க்ரஹம் மத்கிராம் தத் விஷ்ணோ: பரமம் பதம்" என்றருளிச் செய்தது.

பரமபதத்தை அப்படியிப்படியென்று வருணிப்பது அதன் திரஸ்காரத்திற்கே யாகுமென்று சொல்லலாமோ? எம்பெருமானார் ஸ்ரீவைகுண்ட கத்யத்திலே பரக்க வருணித்திருக்கவில்லையோ? இவர் தாமும் இங்கே சில ச்லோகங்களினால் வருணிக்கவில்லையோ? இப்படிப்பட்ட வசநவ்யக்திகளெல்லாம் திரஸ்காரமேயாகுமென்னலாமோ? என்று சங்கை பிறக்கும்; கேண்மின்; *ஒட்டுரைத் திவ்வுல குன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும் பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதீ * (திருவாய்மொழி 3—1—2.) என்று ஆழ்வார் அருளிச்செய்கிறார்; எம்பெருமானுக்குச் சில பொருள்களை உவமைகூறிப் புகழ்வதானது அவனுக்கு நிறக்கேடே யாகுமென்று இதனால் அருளிச் செய்யப்பட்டது; இப்படி யருளிச்செய்தவரே உவமைகூறிப் புகழா

மலில்லை. அது எம்பெருமானுக்கு நிறக்கேடுதானேயென்று எண்ணலாகுமோ? 'ஒப்புயர்வற்ற பெருமையுள்ளது' என்பதைத் தெரிவிக்கிற வசனவ்யக்திகள் பலவகைப் பட்டிருக்குமே; அவ்வகைகளில் இதுவுமொருவகை என்று கொள்ளக்கடவது. ஆழ்வார் பெரிய திருவந்தாதி தொடங்கும் போதே "புகழ்வோம் பழிப்போம் புகழோம் பழி யோம்" என்கிறார், எம்பெருமானே! உன்னைப் புகழ்ந்தோமாகில் பழித்தோமாவோம்; புகழாதிருந்தோமாகில் பழியாதிருந்தோமாவோம் என்பது இதன் பொருள். இதற் காக எம்பெருமானைப் புகழாதிருப்பாருண்டோ? இப்படியருளிச் செய்தவர் தாமே "நற்பூவைப் பூவின்ற வண்ணன்புகழ்—நயப்புடைய நாவின் தொடைகிளவியுட் பொதி வோம்" என்றன்றோ திவ்வியப் பிரபந்தம் தொடங்கி யருளினார். ஆகவே மஹிமையின் அப்ரமேயத்வம் சொன்னபடியாமத்தனை. ... ... ... (43)

यद्वृद्ध्यपक्षयविनाशमुखैर्विकारैरेतैरसंस्तुतमनस्तमितास्तिशब्दम् ।
यद्गौरवाच्छ्रुतिषु फल्गु फलं क्रियाणाम् आदिष्टमन्यदसुखोत्तरमध्रुवं च ॥४४॥

யத் வ்ருத்த்யபக்ஷயவிநாசமுகைர் விகாரை:
ஏதைரஸம்ஸ்துத மநஸ்தமிதாஸ்திசப்தம்,
யத்கௌரவாத் ச்ருதிஷு பல்கு பலம் க்ரியாணாம்
ஆதிஷ்டமந்யத் அஸுகோத்தர மத்ருவஞ் ச. 44

**யத் வ்ருத்திஅபக்ஷய விநாச முகைঃ ஏதைঃ விகாரைঃ** அஸம்ஸ்துதம் அநஸ் **தமிதாஸ்தி சப்தம், ச்ருதிஷு க்ரியாணாம் ஆதிஷ்டம் அந்யத் பலம் யத் கௌரவாத் பல்கு அஸுகோத்தரம்** அத்ருவம் **ச.**

யாதொரு ஸ்தானமானது வளருதல் குறைதல் அழிதல் முதலான இத்தகைய விகாரங்களினால் தொடப்படாததும் அஸ்திசப்தம் ஒருநாளும் அஸ்தமிக்கப் பெறாததுமாயுள்ளதோ, வேதங்க களில் ஜ்யோதிஷ்டோமாதி கருமங்களுக்கு ஓதப் பட்ட இதர பலனானது யாதொரு ஸ்தானத்தின் பெருமையைப் பற்ற அஸாரமாயும் துக்கோத்தர மாயும் அநித்யமாயு முள்ளதோ;

* * * இதுவும் ஸ்ரீவைகுண்டத்தின் பெருமை சொல்லுகிறது. [வ்ருத்த்யபக்ஷய **விநாச முகைர் விகாரை: அஸம்ஸ்துதம்**] நாம் கண்ணுற்காணும் பொருள்களில் பலவகைப் பட்ட விகாரங்களைக் காணுகின்றோம்; செடி கொடி மரம் முதலிய பொருள்களைக் கொள்வோம். இவை ஒரு கால் வளர்ந்து செல்லவும் மற்றொருநால் குறைந்து செல்ல வும் இன்னுமொருகால் அறவே அழிந்து நிற்கவும் காணுகின்றோம். இப்படிப்பட்ட விகாரங்களில் ஒன்றும் ஸ்ரீவைகுண்டத்தைத் தொடாது. வளர்ச்சி, தேய்வு, அழிவு என்னுமிவை ஸ்ரீவைகுண்டத்திற்கு அப்ரஸக்த மென்றபடி. [**அநஸ்தமித அஸ்திசப்தம்**] அஸ்தியென்கிற வ்யபதேசம் ஒரு நாளும் அஸ்தமிக்கப் பெறாதது. விநாசமில்லையென்று முதற்பாதத்தில் சொன்னதுவே முகபேதேந சொல்லப்பட்டதாயிற்று. **அஸ்தி, ஜாயதே பரிணமதே,** ஏததே (एधते), அபக்ஷீயதே, **ப்ரணச்யதி.** என்கிற ஷட்பாவ விகாரங்களுண்டே; **அஸ்தி** என்பதற்கு மேற்பட ஜநநாதிகளுக்கு ப்ரஸக்திலேசமு மில்லையென்றபடி.

**(யத்கௌரவாத் இத்யாதி.)** வேதங்களில் பலவகைப்பட்ட க்ரியைகள்—ஜ்யோ திஷ்டோமாதிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றுக்குச் சொல்லப்பட்டுள்ள பலன் களெல்லாம் அற்பமாயும் அஸாரமாயும் அநித்யமாயும் துக்கமிச்ரமாயுமே காணப்படு கின்றன. * **க்ருதகதம் காமகாமா லபந்தே** * என்றும் * **க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி** * என்றும், **தத் யதேஹ கர்மசிதோ லோக: க்ஷீயதே ஏவமேவ அமுத்ர புண்யசிதோ லோக: க்ஷீயதே** * என்றுமுள்ள ப்ரமாணங்கள் காண்க. இந்த ஸ்தானத்தின் பெருமை யோ வென்னில்; * **ததக்ஷரே பரமே வ்யோமந்*** என்றும், * **தத் விஷ்ணோ: பரமம் பதம் ஸதா**

பச்யந்தி ஸூரய: * என்றும் * நச புநராவர்த்ததே நச புந ராவர்த்ததே * என்றும் பொலிந்து நின்றது. ஆகவிப்படி சாச்வத பரம பலமாயிருக்கையும் இதன் பெருமை யென்று சொல்லிற்றாயிற்று. ... ... ... ... ... (44)

निष्कल्मषैर्निहतजन्मजराविकारैर्भूयिष्ठभक्तिविभवैरभवैरवाप्यम् ।
अन्यैरधन्यपुरुषैर्मनसाऽप्यनाप्यं वैकुण्ठनाम तव धाम तदामनन्ति ॥४५॥

*நிஷ்கல்மஷைர் நிஹதஜந்மஜராவிகாரை:*
*பூயிஷ்டபக்திவிபவை ரபவைரவாப்யம்,*
*அந்யை ரதந்யபுருஷைர் மநஸாப்யநாப்யம்*
*வைகுண்டநாம தவ தாம ததாமநந்தி.* 45

**நிஷ்கல்மஷை:** நிஹதஜந்மஜராவி**காரை: பூயிஷ்டபக்திவிபவை:** அபவை: **அவாப்யம், அந்யை: அதந்ய** புருஷை: மநஸாபி அநாப்யம் தத் வைகுண்டநாம தாம தவ ஆமநந்தி. கல்மஷமற்றவர்களாயும் பிறப்பு மூப்பு முதலிய விகாரங்களைத் தொலைத்தவர்களாயும் பக்திச் செல்வம் மிகுந்தவர்களாயுமுள்ள முமுக்ஷுக்களாலே அடையத் தகுந்ததாய், மற்றையோர்களான தரித்திரர்களாலே நெஞ்சினாலும் அணுகத்தகாததாயுள்ள அப்படிப்பட்ட வைகுண்டமென்னும் ஸ்தானத்தை (எம்பெருமானே!) தேவரீருடைய இருப்பிடமாகச் சொல்லுகின்றார்கள்.

* * * இந்த ச்லோகத்தோடே ஸ்ரீவைகுண்ட வர்ணனத்தைத் தலைக்கட்டியருளுகிறார். அந்த திவ்யஸ்தான விசேஷத்தில் புகுவதற்கு அதிகாரிகளையும் அநதிகாரிகளையும் குறித்தருளுகிறார். முன்னிரண்டு பாதங்களில் அதிகாரி நிர்தேசம். மூன்றாவது பாதத்தில் அநதிகாரி நிர்தேசம். அதிகார ஸம்பத்தியுடையாரா ரென்னில் [**நிஷ்கல்மஷை:**] * ததா வித்வாந் புண்யபாபே விதூய * என்றும் * போய பிழையும் புகுதருவானின்றனவும் தீயினில் தூசாகும் * என்றும் சொல்லுகிறபடியே ஸகல பாபங்களையும் உதறித் தள்ளப் பெற்றவர்கள். [**நிஹத ஜந்ம ஜராவிகாரை:**] * புநரபி ஜநநம் புநரபி மரணம் புநரபி ஜநநீஜடரே சயநம் * என்னும்படியான ஜநநமரணங்களும் தத நுபந்தியான ஜரைமுதலான விகாரங்களு மற்று * போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரறநீக்கி விளங்குமவர்கள். [**பூயிஷ்டபக்தி விபவை:**] பரபக்தி பரஜ்ஞாந பரம பக்திகள் பரிபக்வமாகப் பெற்றவர்கள். அன்றிக்கே பூயிஷ்டபக்தியென்று ப்ரபத்தியைச் சொல்லிற்றாகவுமாம். * ப்ரபந்நாதந்யேஷாம் ந திசதி முகுந்தோ நிஜபதம்* என்கிறபடியே ப்ரபந்நர்களுக் கொழிய மற்றையோர்க்கு தந்தருளாணுகையாலே இவ்வர்த்தம் மிகப் பொருந்துமாயிற்று.

[**அபவை:**] ஸம்ஸாரத்தில் ருசியற்றவர்களென்று முமுக்ஷுக்களை விவக்ஷிக்கிறது. வேறுவகையாகப் பொருள் கொள்ளில் முதற்பாதத்தோடு புநருக்தமாகுமே. ஆக இப்படிப்பட்டவர்களாலே அடையக் கூடியது.

[**அந்யைரித்யாதி.**] இப்படிப்பட்டவர்களல்லாத * கருவிலே திருவிலாதார்க்கு நெஞ்சினாலும் அணுகத்தகாதது. இப்படிப்பட்ட ஸ்ரீவைகுண்ட மென்னும் ஸ்தான விசேஷத்தை தேவரீருடைய திருநாடாகக் கூறுகின்றார்கள்.

நான்காவது பாதத்தில் " வைகுண்டநாத!" என்று சிலருடைய பாடம்; " வைகுண்ட நாம " என்பதே பொருத்தமான பாடம்.

கீழ் நான்கு ச்லோகங்களுக்கும் காங்க்ஷிதமான க்ரியாபதம் இந்த ச்லோகத்திலுள்ளதாகையாலே இத்தோடு குளகம் ஸமாப்த மாயிற்றென்றுணர்க. ... (45)

नित्या तवान्यनिरपेक्षमहामहिम्नोऽप्येतादृशी निरवधिर्नियता विभूतिः ।
ज्ञानादयो गुणगणास्समतीतसीमाः लक्ष्मीः प्रिया परिजनाः पतगेन्द्रमुख्याः ॥४६॥

நித்யா தவாந்ய நிரபேக்ஷ மஹாமஹிம்நோபி
ஏதாத்ருசி நிரவதிர் நியதா விபூதி:,
ஜ்ஞாநாதயோ குணகணாஸ் ஸமதீதஸீமா:
லக்ஷ்மீ: ப்ரியா பரிஜநா: பதகேந்த்ரமுக்க்யா:. 46

அந்யநிரபேக்ஷ மஹாமஹிம்நோபி தவ ஏதாத்ருசீ நிரவதிः நித்யா விபூதிः நியதா; ஜ்ஞாநாதயः குணகணாः ஸமதீதஸீமாः, லக்ஷ்மீः ப்ரியா, பதகேந்த்ர முக்க்யாः பரிஜநாः.

வேறொன்றை யெதிர்பாராமல் இயல்பாகவே அமைந்த மஹாவைபவத்தையுடையீரான தேவரீருக்கும் இப்படிப்பட்ட நிரவதிகமான நித்யவிபூதியானது நியதபோகோபகரணமாயிராநின்றது; ஜ்ஞாநாதி குணங்களோ எல்லை கடந்திருக்கின்றன; ஸ்ரீமஹாலக்ஷ்மியோ வல்லபையாயிராநின்றாள்; பெரிய திருவடிமுதலான நித்யஸூரிகளோ பரிஜனங்களாயிராநின்றார்கள்.

* * * கீழ்ச் சொன்ன பெருமையை அநுவதித்து உபஸம்ஹரித்து, மற்றுமுள்ள சில அதிசயங்களையும் அருளிச் செய்கிறாரிதில். [அந்யநிரபேக்ஷ மஹாமஹிம்நோபி தவ] எம்பெருமானுடைய பெருமை ஒன்றையிட்டு நிருபிக்க வேண்டியதன்றே; ப்ராக்ருதர்களான நம் போலியர்க்கு ஒரு பெருமை சொல்ல வேண்டுமானால், இயற்கையான பெருமை ஒருவர்க்கும் சிறிதுமில்லாமையாலே ஏதேனுமொன்றையிட்டே பெருமை சொல்ல வேண்டியிருக்கும். குலத்தையிட்டோ ரூபத்தையிட்டோ ஐச்வரியத்தையிட்டோ வித்யையையிட்டோ நமக்குப் பெருமை பேச வேண்டும். எம்பெருமான் படி இங்ஙனேயன்று. பெருமைக்கு நிரூபகங்களானவை பலவும் எம்பெருமான் பக்கலிலே யிருந்தாலும் அவை தாம் நிறம் பெறுவதற்காக எம்பெருமானை ஆச்ரயித்திருக்கின்றனவேயன்றி அவற்றால் எம்பெருமான் அதிசயம் பெறுகிறானென்றில்லையே, "ச்ரிய: பதியாய், ஸ்ரீவைகுண்ட நிகேதநனாய் நித்யமுக்தாநுபாவ்யனாய்" என்று ச்ரிய:பதித்வாதிகளையிட்டு எம்பெருமானைப்பேசினாலும் இவற்றால் அவனுக்கொரு பெருமையுண்டாகிறதென்று கருதியன்றே; உள்ளதை உள்ளபடியுரைக்கவேணுமென்கைக்காகவன்றோ அவை சொல்லுகிறது. இவ்விஷயம் அடுத்த ச்லோகத்தில் இதம்பரமாக விரித்துரைக்கப்படும். அது இங்கு "அந்யநிரபேக்ஷமஹாமஹிம்ந:" என்று சுருங்க வநுஸந்திக்கப் படுகிறது. [ஏதாத்ருசீ நிரவதிः நித்யா விபூதிः நியதா] கீழே ஐந்து ச்லோகங்களினாற்சொல்லப்பட்ட பெருமையையுடைய நித்யவிபூதியானது ஒருகாலும் விட்டு நீங்காத பெருமையாயிரா நின்றதென்கை. எம்பெருமானுடைய பெருமை இதர நிரபேக்ஷமாயிருக்கச் செய்தேயும் நித்ய விபூத்யைச்வர்யமானது பெருமைக்குத் தலைமை பெற்றிருக்கின்றதென்றபடி.

இவ்வளவேயன்றிக்கே மற்றும் பல பெருமைகளுமுண்டென்கிறது உத்தரார்த்தத்தில் [ஜ்ஞாநாதயோ குணகணாஸ் ஸமதீதஸீமாः] ஞானம் முதலான திருக்கல்யாண குணங்களோ எல்லை கடந்திருக்கின்றன. ஜ்ஞானம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸு என்கிற ஆறு திருக்குணங்களும் * குணாநாம் நிஸ்ஸீம்நாம் கணநவிகுணாநாம் ப்ரஸவபூः * என்று இவர் தாமருளிச் செய்தபடியே இவையடியாகத் தோன்றியுள்ள மற்றைத் திருக்குணங்களும் எண்ணிறந்தவையாயுள்ளன. [லக்ஷ்மீः ப்ரியா] பிராட்டிதானே வல்லபையாக வாய்த்திருக்கின்றாள். [பதகேந்த்ர முக்க்யாः பரிஜநாः] பெரிய திருவடி முதலான நித்யஸூரிகளும் முக்தர்களும் நித்யகிங்கரர்களாயுள்ளார்கள். ஆக இப்படிப்பட்ட பெருமை அப்ரமேயமென்றதாயிற்று. ... ... (46)

एकस्य येषु हि गुणस्य लवायुतांशः स्यात्कस्यचित्स खलु वाङ्मनसातिगश्रीः ।
ते तादृशोऽप्यनवधयस्समतीतसंख्याः त्वत्सद्गुणास्त्वमसि तन्निरपेक्षलक्ष्मीः ॥४७॥

*ஏகஸ்ய யேஷு ஹி குணஸ்ய லவாயுதாம்ச:*
*ஸ்யாத் கஸ்யசித் ஸ கலு வாங்மநஸாதிக ஸ்ரீ:,*
*தே தாத்ருசோத்யவதயஸ் ஸமதீதஸங்க்யா:*
*த்வத்ஸத்குணாஸ் த்வமஸி தந் நிரபேக்ஷலக்ஷ்மீ:.* 47

யேஷு (குணேஷு) ஏகஸ்ய குணஸ்ய லவா யுதாம்ச: கஸ்யசித் ஸ்யாத் ஸ கலு வாங் மநஸாதிகஸ்ரீ:, தாத்ருச: அத்யவதய: ஸமதீதஸங்க்யா: தே த்வத்ஸத் குணா:, தத் த்வம் நிரபேக்ஷலக்ஷ்மீ: அஸி.

(எம்பெருமானே!) எந்த குணங்களுள் ஒருகுணத்தின் ஏகதேசமானது எவனேனு மொருவனுக்குண்டாகி அதனுல் அவன் வாக்குக்கும் மனஸ்ஸுக்கு மெட்டாத ஸ்ரீயை யுடையவனுகின்றுனே, நிரவதிகங்களாய் எண்ணிறந்தவைகளான அப்படிப்பட்ட திருக் குணங்கள் தேவரீருக்கு அமைந்துள்ளன; ஆதலால் தேவரீர் குணுதீன மல்லாமல் ஸ்வாதீனமேயான பெருமையையுடையீர்.

* * * கீழ் ச்லோகத்தில் * அந்யநிரபேக்ஷமஹா மஹிம்ந: * என்றதற்கு வியாக்கியானமாக அவதரிக்கின்றது இந்த ச்லோகம். [ஏகஸ்ய யேஷு ஹி இத்யாதி.] உலகில் நாம் சிலரை வாசாமகோசரமான ஐச்வரியமுடையராகச் சொல்லுவதுண்டு; எதுகொண்டு சொல்லுகிறுமென்னில்; *பஹவோ ந்ருப கல்யாணகுணு: புத்ரஸ்ய ஸந்தி தே * என்றும், *தாதூநாமிவ சைலேந்த்ரோ குணுநாம் ஆகரோ மஹாந் * என்றும் *ஸங்க்யாதும் நைவ சக்யந்தே குணு தோஷாச் ச சார்ங்கிண:, ஆநந்த்யாத் ப்ரதமோ ராசி: அபாவாதேவ பச்சிம: * என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமான் பக்கலிலுள்ள எல்லைகடந்த திருக் குணங்களுள் ஏகதேசம் ஒரு வ்யக்தியினிடத்தில் இருந்துவிட்டால் அது கொண்டு அவனை வாசாமகோசரைச்வர்யவானுகச் சொல்லிப் புகழாநின்றும். அது பலகோடி நூறுயிரம் மடங்கு விஞ்சியன்றே எம்பெருமான் பக்கலுள்ளது. அப்படிப்பட்ட பெருமானுடைய பெருமைக்கு வாசகமான சொல் ஒன்றில்லையே.

இந்த ச்லோகத்தின் கருத்தையே புஷ்கலமாகக் கொண்ட ச்லோகமொன்று ஸுந்தர பாஹுஸ்தவத்திலுள்ளது — (26) * யேஷ்வேகஸ்ய குணஸ்ய விப்ருடபி வை * இத்யாதி.

நிர்குண ப்ரஹ்மமே வேதாந்த வேத்ய மென்று சொல்லுகிற குத்ருஷ்டிகளைத் தெளிவிக்க வேண்டி, நிர்க்குணத்வப்ரதிபாதக ச்ருதியின் தாத்பர்யத்தை மேலே நாற்பத்தொன்பதாம் ச்லோகத்தில் அருளிச் செய்யப் போகிறுராய் இந்த ச்லோகத்தில் கல்யாண குணபௌஷ்கல்யத்தை யருளிச் செய்தாராயிற்று. (47)

सर्वस्य चैव गुणतो हि विलक्षणत्वमैश्वर्यतश्च किल कश्चिदुदञ्चितस्स्यात् ।
तत्प्रत्युत त्वयि विभो ! विभवो गुणाश्च सम्बन्धतस्तव भजन्ति हि मङ्गलत्वम् ॥४८॥

*ஸர்வஸ்ய சைவ குணதோ ஹி விலக்ஷணத்வம்*
*ஐச்வர்யதச் ச கில கச்சித் உதஞ்சிதஸ் ஸ்யாத்,*
*தத் ப்ரத்யுத த்வயி விபோ! விபவோ குணுச் ச*
*ஸம்பந்ததஸ் தவ பஜந்தி ஹி மங்கலத்வம்,* 48

விபோ! ஸர்வஸ்யச விலக்ஷணத்வம் குணத ஏவ ஹி; கச்சித் ஐச்வர்யதச்ச கில உதஞ்சிதஸ்ஸ்யாத்: த்வயி தத்ப்ரத்யுத; விபவஃ குணஶ்ச தவ ஸம்பந்ததோ ஹி மங்கலத்வம் பஜந்தி.

எம்பெருமானே! (உலகில்) ஸகல புருஷர்களுக்கும் ஸ்வஸஜாதீயர்களிற் காட்டில் வைலக்ஷண்யமென்பது குணஸம்ருத்தியினாலன்றோ ஆகின்றது; அவ்யபதேச்யனாயிருந்த எவனேனுமொருவனும் ஐச்வர்யத்தினாலன்றோ மேம்படுகிறான்; இவ்விரண்டு விஷயமும் தேவரீர் பக்கல் மாறுபாடுற்றிருக்கின்றது; ஏனெனில், ஐச்வர்யமும் குணங்களும் தேவரீருடைய ஸம்பந்தத்தினாலேயே மேம்பாடு பெறுகின்றன வன்றோ.

* * * உலகில் நல்ல பதார்த்தங்களாயுள்ளன வென்று சிலவற்றை நாம் ஆதரிப்பது எதனாலே யென்னில்; அவற்றில் நல்ல குணங்கள் இருப்பதனாலன்றி வேறொன்றினாலன்று. ரத்னத்தில் ஒளி மிகுதியையிட்டுப் புகழ்ச்சியும், புஷ்பத்தில் பரிமளப்ராசுர்யத்தையிட்டுப் புகழ்ச்சியுமாக இங்ஙனே ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு குணஸம்ருத்தியையிட்டே உத்கர்ஷவ்யபதேசம் நிகழா நின்றது. குணத்தையிட்டேயன்று [ஐச்வர்யதச்ச கில] ஐச்வர்யத்தையிட்டும் பெருமை பேசப்படுகின்றது. ஆனால் அது எம்பெருமானளவிலே விபரீதமென்கிறது உத்தரார்த்தத்தில் [தத் ப்ரத்யுத த்வயி விபோ! இத்யாதி.] குணத்தையிட்டும் விபவத்தையிட்டும் மேன்மை பேசப் பெறுகின்ற லௌகிக வஸ்துக்களின் படியன்றிறே எம்பெருமான் படி. பின்னையென்னென்னில், குணங்களும் ஐச்வரியமும் எம்பெருமானாகிற ஆச்ரயத்தின் மேன்மையாலே தாம் மேன்மை பெறுகின்றன வாயிற்று. * धन्यानि स्थलवैभवेन कतिचिद्वस्तूनि, कस्तूरिकां नेपालक्षितिपालफालपतिते पङ्के न शङ्केत कः— தந்யாநி ஸ்தலவைபவேந கதிசித் வஸ்தூநி, கஸ்தூரிகாம் நேபாலக்ஷிதிபாலபாலபதிதே பங்கே ந சங்கேத க:? * என்கிற ச்லோகம் இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

ஸ்ரீராம குணங்களிலே யீடுபட்ட வொரு மஹாகவி கூறுகின்றான் (ப்ரஸந்நராகவே) * यदेतैर्निश्शेषैरपरगुणलुब्धैरिव जगति असावेकश्चक्रे सततसुखसंवासवसतिः—யதேதைர் நிச்சேஷைஃ அபரகுணலுப்தைரிவ ஜகதி அஸாவேகச் சக்ரே ஸததஸுக ஸம்வாஸ வஸதிஃ * என்று. குணங்களெல்லாங் கூடி 'நமக்கொரு குணமுண்டாகப் பெற வேணும்' என்று ஆசைப்பட்டுப் பெருமாள் பக்கலிலே வந்து குடிபுகுந்தனவாகப் பேசியுள்ளது இதில். "ஆபரணத்துக்கு அழகு கொடுக்கும் பெருமாள்" என்னுமா போலே குணங்களுக்கும் குணங்கொடுக்கும் பெருமானாகையாலே குணங்களாலே தான் பெருமை பெறுகிறானென்று சொல்ல வொண்ணாதிறே. ... ... (48)

दूरे गुणास्तव तु सत्वरजस्तमांसि तेन त्रयी प्रथयति त्वयि निर्गुणत्वम् ।
नित्यं हरे ! निखिलसद्गुणसागरं हि त्वामामनन्ति परमेश्वरमीश्वराणाम् ॥४९॥

*தூரே குணாஸ் தவ து ஸத்வரஜஸ்தமாம்ஸி*
*தேந த்ரயீ ப்ரதயதி த்வயி நிர்குணத்வம்,*
*நித்யம் ஹரே நிகிலஸத்குணஸாகரம் ஹி*
*த்வாமாமநந்தி பரமேச்வர மீச்வராணாம்.* **49**

ஹே ஹரே! ஸத்வரஜஸ்தமாம்ஸி குணாஸ் து தவ தூரே; தேந த்ரயீ த்வயி நிர்குணத்வம் ப்ரதயதி; ஈச்வராணாம் பரமேச்வரம் த்வாம் நித்யம் ஸகலஸத்குணஸாகரம் ஹி ஆமநந்தி.

எம்பெருமானே! ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களாகிற முக்குணங்களும் தேவரீரை அணுகமாட்டாமல் அப்பால் விலகியுள்ளன; ஆனது பற்றியே வேதமானது தேவரீரிடத்தில் நிர்குணத்வத்தை ஓதுகின்றது; ஈச்வரர்களென்று பேர்பெற்றவர்களுக்கும் பரமேச்வரராயிராநின்ற தேவரீரை எப்போதும் ஸகல கல்யாண குணக்கடலாக வன்றோ மறைகள் முறையிடுகின்றன.

* * *—நிர்க்குண ச்ருதிகளுக்கு என்ன கதியென்ன, அவற்றை நிர்வஹிக்க வேண்டும் வழி காட்டுகிறாரிதில். * நிர்க்குணம் நிரஞ்ஜநம் * இத்யாதி ச்ருதிகள் எம்பெருமான் பக்கலிலே குணங்களின் அத்யந்தாபாவத்தைச் சொல்லுகிறனவல்ல; அப்படியாகில் * யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித் * இத்யாதி பரச்சத வாக்யங்களினால் எம்பெருமானுக்குச் சொல்லப்பட்ட குணபௌஷ்கல்யம் வ்யாஹதமாகுமே. ஒரு ச்ருதியும் வ்யாஹதார்த்தமாகாத படி நிர்வஹிக்க வேண்டுமே. நிர்க்குணத்வத்தைச் சொன்னவிடம் ஹேயகுண ராஹித்யத்தைச் சொல்லிற்றாகக் கொள்ளுமளவில் ஒரு விரோதமுமில்லையே. உத்ஸர்க்காபவாதந்யாயம் இதற்குக் கை கொடுக்குமே. [ஸத்வராஜஸ்தமாம்ஸி குணஸ்து தவ தூரே] ஸத்வரஜஸ்தமோ குணங்கள் தேவரீருக்கு நெடுந் தூரத்திலுள்ளன. எம்பெருமான் பக்கலில் ரஜஸ்தமோ குணங்கள் இல்லையென்று சொல்லலாமத்தனை போக்கி ஸத்வகுணமும் இல்லையென்று சொல்லலாமோவென்று ஒரு சங்கை தோன்றும். * பரமஸத்வ ஸமாச்ரயః க? * என்னும்படியுள்ள எம்பெருமான் பக்கலில் ஸத்வ குணமில்லையென்னப் போகாது; ரஜஸ்தமோ மிச்ரமான ஸத்வகுணமில்லையென்கிற தத்தனை. [தேந த்ரயீ ப்ரதயதி த்வயி நிர்க்குணத்வம்]. அதையிட்டே வேதத்தில் நைர்குண்யவாதம் ப்ரவ்ருத்தமாயிற்று.

குணஸாமாந்யாபாவத்தையே ச்ருதி விவக்ஷிக்கிறதென்னவொண்ணாதோவென்னில்; ஒண்ணாமையை உபபாதிக்கிறது உத்தரார்த்தம்—[நித்யம் ஹரே! நிகிலஸத்குணஸாகர மித்யாதி] *பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச* *ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்பః* இத்யாதி ச்ருதிகள் எம்பெருமானை ஸகல கல்யாண குணநிதியாக ஓதாநிற்க, அதற்கு முரணாகப் பொருள் கொள்ள வொண்ணாதிறே, * அக்நீஷோமீயம் பசுமாலபேத* இத்யாதிகளில் விஹிதமான ஹிம்ஸையைத் தள்ளியன்றோ * மா ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி* இத்யாதி நிஷேத ச்ருதிகளுக்குப் பொருள் நிர்வஹியாநின்றோம். அது இங்கு மொக்குமே,

அன்றியும். *இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத் * என்றும், *வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபுः* என்றும் சொல்லுகிறபடியே வேதார்த்த நிர்ணயம் இதிஹாஸ புராணாதீநமாகவுள்ளது. அந்த இதிஹாஸ புராணங்களெல்லாம் எம்பெருமானுடைய கல்யாணகுண ப்ரபஞ்சனத்திற்காக வன்றோ அவதரித்தன. எம்பெருமான் ராமக்ருஷ்ணதிருபேண அவதாரங்கள் பண்ணினது தன்னுடைய திருக்குணங்களை வெளியிடுவதற்காகவேயன்றோ. இதனை ஸ்ரீராமாயணத்தின் உபக்ரமம்தானே நன்கு மூதலிக்குமே, வால்மீகி பகவானுடைய ஆச்ரமத்திற்கு நாரத மஹர்ஷி யெழுந்தருள, அவரை நோக்கிக் கேட்டது என்னென்று பார்க்கவேணுமே. *கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே * என்று உபக்ரமித்துப் பல திருக்குணங்களையுஞ் சொல்லி இவையுடையானைச் சொல்லியருளவேணுமென்றிறே கேட்டது நாரத மஹர்ஷியும் *முநே! வக்ஷ்யாம்யஹம் புத்த்வா தைர் யுக்தः ச்ரூயதாம் நரः* என்று அக்குணங்களுடையானைச் சொல்லுகிறேன் கேளாய் என்றிறே சொல்லவுபக்ரமித்தது. இடையிடையே தொட்ட தொட்ட விடமெல்லாம் குணப்ரசுரமாயிறே யிருப்பது *ஹைவோ ந்ருப கல்யாண குணः புத்ரஸ்ய ஸந்தி தே * இத்யாதியாகப் பௌர ஜனங்களையிட்டும், *தருணௌ ரூபஸம்பந்நௌ* இத்யாதியாக சூர்ப்பணகையையிட்டும், *தா தூநாமிவ சைலேந்த்ரோ குணாநாமாகரோ மஹாந் * இத்யாதியாகத் தாரையையிட்டும், *தமஸः பரமோ தாதா சங்கசக்ரகதாதரः *இத்யாதியாக மந்தோதரியையிட்டும் நிரூபித்த குணகணங்கள் வாசாமகோசரமிறே. இப்படிப்பட்ட இதிஹாஸ ச்ரேஷ்டத்தாலும் மற்றுமுள்ள புராணங்களாலும் உபப்ரும்ஹணீயமான வேதமானது நிர்க்குணப்ரஹ்மவாதம் பண்ண வந்ததென்றால் இதனில் மிக்கோரயர்வுண்டே? ... ... (49)

ज्ञानात्मनस्तव तदेव गुणं गृणन्ति तेजोमयस्य हि मणेर्गुण एव तेजः ।

तेनैव विश्वमपरोक्षमुदीक्षसे त्वं रक्षा त्वदीक्षणत एव यतोऽखिलस्य ॥५०॥

*ஜ்ஞாநாத்மநஸ் தவ ததேவ குணம் க்ருணந்தி*
*தேஜோமயஸ்ய ஹி மணேர் குண ஏவ தேஜ:,*
*தேநைவ விச்வமபரோக்ஷ முதீக்ஷஸே த்வம்*
*ரக்ஷா த்வதீக்ஷணத ஏவ யதோகிலஸ்ய.* (50)

**ஜ்ஞாநாத்மந: தவ தத் ஏவ குணம் க்ருணந்தி; தேஜோமயஸ்ய மணே: தேஜ ஏவ ஹி குண:; த்வம் தேநைவ விச்வம் அபரோக்ஷம் உதீக்ஷஸே; யத: அகிலஸ்ய ரக்ஷா த்வதீக்ஷணத ஏவ.**

(எம்பெருமானே!) ஜ்ஞாந ஸ்வரூபியான தேவரீருக்கு அந்த ஞானத்தையே தர்மபூத குணமாகவும் (வேதாந்திகள்) சொல்லுகின்றார்கள்; தேஜஸ் ஸ்வரூபியான ரத்னத்திற்கு தேஜஸ்ஸே குணமாகவுமிராநின்றதன்றோ; (அது போலவே யாமிதுவும்.) தேவரீர் அந்த ஞானத்தினாலேயே உலகம் முழுவதையும் கையிலங்கு நெல்லிக் கனியாகக் காணுகின்றீர்; தேவரீருடைய கடாக்ஷவீக்ஷணத்தினாலேயே அனைத்துலகுக்கும் ரக்ஷணமாக வேண்டியிருப்பதனால்.

* * *—கீழே எம்பெருமானுடைய திருக்குணங்களை ப்ரஸ்தாவிக்கையாலே அவற்றுள் தலையான ஜ்ஞானத்தைப் பற்றிச் சொல்லவேண்டியதைச் சொல்லுகிறது இந்த ச்லோகத்தில்; [ஜ்ஞாநாத்மநஸ் தவ ததேவ குணம் க்ருணந்தி] பகவத் குணங்களுள் ஞானமும் ஒன்றாகவிறே சொல்லப்படுகிறது; * सत्यं ज्ञानमनन्तं ब्रह्म—ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம* என்று பகவத்ஸ்வரூபமே ஜ்ஞாநாத்மகமாகச் சொல்லப்படாநிற்க [தர்மி ஸ்வரூபமே ஜ்ஞானமாயிருக்க] அந்தஜ்ஞானம் பகவானுக்கு எப்படி தர்மமாகும்? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாகச் சொல்லுகிறதுஇது; ஜ்ஞானமே தர்மியாயிருக்கச் செய்தேயும் தர்மபூதஜ்ஞானமு மொன்றுண்டாகத் தட்டில்லை யென்கிறது. த்ருஷ்டாந்த முகேந இதனை மூதலிக்கிறார் [தேஜோமயஸ்ய ஹி மணேர்குண ஏவ தேஜ:] இங்கு ரத்னத்தைச் சொன்னது ப்ரபாவத்பதார்த்தங்களுக்கெல்லாம் உபலக்ஷணம், ரத்னம் ஸூர்யன் தீபம் முதலான ப்ரபாவத் பதார்த்தங்கள் தேஜோமயங்களாயிருக்கச் செய்தேயும் தேஜஸ்ஸு அவற்றுக்குக் குணமாகவுமிராநின்றதிறே, ஸ்வரூபமான தேஜஸ்ஸு தர்மியாயிருக்கும், மற்றொன்று தர்மமாயிருக்கும்; இவ்வளவேயாயிற்று வாசி. அதுபோலவே ஜ்ஞாநஸ்வரூபியான ஆத்மாவுக்கு ஜ்ஞானம் குணமாகவுமிருக்குமென்றதாயிற்று.

[தேநைவ] அந்த தர்மபூத ஜ்ஞானத்தினாலேயே யென்றபடி. [த்வம் விச்வம் அபரோக்ஷம்யதாததா உதீக்ஷஸே] ஸகல ப்ரபஞ்சத்தையும் கரதலாமலகமாகக் காணுகின்றீர். அந்த ஈக்ஷணத்தினால்தான் உலகமெல்லாம் ரக்ஷை பெறுகின்றதென்கிறார் மேல் பாதத்தினால். ... ... ... (50)

त्रय्युद्यता तव युवत्वमुखैर्गुणौघैरानन्दमेधितमियानिति संनियन्तुम् ।
ते ये शतं त्विति परम्परया प्रवृत्ता नैवैष वाङ्मनसगोचर इत्युदाह ॥५१॥

*த்ரய்யுத்யதா தவ யுவத்வமுகைர் குணௌகை:*
*ஆநந்தமேதித மியாநிதி ஸம்நியந்தும்,*
*தே யே சதம் த்விதி பரம்பரயா ப்ரவ்ருத்தா*
*நைவைஷ வாங்மநஸகோசர இத்யுதாஹ.* (51)

த்வ யௌவநமுகை: குணை: எதிதம் ஆநந்தம் இயாந் இதி ஸம்ஙியந்தும் உத்யதா த்ரயீ தே யே சதமிதி பரம் பரயா ப்ரவ்ருத்தா ஸதீ 'எஷ: வாங் மநஸகோசர: நைவ' இதி உதாஹ.

(எம்பெருமானே !) யௌவனம்முதலான குண ஸமூஹங்களினால் மிகச் சிறந்து விளங்குமதான தேவரீருடைய ஆனந்தத்தை இவ்வளவென்று அளவிடப் புகுந்த வேதமானது *தே யே சதம்* என்கிற பரம்பரையினாலே சொல்லப்புகுந்து 'இக்குணம் வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாதது' என்று சொல்லி நின்றது.

* * *—கீழ் எம்பெருமானுடைய ஸ்வரூபநிரூபணம் செய்து போருமடைவில் இருபத்தினான்காவது ச்லோகத்தில் ஆனந்தத்தின் அபரிச்சிந்நத்வத்தை யருளிச்செய்தாரே ; அதை இப்போது இந்த குணப்ரகரணத்திலே விவரித்தருளுகிறார்.

[தவ யுவத்வமுகைர் குணௌகை: எதிதம் ஆநந்தம் இயாநிதி ஸம்ஙியந்தும் உத்யதா த்ரயீ] தைத்திரீயோபநிஷத்தில் ஆனந்தவல்லி யென்னும் பரிச்சேதத்தில் *ஸைஷாநந்தஸ்ய மீமாம்ஸா பவதி* என்று தொடங்கி *யதோ வாசோ நிவர்த்தந்தே* என்னுமளவாக ஓதப்பட்டுள்ள விஷயத்தை இங்கெடுத்துக் காட்டுகிறார். எம்பெருமானுடைய திருக்குணங்களுள் ஒன்றான ஆனந்த குணத்தைப் பற்றிப் பேசுகின்றது அவ்விடம். அந்த ஆனந்தம் இவ்வளவினதென்று சொல்ல முடியாதென்பதைக் காட்டுவதற்கு வேதபுருஷனே ஒருவகையான கல்பனையைச் செய்து போருகிறான். (அதாவது,) ஒரு மநுஷ்யன் ; அவன் நல்ல யௌவன பருவத்திலுள்ளவன் ; ஸகல சாஸ்த்ரங்களையும் ஒன்று விடாமலோதிப் பிறர்களுக்கும் ஓதுவிப்பவன் ; ஆலஸ்யமின்றி எல்லாக் காரியங்களையும் வழுவாமற் செய்பவன் ; தேஹத்திலும் மனத்திலும் திடமுள்ளவன். இவ்வளவும் வாய்ந்தாலும் தரித்ரனாயிருந்தால் பயனில்லையே. அப்படியன்றிச் செல்வமெல்லாம் நிறைந்த பூமண்டலம் முழுவதையும் செங்கோல் செலுத்தியாளும்படியான ஒப்புயர்வற்ற ஸம்பத்தும் வாய்ந்தவன். இப்படிப்பட்ட அதிசயம் நிறைந்த வொரு மநுஷ்யனிருந்தால் அவனுக்கு உண்டாகக்கூடிய ஆனந்தததை முன்னேயெடுத்துக் காட்டி, அதைவிட நூறுமடங்கு அதிகமான ஆனந்த முடையவர்களாக மநுஷ்ய கந்தர்வர்களென்ற வகுப்பைக் கூறி, அவர்களைவிட நூறுபங்கு அதிகமான ஆனந்தமுடையவர்களாக தேவகந்தர்வர்களைக் கூறி இப்படியே நூறுநூறுபங்கு அதிகமான ஆனந்தமுள்ளவர்களாக வரிசையாய் சிரலோகலோக பித்ருக்களையும் ஆஜாநஜதேவர்களையும் கர்மதேவ தேவர்களையும் தேவர்களையும் இந்திரனையும் ப்ருஹஸ்பதியையும் ப்ரஜாபதியையும் சொல்லிவந்து, அந்த ப்ரஜாபதியின் ஆனந்தத்தைவிட நூறுபங்கு அதிகமான ஆனந்தத்தையுடையது பரப்ரஹ்மம்—என்று சொல்லப் பார்த்து 'பரப்ரஹ்மத்தின் ஆனந்தத்தை இவ்வளவு மட்டமாகவா சொல்லித் தலைக்கட்டுவது!' என்று குறைபட்டு [யதோ வாசோ நிவர்த்தந்தே] என்று மறுபடியும் திரும்புகிறதாம். அதாவது, கீழ்ச் சொல்லிக்கொண்டுவந்த ப்ரக்ரியையில் கடைசியாகச் சொல்லப்பட்ட ப்ரஜாபதியை அடுத்த பர்யாயத்தில் மநுஷ்யஸ்தானத்திலே நிறுத்தி அவன் முதலாக ப்ரஜாபதியளவும் சொல்லிக்கொண்டுபோய் அந்த ப்ரஜாபதியின் ஆனந்தத்தைவிட நூறுபங்கு அதிகமான ஆனந்தம் பரப்ரஹ்மத்தினுடையது என்று சொல்லி முடிக்கப்பார்த்து அதுவும் கூடாமையாலே முன்போலே மறுபடியும் ஒரு பர்யாயம் சொல்லுவது—இப்படியே அந்தாதியாக இன்றைக்கும் புந: புநராவ்ருத்தியிலேயே வேதம் கிடக்கின்றதாக ஆளவந்தார் தம்முடைய ஸ்தோத்ரரத்னத்தில் (19) *உபர்யுபர்யப்ஜபுவோபி பூருஷாந் ப்ரகல்ப்ய* என்கிற ச்லோகத்தில் அருளிச் செய்கிறார். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் *மர்த்யோத்தாயம் விரிஞ்சாவதி கமுபரி சோத்ப்ரேக்ஷ்ய மீமாம்ஸமாநா ரங்கேந்த்ராநந்தவல்லீ* என்கிற ச்லோகத்திலருளிச் செய்கிறார். அதெல்லாம் இங்கே அநுஸந்தேயம்.

[தே யே சதம் த்விதி பரம்பரயா இத்யாதி.] இப்படி தே யே சதம், தே யே சதம் என்று தொடர்ந்தோதிச் சென்ற வேதத்தின் பரமதாத்பர்யமென்னவென்றால் எம்பெரு

மானுடைய ஆனந்தம் அவாங்மநஸகோசரம் என்பதேயன்றோ ; *அப்ராப்ய மநஸா ஸஹ* என்று முக்தகண்டமாகவும் சொல்லிற்றிறே அது. ... ... (51)

एवं तया चतुरया तव यौवनाद्याः सर्वे गुणास्सह समस्तविभूतिभिश्च ।
प्रव्याहृतास्स्युरवधीनवधीरयन्तो वाचामगोचरमहामहिमान एव ॥५२॥

ஏவம் தயா சதுரயா தவ யௌவநாத்யாஸ்
ஸர்வே குணாஸ் ஸஹ ஸமஸ்த விபூதிபிச் ச,
ப்ரவ்யாஹ்ருதாஸ் ஸ்யுரவதீந் அவதீரயந்த:
வாசாமகோசரமஹாமஹிமாந ஏவ. (52)

சதுரயா தயா ஏவம் தவ யௌவநாத்யா: ஸர்வே குணா: ஸமஸ்தவிபூதிபிச் ச ஸஹ அவதீந் அவதீரயந்த: வாசாமகோசர மஹாமஹிமாந: ப்ரவ்யாஹ்ருதா ஏவ ஸ்யு:.

(எம்பெருமானே !) சாதுர்யமுடையதான அந்த ஆனந்தவல்லி யென்னும்ச்ருதியினாலே இவ்வித மாகவே தேவரீருடைய யௌவனம் முதலிய ஸகல குணங்களும ஸகல விபூதிகளோடுங்கூட நிரவதி கங்களாகவும் வாசாமகோசரமஹாவைபவ சாலி களாகவும் சொல்லி முடிககப்பட்டவைகளே யாகும்.

* * *—கீழ் ச்லோகத்தில் ஆனந்த குணத்தின் அவாங்மநஸ கோசரத்வம் சொல் லிற்று ; இது ஆனந்த குணமொன்றுக்கேயன்று ; எம்பெருமானுடைய ஒவ்வொரு குணமும் இப்படியே அபரிச்சிந்நமெனபதே அந்த ஆனந்த வல்லியினால் காட்டப்பட்ட தாயிறறு என்கிறாரிதில்.

[சதுரயா தயா] கீழ் ச்லோகத்திலுள்ள த்ரயீ என்பது இங்கு தச்சப்தத்தினால் விவ க்ஷிக்கபபடுகிறது. 'தயா த்ரய்யா' என்றபடி. வேதத்திற்கு சாதுர்யமாவது—ஒவ் வொரு திருக்குணத்தையும் தனித்தனியே யெடுத்து 'இது அபரிசசிந்நம், இது அபரிச் சிந்நம்' என்று சொல்லிப்போரும் சிரமத்தை விட்டு, ஸகல குணங்களும் ஸகல விபூதி களும் அபரிச்சிந்ந மென்பதைச் சுருங்கக் காட்டுகையேயாம். ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் *ப்ருந்தாவநம் பகவதா க்ருஷ்ணேந அக்லிஷ்டகர்மணா* என்கிற ச்லோகத்தில் கண்ண பிரானை அக்லிஷ்டகர்மா என்றார் மஹர்ஷி ; ஒவ்வொரு பசுவுக்கும் கன்றுக்கும் தனித் தனியே புல்லுந்தண்ணீரும் திரட்டித் தருகையாகிற க்லேசத்திற்கு இடமின்றிக்கே நெருஞ்சிக்காடு முழுவதையும் பசும்புற் காடாக ஆம்படி ஸங்கல்பித்த சாதுர்யமன்றோ அங்கு விவக்ஷிதம். வேதவேத்யனுடைய அந்த சாதுர்யம்போலே வேதத்தினுடைய இந்த சாதுர்யம் இங்குக் கொண்டாடப்படுகிறது. [தவ யௌவநாத்யாஸ் ஸர்வே குணா:] ஆனந்த வல்லியின உபக்ரமத்தில் *யுவா ஸ்யாத்* என்று யௌவனத்தை முன்னிட்டு ஓதுகையாலே அது ஸகல குணங்களுக்கு முபலக்ஷணமென்று கொண்டு 'யௌவநாத்யா:' என்கிறார். [ஸமஸ்தவிபூதிபிச் ச ஸஹ] அந்த ஆநந்த மீமாம்ஸையில் *தஸ்யேயம் ப்ருதிவீ ஸர்வா வித்தஸ்ய பூர்ணா ஸ்யாத்* என்று பூலோகைச்வர்யம மாத்திரம் சொன்னது *பொங் கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகுமங்காதுஞ் சோராமேயாள்கின்ற வெம்பெரு மானுடைய ஸகலலோகைச்வர்யத்துக்கு முபலக்ஷணம். ஆக, ஆனந்த குணமொன்றின அபரிச்சிந்நத்வத்தைச் சொல்லப் புறப்பட்ட வேதம் எம்பெருமானுடைய ஸகல குணங் களும் ஸகல விபூதிகளும் நிரவதிகங்களாய் வாசாமகோசர மஹாமஹிமசாலி களானவை யென்று சொலலித தலைக்கட்டினதாக இந்தச்லோகத்தினாலருளிச் செய்தா ராயிற்று. ... ... .... (52)

संवर्तवर्ति निखिलं निरभिज्ञमज्ञं चित्रे च कर्मणि यथार्हमहो! नियच्छन् ।
सद्यः क्रिमिद्रुहिणभेदमभेदमेतदाविश्चकर्थ सकृदीक्षणदीक्षणेन ॥५३॥

**ஸம்வர்த்தவர்த்தி நிகிலம் நிரபிஜ்ஞமஜ்ஞம்**
**சித்ரே ச கர்மணி யதார்ஹமஹோ நியச்சந்,**
**ஸத்ய: க்ரிமித்ருஹிண பேத மபேதமேதத்**
**ஆவிச்சகர்த்த ஸக்ருதீக்ஷண தீக்ஷணேந. (53)**

ஸம்வர்த்தவர்த்தி நிரபிஜ்ஞம் அஜ்ஞம் நிகிலம் சித்ரே ச கர்மணி யதார்ஹம் நியச்சந் ஸக்ருதீக்ஷணதீக்ஷணேந ஸத்ய: ஏதத் க்ரிமித்ருஹிணபேதம் அபேதஞ்ச ஆவிச்சகர்த்த.

*(எம்பெருமானே!) ப்ரளயத்திலே கிடப்பதாய் அநுபவரூபஜ்ஞானமும் ப்ரத்யபிஜ்ஞாரூபஜ்ஞான முமற்றதான ஸகல ஜந்து ஜாதத்தையும் விசித்திரமான தத்தத் கருமங்களிலே யதாயோக்ய மாக நிபந்தித்து ஏககாலத்திலே கடாக்ஷிக்கும் தீக்ஷைகொண்டு உடனே இவ்வுலகத்தை ப்ரஹ்மாதிஸ்தம்பபர்யந்த பேத விசிஷ்டமாயும் ஸ்ருஷ்டிகாலத்தில் பேதமற்றதாயும் படைத்தீர.*

* * *—எம்பெருமானுடைய ஸங்கல்பரூபமான ஜ்ஞாநவிசேஷமும் அபரிச்சிந்ந மஹிமசாலியென்கிறார் இதில். வேதாந்தங்களில் ஸ்ருஷ்டியைச் சொல்லும் வாக்யங்களில் ப்ரளயமே முந்துற ப்ரஸ்தாவிக்கப்படுகிறது. ப்ரபஞ்சம் அநாதியாகையால் அபூர்வ ஸ்ருஷ்டியென்பது சொல்ல வொண்ணாது. *ஸூர்யா சந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்* என்றவிடத்திலும் 'யதாபூர்வம்' என்னப்பட்டதிறே. ஆகவே பிரளயத்தை முன்னே சொல்லி ஸ்ருஷ்டியைப் பின்னே சொல்லுவது முறைமையாயிற்று. *ஸதேவ ஸோம்ய! இதமக்ர ஆஸீத் *ஆஸீதிதம் தமோபூதம்* இத்யாதிகள் காண்க. இப்படிப்பட்ட ப்ரமாணங்களையடியொற்றி [ஸம்வர்த்தவர்த்தி] என்று தொடங்குகிறார். ஸம்வர்த்தமாவது ப்ரலயம். அப்போது ஒன்றுமேயில்லையென்ன வொண்ணாதே. நம்முடைய ஸித்தாந்தத்தில் ஒன்றுக்கு அபூர்வமான உற்பத்தியும் கிடையாது. ஆத்யந்திக விநாசமும் கிடையாது. ஸூக்ஷ்மதசையிலிருந்ததற்கு ஸ்தூலதசாபத்தியே உத்பத்தியென்று வழங்கப்படும். ஸ்தூலதசையைவிட்டு ஸூக்ஷ்மதசைக்கே சென்று சேருவது விநாசமென்று வழங்கப்படும். ஆகவே ப்ரளய காலத்தில் எல்லாம் ஸூக்ஷ்மதசாபந்நமாகவுண்டு. [நிரபிஜ்ஞம்] அநுபவரூபஜ்ஞான மில்லாததென்றபடி. [அஜ்ஞம்] ப்ரத்யபிஜ்ஞாரூபஜ்ஞானமுமில்லாததென்கை. ஸூக்ஷ்மதசாபத்தியில் இவை அஸம்பாவிதமிறே. இப்படிப்பட்ட நிகிலத்தையும். [சித்ரே ச காமணி யதார்ஹம் நியச்சந்] 'சித்ரே ச' என்றது 'சித்ரேஸத்யபி' என்றபடி. அஸங்க்யேயமான பிராணிஸமூஹங்கள் செய்த கருமங்கள் விசித்திரங்களாகவன்றோ இருப்பது. அவற்றுக்கெல்லாம் பரிபாக தசை ஏக காலத்திலேயுண்டாகமாட்டாதே. ஓரூரில் ஒருநாளில் எட்டு பேர்களுக்கு ஜனனமும் ஐந்து பேர்களுக்கு மரணமு முண்டாவதாகக் கொள்வோம். இன்று ஐந்நூறு பேர்களுக்கு ஜனனமும் ஆயிரம் பேர்களுக்கு மரணமும் ஏன் உண்டாகவில்லையென்று ஒருவர் கேட்டால் அதற்கு நாம் விடையிறுக்கக் கூடியது ஒன்றே; ஜனனத்திற்குரிய கர்மவிபாகமும் மரணத்திற்குரிய கர்மவிபாகமுமே ஜனன மரணங்களுக்குக் காரணம்; அப்படிப்பட்ட கர்மவிபாகம் எந்தெந்த நாட்களில் யார்யார்களுக்கு உண்டாகின்றதோ அவரவர்களுக்கு அந்தந்த நாட்களில் தான் ஜனன மரணங்களுண்டாகுமென்பது நூற்கொள்கை. இந்த ரீதியில் பார்க்கும்போது (ஸ்ருஷ்டி காலத்தில) ஸகல ஜந்துக்களுக்கும் ஏக காலத்தில் பிறப்பென்பது அஸம்பாவிதம். ஸகலாத்மாக்களுடையவும் ஜனனத்திற்குரிய கர்மம ஏகக்ஷணவச்சேதேந பரிபக்வமாய்விட்டதாக நினைக்க ஸம்பாவனையில்லையே. அப்படியிருக்க, ஸ்ருஷ்டியிலே உந்முகனான எம்பெருமான ஸகலாத்மாக்களுக்கும

ஏககாலத்திலே கரணகளேபரப்ரதாநம் பண்ணினது கேவலம் க்ருபையினாலேயென்று நம ஆசார்யர்கள் நிர்வஹிக்கும்படி. *யௌगपद्यम् अनुग्रहकार्यम् - யௌகபத்யம் அநுக்ரஹ கார்யம்* என்பார்கள். இவ்விஷயமே இந்த ச்லோகத்தில் உயிராகத் தெரிவிக்கப் படுகின்றது. ஏககாலத்தில் கரணகளேபரப்ரதாநம் பண்ணுகைக்கு மாத்திரமே க்ருபை காரணமாகும். க்ரிமிகீட பதங்காதி ப்ரஹ்மாந்தமாகச் செய்யும் சரீர பேதங்கள் மாத்திரம் தத்தத் கர்மாநு குணமேயாகும். அதையிட்டு [யதார்ஹம் நியச்சந்] என்று அருளிச் செய்யப் பட்டது. ஸத்ய: என்றது 'யுகபத்' என்றபடி. ஸமகாலத்திலேயே யென்கை. க்ரிமித்ருஹிண பேதம்—க்ரிமிமுதலாக த்ருஹிணபர்யந்தமாகப் பலவகைப்பட்ட பேதங்களையுடைத் தாம்படி யென்கை. த்ருஹிணனென்று பிரமனுக்குப் பெயர்.

அபேதம்—பக்ஷபாத சூந்யமாக; வைஷம்ய நைர்க்ருண்ய ப்ரஸக்தியற என்றபடி.

[ஸக்ருதீக்ஷண தீக்ஷ்ணேந ஆவிச்சகர்த்த] ஸங்கல்ப லேசத்தினாலே தோற்றுவித் தீரென்கை. இதனால் ஸங்கல்பத்தின் ப்ரபாவாதிசயம் சொல்லிற்றாயிற்று. ... (53)

अस्तं यदुद्यदुपचाय्यपचायि चैवमीशं दरिद्रमथ जङ्गममप्यनिङ्गम् ।
विश्वं विचित्रमविलक्षणवीक्षणेन विक्षोभयस्यनवधिर्बत शक्तिरैशी ॥५४॥

**அஸ்தம் யதுத்யதுபசாய்யபசாயி சைவம்**
**ஈசம் தரித்ரமத ஜங்கமமப்யநிங்கம்,**
**விச்வம் விசித்ரமவிலக்ஷணவீக்ஷணேந**
**விக்ஷோபயஸ்யநவதிர் பத சக்திரைசீ.** (54)

ஹே ஈச அஸ்தம் யத் உத்யத் உபசாயி அபசாயிச ஈசம் தரித்ரம் ஜங்கமம் அநிங்கம் ஏவம் விசித்ரம் விச்வம் அவிலக்ஷணவீக்ஷணேந விக்ஷோபயஸி, ஐசீ சக்தி: அநவதி:, பத!

ஸர்வேச்வரனே! அழிவதும் உண்டாவதும் வளர்வதும் தேய்வதும் ஸம்பன்னமும் தரித்ரமும் ஜங்கமமும் ஸ்தாவரமுமாய் இப்படி விசித்திரமான பிரபஞ்சத்தை ஸக்ருத் ஸங்கல்பத்தினால் ஸ்ருஷ்டிக் கனுகூலமான விகாரத்தோடு கூடியதாக ஆக்குகின்றீர்; ஈச்வரத்வப்ரயுக்தமான உமது சக்தி எல்லைகடந்தது; ஆச்சரியம்.

* * * —ஸங்கல்பத்தோடு கூட சக்தியின் ப்ரபாவத்தையும் அநுஸந்தித்தருளுகிறாரிதில். ப்ரபஞ்சம் நெடுவாசி பட்டிருக்கிறபடியைப் பூர்வார்த்தத்தில் பேசுகிறார். [அஸ்தம் யத் உத்யத்] விநாசோந்முகமானதொன்று. உதயோந்முகமானதொன்று. இங்கு யத் என்பது ஸர்வநாமபரிக்ஷிதமான யச்சப்தமன்று; 'இண்—கதௌ' என்கிற தாதுவிலிருந்து சத்ர் ப்ரத்யயாந்தமாக நிஷ்பந்நமான ரூபம். பும்லிங்கத்தில் (யந்) என்றும், ஸ்த்ரீலிங்கத்தில் (யதீ) என்றுமாகும். அடைகின்ற என்று பொருள். அஸ்தமயத்தை யடைகின்றதொன்று, உதயத்தையடைகின்றதொன்று. [உபசாயி அபசாயி] அபிவிருத்தி யடைவதொன்று. க்ஷயமடைவதொன்று. [ஈசம் தரித்ரம்] ஐச்வரிய விசிஷ்டமொன்று. தாரித்ர்யவிசிஷ்டமொன்று. [ஜங்கமம் அநிங்கம்] நடையாடுவதொன்று. நிலைத்து நிற்பதொன்று. [ஏவம் விசித்ரம் விச்வம்] *ஈரேசிதவ்ய வைஷம்ய நிம்நோந்நதமிதம் ஜகத்* என்கிறபடியே எல்லைகடந்து காணப்படுகின்ற வைஷம்யங்களாலே விசித்திரமாயன்றோ விச்வமிருப்பது. இப்படிப்பட்டதாம்படி [அவிலக்ஷண வீக்ஷணேந விக்ஷோபயஸி] ஏகரூபமான ஸங்கல்பத்தினாலே விசேஷ விகாரயுக்தமாகச் செய்யாநின்றீரென்கை. ஸ்ருஷ்டிக்கு உந்முகமான குணவிகாரத்தோடு கூடினதாகச் செய்யாநின்றீரென்கை. [அநவதிர் பத சக்திரைசீ] அசிதரஸாதாரணமாய் ஈச்வரத்வ ப்ரயுக்தமாயுள்ள இந்த சக்திக்கு ஓரவதியுண்டோ? ... .... .... ... (54)

रूपप्रकारपरिणामकृतव्यवस्थं विश्वं विपर्यसितुमन्यदसच्च कर्तुम् ।
क्षाम्यन् स्वभावनियमं किमुदीक्षसे त्वं स्वातन्त्र्यमैश्वरमपर्यनुयोज्यमाहुः ॥५५॥

ரூபப்ரகார பரிணாமக்ருத வ்யவஸ்தம்
விச்வம் விபர்யஸிதுமந்யதஸச் ச கர்த்தும்,
க்ஷாம்யந் ஸ்வபாவநியமம் கிமுதீக்ஷஸே த்வம்
ஸ்வாதந்த்ர்ய மைச்வரமபர்யநுயோஜ்யமாஹு:. (55)

ரூப ப்ரகார பரிணாம க்ருத வ்யவஸ்தம் விச்வம் விபர்யஸிதும் அஸத் அந்யத் கர்த்தும் ச க்ஷாம்யந் த்வம் ஸ்வபாவ நியமம் கிம் உதீக்ஷஸே, ஐச்வரம் ஸ்வாதந்த்ர்யம் அபர்யநுயோஜ்யம் ஆஹு:.

(எம்பெருமானே!) இன்னவஸ்துக்களுக்கு ஸ்வரூபபரிணாமம், இன்னவஸ்துக்களுக்கு ஸ்வபாவபரிணாமம் என்று வ்யவஸ்தை பெற்றிருக்கிற சேதநாசேதநாத்மகமான ஸகலப்ரபஞ்சத்தையும் விபரீதமாக்குவதற்கும், அஸத்கல்பமானதை ஸத்தாயுக்தமாக்குவதற்கும் சக்தரான தேவரீர் ஸ்வபாவநியமத்தை ஏதுக்காகக் கணிசிக்கிறீர்? ஈச்வரத்வப்ரயுக்தமான உமது ஸ்வாதந்த்ர்யம் கேட்பாரற்றது என்கிறார்கள்.

*** எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ர்யம் நிரங்குசமென்னுமிடம் சொல்லுகிறது இதில். [ரூபப்ரகாரபரிணாமக்ருத வ்யவஸ்தம் விச்வம்] ரூபமாவது ஸ்வரூபம்; ப்ரகாரமாவது ஸ்வபாவம்; அசேதநவஸ்துவுக்கு ஸ்வரூபவிகாரமும், சேதநவஸ்துவுக்கு ஸ்வபாவவிகாரமும் பகவத்ஸங்கல்பத்தாலே வ்யவஸ்திதம். *க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர:* ஆத்மாக்ஷரத்தோக்ஷர:* என்று அக்ஷர சப்தத்தாலே ஆத்மாவைச் சொல்லியிருக்கையாலே—க்ஷணக்ஷரண ஸ்வபாவமாய்க்கொண்டு க்ஷரசப்தவாச்யமான அசித்துப்போலே விகரிக்கையின்றிக்கே ஸதைகரூபமாயிருக்கும் சித்தத்வம். *அவிகார்யோயம்* என்று கீதோபநிஷதாசார்யனும் அருளிச்செய்தான். விகாரமாவது அவஸ்தாந்தராபத்தி. சேதந ஸ்வபாவத்திற்கு அவஸ்தாந்தராபத்தியிருந்தாலும் சேதந ஸ்வரூபத்திற்கு அது ஒருநாளும் கிடையாது. அசேதந ஸ்வரூபத்திற்கு அது உண்டு. ஆக, ஸ்வரூபவிகார ஸ்வபாவவிகாரங்களிலே ஒரு நியதி கொண்டிருக்கிற விச்வத்தை. [விபர்யஸிதும், அஸத் கர்த்தும், அந்யச்ச கர்த்தும் க்ஷாம்யந்] விபர்யஸ்தமாக்குவதற்கும் அழிக்கைக்கும் ஆக்குவதற்கும் சக்தரென்னவுமாம். [ஸ்வபாவநியமம் கிமுதீக்ஷஸே] அவ்வோவஸ்துக்களின் கர்மபல ஸ்வபாவநியதியைக் கடாக்ஷிக்க வேண்டியதுண்டோ? ப்ரளயாநுகூலமான கர்மவிபாகத்தையும் ஸ்ருஷ்ட்யநுகூலமான கர்மவிபாகத்தையும் எதிர்பார்த்து ஸ்ருஷ்டிப்ரலயங்களை நிர்வஹிக்கவேண்டிய ஆவச்யகதையில்லையிறே தேவரீருக்கு என்றபடி. ஏனென்னில்; நிரங்குச ஸ்வதந்த்ரராகையாலே யென்று ஈற்றடியால் ஸமர்த்திக்கிறார். [ஐச்வரம் ஸ்வாதந்த்ர்யம் அபர்யநுயோஜ்யமாஹு:] நியோகபர்யநுயோகாநர்ஹத்வரூபமான ஸ்வாதந்த்ர்யமன்றோ ஈச்வரனுக்குள்ளது. இதைச் செய், அதைச் செய் என்று ஏவுகை நியோகம்; ஏன் இதைச் செய்தாய்? ஏன் இப்படிச் செய்தாய்? என்று கேட்கை பர்யநுயோகம். இவ்விரண்டுக்கும் நிலமல்லாதது ஈச்வர ஸ்வாதந்த்ர்யம். 'அபர்யநுயோஜ்யம்' என்றவிதில் நியோகாநர்ஹதையும் உபலக்ஷணவிதயா கொள்ளக்கடவது. ஆஹு: என்றதற்கு எழுவாய் சாஸ்த்ர வித்துக்கள்.

அபர்யநுயோஜ்யமான ஸ்வாதந்த்ர்ய விசேஷத்தாலே தேவரீர் எதுவும் செய்யவல்லீர்; எந்த வ்யவஸ்தையும் குறுக்கே நிற்ககில்லாது என்பதே இந்தச்லோகத்தின் பரமதாற்பரியம். வ்யவஸ்தைகளை மீறிச்செய்யவல்ல ஸ்வாதந்த்ர்யம் எம்பெருமானுக்கு இருந்தாலும் தானிட்ட வ்யவஸ்தையை [வரம்பை]த் தானே மாற்றுதல் நன்றல்லாதமையாலே பெரும்பாலும் வ்யவஸ்தைகள் குன்றாமே ஒழுகுவதே எம்பெருமானியல்பு.

ஆனாலும் நிரங்குச ஸ்வாதந்திரியம் போற்றத்தக்கதாகையாலே அது செய்ததாயிற்று இந்தச்லோகத்தினால். ... ... ... (55)

संवर्तसम्भृतकरस्य सहस्ररश्मेरुस्रं तमिस्रयदजस्रविहारि हारि ।

नित्यानुकूलमनुकूलनृणां परेषामुद्वेजनं च तव तेज उदाहरन्ति ॥५६॥

**ஸம்வர்த்தஸம்ப்ருதகரஸ்ய ஸஹஸ்ரரச்மே:**
**உஸ்ரம் தமிஸ்ரயதஜஸ்ரவிஹாரி ஹாரி,**
**நித்யாநுகூலமநுகூலந்ருணாம் பரேஷாம்**
**உத்வேஜநஞ்ச தவ தேஜ உதாஹரந்தி.** (56)

ஸம்வர்த்தஸம்ப்ருதகரஸ்ய ஸஹஸ்ரரச்மே: உஸ்ரம் தமிஸ்ரயத் அஜஸ்ரவிஹாரி ஹாரி பரேஷாம் உத்வேஜநம் ச தவ தேஜ: அநுகூலந்ருணாம் நித்யாநுகூலம் உதாஹரந்தி.

(எம்பெருமானே!) பிரளயகாலத்தில் நிரம்பிய கிரணங்களையுடையவனான ஸூர்யனுடைய கிரணங்களை இருளாக்குவதும் நித்யாஸங்குசிதமும் மநோஹரமும் பிரதிகூலர்களுக்கு பயங்கரமுமான உன்னுடைய தேஜஸ்ஸை அன்பர்களுக்கு நித்ய போக்யமாகச் சொல்லுகிறார்கள்.

*** பராபிபவந ஸாமர்த்த்ய ரூபமான தேஜஸ்ஸென்னும் மஹாகுணத்தை உபச்லோகிக்கிறது இந்தச்லோகம். [**ஸம்வர்த்தஸம்ப்ருதகரஸ்ய ஸஹஸ்ரரச்மே: உஸ்ரம் தமிஸ்ரயத்**] பிரளயகாலத்தில் ஸூர்யசந்த்ர வாயு யமாதிகளான ஸகல தேவதைகளுக்கும் வீர்யம் அபரிமித மென்பது நூற்கொள்கை. ஸூர்யனுடைய கிரணங்கள் அத்யுக்ரமாக ஜ்வலிக்குமப்போது. அந்த ப்ரகாசாதிசயமும் இருளென்னலாம்படியுள்ளது எம்பெருமானுடைய இயற்கையான தேஜஸ்ஸு தமிஸ்ரம் குர்வத்—**தமிஸ்ரயத்** என்றாகக் கடவது. "**தமிஸ்ரம் திமிரம் தம:**" என்று அமரகோசம்.

[**அஜஸ்ரவிஹாரி**] எப்போதும் விஹரிப்பது; ஒருகாலும் ஸங்கோச மில்லாத தென்றபடி. [**ஹாரி**] மநோஹரமானது. [**அநுகூலந்ருணாம் நித்யாநுகூலம்**] *குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதிவெள்ளத்தினுள்ளே* என்று ஆழ்வார்கள்போல் வார் வாய்வெருவும் படியுள்ள தென்கை. [**பரேஷாம் உத்வேஜநஞ்ச**] மாரீசன் போல்வார் ***அப்ரமேயம் ஹி தத் தேஜ:*** என்று நெஞ்சுளைந்து சொல்லும்படியானது. [**தவ தேஜ உதாஹரந்தி**] ஆகவிப்படிப்பட்டதாகவாயிற்று தேவரீருடைய தேஜஸ்ஸை அநுபவ ரஸிகர்கள் கூறுகிறார்கள். ... ... ... (56)

नैव ह्यवाप्यमनवाप्तमिहास्ति यस्य सत्ताऽपि तस्य तव वीक्षणतः प्रजानाम् ।

सम्पत्तु किंपुनरितो न वदान्यमन्यं मन्ये त्वमेव खलु मन्दिरमिन्दिरायाः ॥५७॥

**நைவ ஹ்யவாப்யமநவாப்தமிஹாஸ்தி யஸ்ய**
**ஸத்தாபி தஸ்ய தவ வீக்ஷணத: ப்ரஜாநாம்,**
**ஸம்பத் து கிம்புநரிதோ ந வதாந்யமந்யம்**
**மந்யே த்வமேவ கலு மந்திரமிந்திராயா:.** (57)

யஸ்ய தவ இஹ அநவாப்தம் அவாப்யம் **நைவாஸ்தி** ஹி, தஸ்ய தவ வீக்ஷணத: ப்ரஜாநாம் ஸத்தாபி; ஸம்பத் து கிம் புந:? இத: அந்யம் வதாந்யம் ந மந்யே; இந்திராயா: மந்திரம் த்வமேவ கலு.

(எம்பெருமானே!) யாவரொரு தேவரீருக்கு உபய விபூதியிலும் இதுவரை கிட்டாததாய் இனிக் கிட்டவேண்டியதாக இல்லையோ, அப்படி அவாப்த ஸமஸ்தகாமரான தேவரீருடைய கடாக்ஷத்தினால் தான் ப்ரஜைகளுக்கு ஸத்தையுமாகிறது. செல்வமுண்டாவதைப்பற்றிக் கேட்கவேணுமோ? ஆதலால் தேவரீரைவிட வேறொரு உதாரரை அறிகின்றிலேன்; திருவுக்கு மிருப்பிடம் தேவரீரேயன்றோ.

* * * ஔதார்யகுணத்தைக் கொண்டாடுகிருரிதில். *வேண்டிற்றெல்லாந்தரும் கோதில் வள்ளல்* என்பரனென்னையாக்கித் கொண்டு எனக்கே தன்னைத்தந்த கற்பகம்* என்று போற்றப்பட்ட ஔதார்யம் தேவரீருக்கே அஸாதாரணம். தேவரீர் அவாப்த ஸமஸ்தகாமராகையாலும், தேவரீருடைய கடாக்ஷவீக்ஷணத்தினுலேயே உலகுக்கெல்லாம் ஸத்தையும் ஸம்பத்தும் விளைவதனுலும், ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு தேவரீரே வல்லபராகையாலும் தேவரீருக்கு மேற்பட்டவொரு உதாரவ்யக்தியை உலகிற் காண்கின்றிலேன் என்றுராயிற்று, அவாப்த ஸமஸ்த காமத்வத்தாலும் ப்ரஹ்மாதிஸத்தா ஸதிதிப்ரலய ஹேது பூத ஸங்கல்ப சாலித்வத்தாலும் ச்ரியபதித்வத்தாலும் ஔதார்யம் எம்பெருமானுக்கே அஸாதாரணமென்கை. வதாந்ய:—உதாரபுருஷன். .... ... (57)

पापैरनादिभवसंभववासनोत्थैर्दुःखेषु यः खलु मिमङ्क्षति हन्त जन्तुः ।

तं केवलं नु कृपयैव समुद्धरिष्यन् तद्दुष्कृतस्य ननु निष्कृतिमात्थ शास्त्रैः ॥५८॥

**பாபைரநாதிபவஸம்பவவாஸநோத்தை:**
**து:கேஷு ய: கலு மிமங்க்ஷதி ஹந்த ஜந்து:,**
**தம் கேவலம் நு க்ருபயைவ ஸமுத்தரிஷ்யந்**
**தத்துஷ்க்ருதஸ்ய நநு நிஷ்க்ருதி மாத்த சாஸ்த்ரை:. (58)**

அநாதி பவ ஸம்பவ வாஸநோத்தை: பாபை: ய: கலு ஜந்து: து:கேஷு மிமங்க்ஷதி; ஹந்த! தம் க்ருபயா ஏவ கேவலம் ஸமுத்தரிஷ்யந் சாஸ்த்ரை: தத் துஷ்க்ருதஸ்ய நிஷ்க்ருதிம் ஆத்த.

(எம்பெருமானே!) அநாதியான ஸம்ஸாரப் பிறப்பின் வாஸனையினுலுண்டான பாபங்களினுல் யாவனொரு சேதநன் (அந்தந்த பாபங்களுக்குப் பயனுன) நரகாதி துக்கங்களில் மூழ்க நினைக்கிருனே, அப்படிப்பட்ட சேதநனையும் நிர்ஹேதுக க்ருபையினுலே கரைமரம் சேர்க்கத் திருவுள்ளம் பற்றிய தேவரீர், அவன் செய்த பாவங்களுக்குரிய ப்ராயச்சித்தங்களை சாஸ்த்ரங்களினுல் அருளிச் செய்யாநின்றீர்.

* * *—எம்பெருமானுடைய க்ருபாகுணத்தின் பெருமையை விரிவாக அருளிச் செய்யப் புகுந்து இந்த ச்லோகத்தில் அதற்கு அடியிடுகிருர். *ய: கச்சிதேவ* என்கிற அறுபத்து நான்காம் ச்லோகம் வரையில் ஏகவாக்யார்த்தமாகக் கொள்ளலாம். க்ருபையினுல் உத்தம்பிதமாகக் கடவதான க்ஷமாகுணத்தையும் உடன் கூட்டிக்கொண்டு பவித்துத் தலைக்கட்டுகிருர், எம்பெருமான தன்னுடைய க்ருபையினுலேயே எல்லாரையும் அங்கீகரித்து ரக்ஷித்தருள்வதாக வைத்துக்கொண்டால் ஸர்வமுக்தி ப்ரஸங்கமாகும். திருவுள்ளமானபடி சிலரை ரக்ஷிப்பதும் சிலரைக் கைவிடுவதுமாகக் கொண்டால் வைஷம்ய நைர்க்ருண்ய ப்ரஸங்கமாகும். இவ்விரண்டு ஆபத்துக்களுக்கு மிடமின்றியே, சாஸ்த்ரங்களை அவதரிப்பித்து அவற்றில் பாப நிபர்ஹணத்திற்குரிய ப்ராயச்சித்த ப்ரகாரங்களையும் தெரிவித்து இவ்வழியாலே தன்னுடைய க்ருபாகுணத்தை ஸத்தை பெறுவித்துக் கொள்ளும்படியை அருளிச் செய்கிருர் இந்த ச்லோகத்தில்,

[அநாதிபவஸம்பவவாஸநோத்தை: பாபை:] ஸம்ஸார சக்ரம் சுழனறுவரத் தொடங்கினது இன்று நேற்றன்றே; அநாதிகாலமாகவன்றே பிறப்பிறப்பென்னுமிவை நிகழ்ந்து வருவது. இவற்றில் வாஸனை ரூடமூலமாயிருக்கையாலே அதன் கனத்தினுல் ஏதேனும் பாபங்கள் விளைந்துகொண்டேயிருக்குமே. [து:க்கேஷு ய: கலு மிமங்க்ஷதி ஹந்த ஜந்து:] செய்த பாபங்கள் பலனைக் கொடுத்தே தீருமாதலால் பாப பலமான நரகாதி வ்யஸனங்களிலே ஆழங்காற்பட வேண்டியவனுகிருன சேதநன். இப்படி ஸம்ஸாரமும் தப்பாமல், அதில் பாப வாஸனையும் தப்பாமல், அதனுல் பாபாசரணமும் தப்பா

மல், அதன் பலனான நரகாதி வ்யஸநாநுபவமும் தப்பாமலிருக்குமாகில், அவன் கரையேறும் வழிதானென்னென்னில் ; அது சொல்லுகிறது உத்தரார்த்தத்தினால். செய்த பாபங்களின் பலன் அவசியம் அநுபவித்தேயறவேணுமென்று நிர்ப்பந்தமில்லையே ; * अनुतापादुपरमात् प्रायश्चित्तोन्मुखत्वतः । तत्पूरणाच्चापराधाः सर्वे नश्यन्ति पादशः — அநுதாபாதுபரமாத் ப்ராயச்சித்தோந்முகத்வத:, தத்பூரணாச்சாபராதாஸ் ஸர்வே நச்யந்தி பாதச: * என்கிறபடியே ப்ராயச்சித்தாநுஷ்டானத்தினாலே அவை தொலையக் கடவனவாகையாலே அப்படிப்பட்ட ப்ராயச்சித்தங்களையும் சாஸ்த்ரமுகத்தாலே வெளியிட்டருளினது சேதநர்களை ஈடேற்றுகைக்காகவன்றோ. இதுவும் க்ருபாகார்யமிறே என்றாயிற்று. (58)

शास्त्रैरनादिनिधनैः स्मृतिभिस्त्वदीयदिव्यावतारचरितैश्शुभया च दृष्ट्या ।
निश्श्रेयसं यदुपकल्पयसि प्रजानां सा त्वत्कृपाजलधितल्लजवल्गितश्रीः ॥५९॥

**சாஸ்த்ரைரநாதிநிதனை: ஸ்ம்ருதிபிஸ் த்வதீய**
**திவ்யாவதாரசரிதைச் சுபயா ச த்ருஷ்ட்யா,**
**நிச்ச்ரேயஸம் யதுபகல்பயஸி ப்ரஜாநாம்**
**ஸா த்வத்க்ருபாஜலதிதல்லஜவல்கிதஸ்ரீ:. (59)**

**அநாதிநிதனை: சாஸ்த்ரை: ஸ்ம்ருதிபி: த்வதீய திவ்யாவதாரசரிதை: சுபயா த்ருஷ்ட்யா ச ப்ரஜாநாம் நிச்ச்ரேயஸம் உபகல்பயஸிஇதி யத் ஸா த்வத்க்ருபா ஜலதி தல்லஜ வல்கித ஸ்ரீ:**

(எம்பெருமானே!) உத்பத்திவிநாசங்களில்லாத சாஸ்த்ரங்களாகிய வேதங்களினாலும் மந்வாதி ஸ்மிருதிகளினாலும் தேவரீருடைய திவ்யாவதார சரிதைகளினாலும், திவ்ய கடாக்ஷத்தினாலும் சேதநர்களுக்கு நன்மையைச் செய்தருளாநின்றீரென்பது யாதொன்றுண்டோ, அதுவானது தேவரீருடைய அருளாகிற கடலின் திரைக்கிளர்ச்சியேயாம்.

* * * கீழ்ச்லோகத்தில் "க்ருபயைவ" என்றதை விவரித்தருளுகிறார் இந்த ச்லோகத்தினால். [அநாதிநிதனைச் சாஸ்த்ரை:] ஸ்ம்ருதிகளும் சாஸ்த்ரமாயிருக்கச் செய்தேயும் அவற்றை ஸ்ம்ருதிபி: என்று தனியே சொல்லியிருக்கையாலே கோபலீவர்த்த ந்யாயத்தாலே இங்கு சாஸ்த்ரசப்தம் ச்ருதிகளைச் சொல்லிற்றாகக் கடவது. சாஸநாத் சாஸ்த்ரமாகையாலே 'இதம் குரு, இதம் மாகார்ஷீ:' என்று விதிநிஷேதங்களைத் தெரிவிக்கவல்ல வேதங்களேயன்றோ சாஸ்த்ரசப்தவ்யபதேசத்திற்கு முக்க்யபாத்ரம். அவைதாம் ஒருகால் தோன்றி ஒருகால் தொலையுமவையல்லாமையாலே அநாதிநிதநங்களாயிருக்கும். [ஸ்ம்ருதிபி:] * ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ் தாமுல்லங்க்ய வர்த்ததே, ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ: * என்று எம்பெருமான்தானே சோதிவாய்திறந்து பணித்திருக்கையாலே ச்ருதிகளோடொக்க ஸ்ம்ருதிகளும் கொள்ளத்தக்கவையேயிறே. ஆக, ச்ருதிகளாலும் ஸ்மிருதிகளாலும் என்றபடி.

[த்வதீயதிவ்யாவதாரசரிதை:] எம்பெருமான் தன்னுடைய அவதாரப்ரயோஜனங்களையருளிச் செய்யுமிடத்து * தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி * என்று தர்மஸ்தாபநத்தையும் ஒரு ப்ரயோஜனமாகச் சொல்லியிருக்கையாலே, அவதாரங்களில் காட்டின சரிதைகளும் ச்ருதிஸ்மிருதிகளோடொக்க நினைக்கலாம்படியிறேயிருப்பது. ஆக, இதிஹாஸபுராணங்களாலு மென்றபடி. [சுபயா த்ருஷ்ட்யா ச] சுபாவஹமான திருக்கண்ணோக்கத்தாலும். * ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸது விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்தசிந்தக: * என்றது இங்கே அநுஸந்தேயம்.

ஆக இவற்றாலே, [ப்ரஜாநாம் நிச்ச்ரேயஸம் உபகல்பயஸீதி யத்] சேதநர்களுக்கு தேவரீர் நன்மைசெய்யப்பார்ப்பதென்பது யாதொன்றுண்டு, [ஸா த்வத்க்ருபா ஜலதி

தல்லஜ வல்கித ஸ்ரீ:] இதெல்லாம் நிர்ஹேதுகக்ருபையடியாகவன்றோ என்றபடி. இங்கு ஸா என்று ஸ்த்ரீலிங்க நிர்தேசம் விதேயப்ராதாந்யத்தாலே யென்று கொள்ளக்கடவது. * शैत्यं हि यत्सा प्रकृतिर्जलस्य—சைத்யம் ஹி யத் ஸா ப்ரக்ருதிர் ஜலஸ்ய * என்றவிடம் ஸ்மரிப்பது. ஆக இந்தச்லோகத்தால் எம்பெருமான் நிர்ஹேதுகக்ருபாவிபவத்தினால் செய்தருளுமவை சொல்லிற்றாயிற்று. ... ... (59)

हैं हन्त जन्तुषु निरन्तरसन्ततात्मा पाप्मा हि नाम बत ! कोऽयमचिन्त्यशक्तिः ।
यस्त्वत्कृपाजलधिमप्यतिवेलखेलमुल्लङ्घयत्यकृतभासुरभागधेयान् ॥६०॥

**ஹை ஹந்த ஜந்துஷு நிரந்தரஸந்ததாத்மா**
**பாப்மா ஹி நாம பத! கோயமசிந்த்யசக்தி:,**
**யஸ் த்வத்க்ருபாஜலதிமப்யதிவேலகேலம்**
**உல்லங்கயத்யக்ருதபாஸுரபாகதேயாந். (60)**

ஜந்துஷு நிரந்தர ஸந்தத ஆத்மா அசிந்த்யசக்தி: அயம் பாப்மா கோ நாம! ஹை ஹந்த பத! ய: (பாப்மா) அக்ருத பாஸுர பாகதேயாந் அதிவேல கேலம் த்வத்க்ருபாஜலதிமபி உல்லங்கயதி.

(எம்பெருமானே!) சேதநர்களிடத்தில் இடைவீடின்றி வியாபித்திருக்கின்ற ஸ்வரூபத்தையுடையதாய் நெஞ்சாலும் நினைக்கவொண்ணாத சக்தியையுடைத்தான இந்த பாபமானது என்னோ! (இந்த பாபத்தின் கொடுமை ஒப்பற்றதென்கை.) (பாபம் செய்வதென்ன வென்றால்,) தௌர்ப்பாக்யசாலிகள் தேவரீருடைய கரைகடந்த அருட்கடலையும் மீறினவர்களாம்படி செய்யா நின்றதன்றோ!

* * * சிலபாக்யஹீநர்பக்கலிலே க்ருபையின் ப்ரஸரம் ஸங்குசிதமாவதுண்டே; அதுதன்னைப் பேசுகிறது இந்தச்லோகம். எம்பெருமானுடைய கருணை வெள்ளம் தானாகவே பெருகப்புக்கால் அதைத் தடைசெய்யாமலிருந்தாகிலும் வாழலாமே: அந்தோ! *தென்ன ப்ரபலபாபம்! அவ்வருள் வெள்ளத்தைத் தடைசெய்கின்ற கருவிலே திருவிலாதாரும் சிலருண்டாவதே! என்று தபிக்கிறார். [ஜந்துஷு நிரந்தர ஸந்ததாத்மா அசிந்த்யசக்தி: கோயம் பாப்மா நாம] பிராணிகளிடத்திலே இடைவிடாமல் தொடர்ந்து செல்லுமதாய், இப்படிப்பட்டதென்று சிந்திக்கமுடியாத சக்தியையுடைத்தான பாபமொன்று காண்கிறதே, இதுவென்னோ!. இப்படியும் ஒரு பாபமுண்டாகக் கடவதோவென்கிறார். அந்தபாபத்தினுடைய கொடுமையை உத்தரார்த்தத்தாலே நிரூபித்தருளுகிறார் [ய: த்வத்க்ருபாஜலதிமபீத்யாதி.] நல்வினையொன்றும் செய்தறியாதவர்களாய் தௌர்ப்பாக்ய சாலிகளென்று பேர்பெற்றுள்ளவர்களை தேவரீருடைய நிர்ஹேதுகக்ருபாப்ரவாஹத்தையும் மீறினவர்களாகச் செய்யாநிற்பதொரு பாபம் யாதொன்றுண்டோ, அதன்கொடுமை வாசாமகோசரம் என்றதாயிற்று.

"அக்ருதபாஸுரபாகதேயாந் க்ருபாஜலதிம் உல்லங்கயதி" என்றவிது த்விகர்மகப்ரயோகம். உல்லங்கயதி என்றவிது = அதிக்ராந்தாந்கரோதி என்ற பொருளில் வந்துளது; ணிஜந்தம். ... ... .... (60)

यद्ब्रह्मकल्पनियुतानुभवेऽप्यनाश्यं तत्किल्बिषं सृजति जन्तुरिह क्षणार्धे ।
एवं सदा सकलजन्मसु सापराधं क्षाम्यस्यहो ! तदभिसन्धिविराममात्रात् ॥६१॥

**யத் ப்ரஹ்மகல்பநியுதாநுபவேப்யநாச்யம்**
**தத் கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே,**
**ஏவம் ஸதா ஸகலஜந்மஸு ஸாபராதம்**
**க்ஷாம்யஸ்யஹோ ததபிஸந்திவிராமமாத்ராத். (61)**

யத் (கில்பிஷம்) ப்ரஹ்ம கல்பநியுத அநுபவேபி அநாச்யம் தத் கில்பிஷம் ஜந்து: இஹ க்ஷணார்த்தே ஸ்ருஜதி, ஏவம் ஸகலஜந்மஸு ஸதா ஸாபராதம் ததபிஸந்திவிராமமாத்ராத் க்ஷாம்யஸி, அஹோ!

(எம்பெருமானே!) யாதொரு பாபமானது லக்ஷக் கணக்கான ப்ரஹ்ம கல்பங்கள் அநுபவித்தாலும் மாளாததோ அப்படிப்பட்ட பாபத்தை சேதநன் இங்கு அரைநொடியில் செய்கிறான். இப்படி எல்லாப் பிறப்புகளிலும் எப்போதும் குற்றவாள னாகவே யிராநின்ற சேதநனை 'இனி நாம் குற்றம் செய்யலாகாது' என்று கையொழிந்த வளவையே கொண்டு க்ஷமித்தருளா நின்றீர்; ஆச்சரியமான குணமிது.

* * * க்ஷமாகுணத்தின் பெருமையைப் பேசுகிறாரிதில், [யத் கில்பிஷம் ப்ரஹ்ம கல்பநியுதாநுபவேபி அநாச்யம், தத் ஜந்து: க்ஷணார்த்தே இஹ ஸ்ருஜதி] அவனவன் பண்ணின பாபத்தை அநுபவித்தே தொலைக்கவேணுமிறே; *நாபுக்தம் க்ஷீயதே கர்ம கலபகோடிசதைரபி* எனகையாலே செய்த பாபந்தான் அநுபவித்தாலல்லது தொலையா திறே. ஒருவன் அரைநொடிப்பொழுதில் செய்கிற பாபம் எத்தனைகாலமநுபவித்துத் தொலைக்கவேணு மென்னில்; [ப்ரஹ்மகல்பநியுதாநுபவேபி அநாச்யம்] லக்ஷக்கணக் கான ப்ரஹ்மகல்பங்கள்வரைக்கும் அநுபவித்தாலுங்கூடத் தொலையாததுகாணீர். அரைநொடிப் பொழுதில் பண்ணும் பாபத்தின தன்மை இதுவானால்* ஆண்டுகள் நாள் திங்களாய் நிகழ்காலமெல்லாம் பிறவிதோறும் செய்து போருகிற பாபங்களின் தன்மை யைப் பற்றி வாய்திறக்க வுண்டோவழி? அப்படிப்பட்ட அபராதங்கள் கூடுபூரித்துக் கிடக்கிற சேதநரையும் எம்பெருமான் க்ஷமைக்கு இலக்காக்குவதுண்டே; அதுதன் னைச் சொல்லுகிறது [ஏவம் ஸதா ஸகலஜந்மஸு ஸாபராதம் க்ஷாம்யஸ்யஹோ] என்று.

க்ஷமிக்கைக்கு ஒரு ஹேது இருக்கவேணுமே; நிர்ஹேதுகமாக க்ஷமிப்பதென் றால் ஸர்வாபராதிகள் விஷயத்திலும் க்ஷமையுண்டாகவேணுமே; என்ன ஹேது கண்டு க்ஷமிப்பதென்னில்; [ததபிஸந்தி விராமமாத்ராத்] அபராதங்களைச் செய்து கொண்டே போந்தவன் ஒருநாளிலே கைசலித்துக் கையொழிந்து நின்றானாகில் அந்த விராமந்தானே பற்றாசாக க்ஷமித்தருளுகிறபடி, வ்யாஜமாத்ரஸாபேக்ஷமான க்ஷமா குணத்திற்கு இவ்வளவு போதுமன்றோ. ... .... (61)

क्षान्तिस्तवेयमियती महती कथं नु मुह्येदहो त्वयि कृताञ्जलिपञ्जरेषु ।
इत्थं स्वतो निखिलजन्तुषु निर्विशेषं वात्सल्यमुत्सुकजनेषु कथं गुणस्ते ॥६२॥

க்ஷாந்திஸ் தவேயமியதீ மஹதீ கதம் நு
முஹ்யேதஹோ த்வயி க்ருதாஞ்ஜலிபஞ்ஜரேஷு,
இத்தம் ஸ்வதோ நிகிலஜந்துஷு நிர்விசேஷம்
வாத்ஸல்யமுத்ஸுகஜநேஷு கதம் குணஸ் தே. (62)

இயதீ மஹதீ தவ க்ஷாந்தி: த்வயி க்ருதாஞ்ஜலி பஞ்ஜரேஷு கதம் நு முஹ்யேத்: இத்தம் நிகில ஜந்துஷு ஸ்வத: நிர்விசேஷம் தே வாத்ஸல்யம் உத்ஸுகஜநேஷு கதம் குண:?

(எம்பெருமானே!) இவ்வளவாய்ப் பெரிதான தேவரீருடைய பொறுமைக் குணமானது தேவரீர் விஷயத்தில அஞ்ஜலியாகிற ரக்ஷையைச் செய்து கொண்டவர்கள் விஷயத்தில் எவ்வாறு இடம் பெறுதொழியும்? இப்படி ஸகல சேதநர்களிடத் திலும் இயற்கையாகவே பக்ஷபாத சூந்யமாயிருக் கின்ற தேவரீரது வாத்ஸல்யமானது அத்யந்த பக்தர்கள் விஷயத்தில் எங்ஙனே குணமாகும்?

* * *—க்ஷமாகுணத்தின் ப்ரஸ்தாவத்திலே இதன் காஷ்டாபூமியான வாத்ஸல்ய குணத்தையும் ப்ரஸ்தாவித்தருளுகிறார். [தவ இயந் மஹதீ இயம் க்ஷாந்திः] கீழ் ச்லோகத்திலே "க்ஷாம்யஸ்யஹோ ததபிஸந்திவிராமமாத்ராத்" என்னப் பெற்ற பெருமை பொருந்தியதான இந்த க்ஷாந்தியானது. [த்வயி க்ருதாஞ்ஜலிபஞ்ஜரேஷு (பக்தேஷு) கதம் ந முஹ்யேத்?] அபராதங்களைத் தீரக்கழியச் செய்து போந்தவர்கள் ஒரு ப்ராயச்சித்தமும் பண்ணிக்கொள்ளாதே ஓர் அஞ்ஜலிமாத்ரமும் பண்ணுதே அவ்வபராதங்களில் நின்றும் கை யொழிந்து நின்ற வளவுக்கே க்ஷமைகாட்டியருளாநின்ற தேவரீர், *க்ருதாபராதஸ்யஹி தே நாந்யத் பச்யாம்யஹம் க்ஷமம், அந்தரேணாஞ்ஜலிம் பத்வா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத்* இத்யாதி ப்ரமாணங்கள் கண்டோ அதுதானுமறியாமலோ அஞ்ஜலியும் செய்து போருகின்ற பக்தர்கள் திறத்திலே அந்த க்ஷமையைக் காட்டாதிருக்க முடியுமோ?

பஞ்ஜரமாவது கவசம்; அஞ்ஜலியானது ஸ்வதோஷாபநோதந ஹேதுவாகையாலே கவசமென்னத்தகுமிறே. கதம் முஹ்யேத் என்றது—கதம் விரமேத் என்றபடி. பக்திரிக்தர்கள் பக்கலிலும் ப்ரஸரிக்கக் கடவதான தேவரீருடைய க்ஷமையானது பக்தியுக்தர்கள் பக்கலிலே ப்ரஸரிக்கக் கேட்கவேணுமோ? இதுவொரு அதிசயமோ? என்றதாயிற்று. இதுபோலவேதான் வாத்ஸல்யமும் எனகிறார் உத்தரார்த்தத்தில். பக்தியுக்தர்கள பக்கலிலே ப்ரஸரிக்கின்ற க்ஷமாகுணம் எப்படி அதிசயமன்றோ அப்படியே பக்திமான்களிடத்திலே காண்கின்ற தேவரீருடைய வாத்ஸல்யமும் அதிசயமன்று என்கிறார். தெருவில் போகிறவர்கள் திறத்திலும் கநகதாரைகளை வர்ஷிக்குமொருவன் புத்ரமித்ர பாந்தவாதிகளிடத்திலே வர்ஷித்தானென்றால் அதையொரு ஔதார்யமாகச் சொல்லுவர்களோ? இயல்பு என்ன வேண்டுமத்தனையிறே. அதுபோலவே, பக்தர்கள் அபக்தர்கள் என்கிறவாசியின்றிக்கே எல்லார்திறத்திலும் ப்ரஸரிக்கக்கடவதான வாத்ஸல்ய குணமானது அத்யந்த பக்தர்களிடத்திலே ப்ரஸரித்து மேன்மை பெறமாட்டாதிறே யென்கை. இத்தால் *அநாலோசித விசேஷாசேஷ லோகசரண்யத்வம் அநுஸந்திக்கப் பட்டதாயிற்று. ... (62)

विश्वं धियैव विरचय्य निचाय्य भूयः सञ्जह्रुषस्सति समाश्रितवत्सलत्वे ।
आजग्मुषस्तव गजोत्तमबृंहितेन पादं परामम्रृशुषोऽपि च का मनीषा ! ॥६३॥

**விச்வம் தியைவ விரசய்ய நிசாய்ய பூய:**
**ஸஞ்ஜஹ்ருஷஸ் ஸதி ஸமாச்ரிதவத்ஸலத்வே,**
**ஆஜக்முஷஸ் தவ கஜோத்தமப்ர்ம்ஹிதேந**
**பாதம் பராமம்ர்சுஷோபி ச கா மநீஷா. (63)**

தியா ஏவ விச்வம் விரசய்ய நிசாய்ய பூய: ஸஞ்ஜஹ்ருஷ: ஸமாச்ரித வத்ஸலத்வே ஸதி கஜோத்தமப்ர்ம்ஹிதேந ஆஜக்முஷ: பாதம் பராமம்ர்சுஷோபி ச தவ கா மநீஷா?

(எம்பெருமானே!) ஸங்கல்பத்தினாலேயே பிரபஞ்சத்தை யெல்லாம் படைத்தும் காத்தும் மீண்டும் ஸம்ஹரித்தும் போருகிறவராய், ஆச்ரித வாத்ஸல்யமுண்டானவளவில் கஜேந்திராழ்வானுடைய கூக்குரலினாலே (பொய்கைக் கரைக்கு) ஓடி வருபவராய் (அவ்வானையின்) பாதத்தைத் தடவிக் கொடுப்பவராயுமிராநின்ற தேவரீருடைய திருவுள்ளம் என்னோ?

* * * கீழ் ச்லோகத்தில் ப்ரஸ்துதமான வாத்ஸல்ய குணத்தின் ஸீமாபூமியைப் பேசி யினியராகிறார் இந்த ச்லோகத்தில். கஜேந்திராழ்வானிடத்தில் காட்டியருளின

பரிவின் மிகுதி வாத்ஸல்ய குணத்தின் எல்லை நிலமிறே; அந்தப் பரிவுதன்னை யருளிச் செய்கிறார். *மழுங்காத வைநுதிய சக்கர நல்வலத்தையாய், தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க்களித்தாலுன் சுடர்ச்சோதி மறையாதே* என்ற திருவாய்மொழிப் (3—1—9.) பாசுரத்திற்கு விசேஷ வியாக்கியானம்போல் அமைந்ததாம் இந்த ச்லோகம்.

கஜேந்திராழ்வான் ஒரு மடுவின் கரையிலே முதலைவாய்க் கோட்பட்டு * கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே * என்னும்படி நெடுங்காலம் துவண்டு, இனி நம்மைக் காத்துக்கொள்ள நம்மாலாகாதென்று துணிந்து, ஆதி மூலமே! யென்று வாய் விட்டலற, அக்கூக்குரலைக் கேட்ட ஸ்ரீவைகுண்டநாதன் அரைகுலையத்தலைகுலைய அறப்பதறியோடிவந்து மடுவின்கரையிலே விழுந்து உபசாரங்கள்பண்ணிக் காத்தருளினதாக இதிஹாஸம். இதனை ஆழ்வார்கள் * மீனமர்பொய்கை நாண்மலர் கொய்வான் வேட்கையினோடு சென்றிழிந்த, கானமர்வேழம் கையெடுத்தலறக் கராவதன் காலினைக் கதுவ, ஆனையின் துயரந் தீரப்புள்ளூர்ந்து சென்றுநின்றாழி தொட்டான் * என்றும், * பெண்ணுலாஞ்சடையினானும் பிரமனுமுன்னைக் காண்பான், எண்ணிலாவூழியூழிதவஞ் செய்தார் வெள்கிநிற்ப, விண்ணுளார் வியப்பவந்து ஆனைக்கன்றருளையீந்த * என்றும் நூற்றுக்கணக்கான பாசுரங்களினால் பேசியுள்ளார்கள். யானையின்துயரம் தீர்க்கவேண்டுமானால் அரைகுலையத் தலைகுலைய மடுவின்கரையிலே வந்துவிழவேண்டுமோ? இங்குவந்தும் * க்ராஹம் சக்ரேண மாதவ: * என்றும் * குட்டத்துக்கோள் முதலைதுஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான் * என்றும் சொல்லுகிறபடியே திருவாழியாழ்வானை ஏவியன்றோ காரியங்கொண்டது; இந்தத் திருவாழியாழ்வானைப் பரமபதத்தில் நின்றும் போகவிட்டால் அவன்தானேவந்து முதலையைத் துணித்து மீளானோ? அன்றியும், திருவாழியாழ்வானை ஏவவேணுமென்கிற நிர்ப்பந்தந்தானுமில்லையே, ஸகலப்ரபஞ்சங்களினுடையவும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை *ஸோகாமயத * * ஸ தபோதப்யத* என்று உபநிஷத்து ஓதும்படியான் ஸங்கல்பசக்தியினாலேயே நிர்வஹித்துப் போருமெம்பெருமான் அந்த ஸங்கல்பங் கொண்டே முதலையைத் துணித்து கஜேந்திராழ்வானைக் காத்தல் முடியாததொன்றோ? ஆக, ஸங்கல்பத்தினாலேயே கஜேந்திராழ்வானுடைய துயரைத் தீர்க்கலாமாயிருக்க, அங்ஙன் செய்யாதே நேர்கொடுநேரே ஓடிவந்ததென்னோ? ஓடிவந்து, முதலை கவ்வி உதிரமொழுக நின்ற யானையின் காலைத் திருக்கையிலேந்தித் தடவிக்கொடுத்து உபசாரங்கள் செய்ததுதான் என்னோ! இங்ஙனே செய்ததற்கு என்ன திருவுள்ளம் பிரானே! என்கிறார்.

இங்ஙனம் கேள்வியோடே தலைக்கட்டிநின்றது இந்தச்லோகம். கீழே நாமெடுத்துக்காட்டிய திருவாய்மொழிப் பாசுரத்தின் பின்னடிகளிலே இதற்குற்ற விடை காணத்தக்கது. இன்னமும் கேளீர்; * பரமாபதம் ஆபந்ந மநஸா அசிந்தயத் ஹரிம் * என்றும் * கவளமாகதத்த கரியுய்யப் பொய்கைக் கராங்கொளக் கலங்கியுள் நினைந்து துவள * என்றும் சொல்லுகிறபடியே—இடர்ப்பட்ட களிறு எம்பெருமானை நெஞ்சால்நினைத்த மாத்திரமேயொழிய இங்கேவந்திடாயென்று அழைத்தது மில்லை: அப்படியிருக்கத் திருமங்கையாழ்வார் * போரானை பொய்கைவாய்க் கோட்பட்டு நின்றலறி, நீரார் மலர்க் கமலங் கொண்டோர் நெடுங்கையால், நாராயணா ஓ! மணி வண்ணா நாகணையாய், வாராய் என்னாரிடரை நீக்காய் * (சிறியதிருமடல்.) என்று, எம்பெருமானை மடுவின் கரையேற வருமாறு யானை அழைத்ததாகவே பாசுரம் பாடி விட்டார், உண்மையில் எம்பெருமான் நேரில்வந்தே பரிஹரிக்க வேண்டிய இடராதலாலும், அப்படி நேரில் வந்தேயாகவேணுமென்கிற எண்ணம் திண்ணமாக கஜேந்திராழ்வானுக்கு இருந்தபடியாலுமே திருமங்கையாழ்வார் இங்ஙனே பாசுரம் பணித்தார். கஜேந்திராழ்வானுடைய துயரம் ஸங்கல்பத்தினால் தீர்க்க முடியாததோ? நேர்கொடுநேரே எழுந்தருளியே பரிஹரிக்கத்தக்கதோ? என்னில்; ஆம். முதலையைத் துணித்த பிறகு கஜேந்திராழ்வான்

விண்ணப்பஞ் செய்கிறான்—* நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ.* என்கிறான்; என்றேனுமொருநாள் தொலைந்தே போகக்கடவதான இவ்வுடல் தொலைவதைப்பற்றி நான் வருந்தினேனல்லேன்; உன்னை நேரே கண்ணாரக்கண்டு, வருந்திப் பறித்த இப்புஷ்பங்களைத் திருவடிகளிலே பணிமாறப் பெறவேணுமென்றேநான் விசாரமுற்றுக்கிடந்தேன் பெருமானே! என்றாயிற்று கஜேந்திராழ்வான் விண்ணப்பஞ் செய்தது. இதற்குத் திருவாழியாழ்வானையனுப்பி என் செய்வது? ஸங்கல்பசக்தியினால்தான் என்செய்வது? நேரில்வந்துகாட்சிதந்தேயாக வேண்டியதாயிற்று. வந்தருளி யானைபட்ட இடரின் கனத்தைக் கண்டவாறே 'அந்தோ! என் காவற் சோர்வு என்றாயிற்று! என்பக்தனை இங்ஙனே முதலைவாயில் துடிக்கவிட்டேனே! ஓ படுகொலை படுகொலை படுகொலை!' என்று துடித்து, திருப்பரிவட்டத்தைத் திருப்பவளத்திலேவைத்து வெதுகொண்டு ஒற்றியொற்றி உபசாரங்கள் செய்தாலன்றித் தன்னுடைய நெஞ்சாறல் தீரமாட்டாதாயிருந்தமையாலே அதுவும் செய்ய ப்ராப்தமாயிற்று.

நான்காம் பாதத்தில் பராமம்ர்க்ஷ: என்கிற ப்ரயோகம் விலக்ஷணமானது 'பராமம்ர்சிவாந்' என்பது ப்ரதமாவிபக்தியில் ரூபம்; அதற்கு ஷஷ்டீவிபக்தியில் ரூபம் பராமம்ர்க்ஷ: என்பது; பகவத் விசேஷணம். வேதத்திற்கே உரியதான க்வஸு ப்ரத்யயாந்த ரூபமிது, வைதிக ப்ரயோகங்கள் சில லோகத்திலும் வழங்குவனவாம். *தம் தஸ்திவாம்ஸம் நகரோபகண்டே* இத்யாதி.

கா மநீஷா? என்று ப்ரச்நத்திலே நோக்காக அருளிச் செய்ததன்று; ஈடுபாடு தோற்றவருளிச்செய்கிறபடி. ... .... ... (63)

यः कश्चिदेव यदि किञ्चन हन्त जन्तुर्भव्यो भजेत भगवन्तमनन्यचेताः ।
तं सोऽयमीदृश इयानिति वाप्यजानन् हे वैनतेयसममप्युररीकरोषि ॥६४॥

ய: கச்சிதேவ யதி கிஞ்சந ஹந்த ஜந்து:
பவ்யோ பஜேத பகவந்தமநந்ய சேதா:,
தம் ஸோயமீத்ருச இயாநிதி வாப்யஜாநந்
ஹை வைநதேயஸமமப்யுரரீகரோஷி. (64)

ய: கச்சிதேவ ஜந்து: பவ்ய: அநந்ய சேதா: பகவந்தம் கிஞ்சந பஜேத யதி, ஸோயம் ஈத்ருச: இயாந் இதி வா அபி அஜாநந் தம் வைநதேய ஸமம் அபி உரரீ கரோஷி; ஹை ஹந்த.

(எம்பெருமானே!) எவனேனுமொருவன் தூயவனாய் அநந்யமநஸ்கனாய் தேவரீரைப் பணிந்தானாகில், இவன் இன்னான் இனையான் என்றுகூட ஆலோசியாமல் அவனைப் பெரிய திருவடியோடொக்கவும் திருவுள்ளம் பற்றுகின்றீர்; இது மிக வியக்கத்தக்கது.

*.* * கீழ் ச்லோகத்தில் கஜேந்திராழ்வான் பக்கலிலே எம்பெருமான் காட்டின பரிவின் மிகுதியை யருளிச்செய்த ப்ரஸங்கத்திலே, எம்பெருமான் பக்தர்களை இன்னாரினையாரென்று பாராதே வ்யாமோஹாதிசயம் பெருக நின்று கைக்கொள்ளும் படியை யருளிச் செய்கிறாரிதில். [ய: கச்சிதேவ ஜந்து: பவ்ய: அநந்யசேதா: பகவந்தம் கிஞ்சந பஜேத் யதி] திர்யக் ஜாதீயனான கஜேந்திரன் திறத்திலா இவ்வளவு வியாமோஹம்! என்றிறே சிலரெண்ணுவது; இன்னமும் கடைகெட்ட யோனிகளிலே பிறக்கவுமாம்; வஸ்து கோடியிலே எண்ணத்தகாத ஜன்மமாகவுமமையும். *அநந்ய சேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:* என்று கீதையிற் சொன்னபடியே அநந்ய சேதஸ்கத்வமொன்றேயாயிற்று தேட்டம். [ஸோயம் ஈத்ருச இயாநிதிவாபி தம் அஜாநந்] இவன் இன்னானினையானென்றுகூட அவனை யிட்டெண்ணுவானல்லனெம்பெருமான், இவன்

செய்த குற்றமென்ன, இவனது பிறப்பென்ன, இவனது இயல்பென்ன என்று ஒன்றையும் கணிசியானென்றபடி. [வைநதேயஸமம்பி உரரீகரோஷி] * தாஸஸ் ஸகா வாஹநமாஸநம் த்வஜோ யஸ்தே விதாநம் வ்யஜநம் த்ரயீமய:* என்னப்பட்ட புள்ளரையனோடொக்கவும் அவனைக் கைக் கொள்ளும்படி காணாநின்றோம். [ஹை] இதென்ன சீலந்தான்! என்று வித்தராகிறபடி.

இந்த ச்லோகத்தில் உரரீகரோஷி என்று மத்யம புருஷக்ரியையிருக்கையாலே இரண்டாம் பாதத்தில் பகவந்தம் என்றிருக்கிற ப்ரதம புருஷநிர்தேசம் சேராதென்று கொண்டு சிலர் "பவ்யோ பஜேத ஹி பவந்தம்" என்று பாடத்தைத் திருத்துவர்; அது வேண்டா; பகவந்தமென்றது தேவரீரை யென்றபடி. பூஜ்யம் பவந்தம் இதி யாவத். ... ... ... (64)

त्वत्साम्यमेव भजतामभिवाञ्छसि त्वं तत्साक्षतैर्विभवरूपगुणैस्त्वदीयैः ।

मुक्तिं ततो हि परमं तव साम्यमाहुः त्वद्दास्यमेव विदुषां परमं मतं तत् ॥६५॥

த்வத்ஸாம்யமேவ பஜதாமபிவாஞ்சஸி த்வம்
தத்ஸாத்க்ருதைர் விபவரூபகுணைஸ் த்வதீயை:,
முக்திம் ததோ ஹி பரமம் தவ ஸாம்யமாஹு:
த்வத்தாஸ்யமேவ விதுஷாம் பரமம் மதம் தத். (65)

பஜதாம் தத்ஸாத்க்ருதை: த்வதீயை: விபவரூபகுணை: த்வத்ஸாம்யம் ஏவ த்வம் அபிவாஞ்சஸி; ததோ ஹி தவ பரமம் ஸாம்யம் முக்திம் ஆஹு:; த்வத்தாஸ்யம் ஏவ தத் விதுஷாம் பரமம் மதம்.

(எம்பெருமானே!) பக்தர்களுக்கு (முக்திதசையில் ஸாம்யமாவது தேவரீருடைய விபவங்களையும் ரூபகுணங்களையும் அவர்களுக்கு அதீனமாக்கி அதனாலேயே ஸாம்யாபத்தியென்றும் தேவரீர் திருவுள்ளம் பற்றியிருப்பது; (அங்ஙனன்றிக்கே) தேவரீருக்கு அடிமை செய்வதே மோக்ஷமென்று ஸ்ரீவைஷ்ணவ வித்வான்களின் சிறந்த கொள்கை.

* * * இந்த ஸ்தவத்திற்கு ஸ்ரீவைகுண்டஸ்தவ மென்றிறே திருநாமமுள்ளது ஸ்ரீவைகுண்டநாதனை ஸவிபூதிகனாக அநுபவிக்க இழிந்தாராகையாலே இவ்வளவும் விபூதிப்பரப்பிலே ஊன்றிப்போந்தார். இடையிலே *யத் வைஷ்ணவம் ஹி பரமம் பதமாமநந்தி* என்கிற நாற்பத்தோராம் ச்லோகந்தொடங்கி ஐந்து ச்லோகங்களினால் திருநாட்டை வருணித்தவர் ப்ராஸங்கிகமாக எம்பெருமானுடைய திருக்குணங்களை ப்ரசம்ஸிக்கப் புகுந்து அவற்றைப் பேசிவந்தார். இனி, மூக்த போக்யமான திவ்யமங்கள விக்ரஹத்தை மேலேபேசப்புகுகிறாராய் இந்த சலோகத்தில் எம்பெருமானார் தர்சனப்படியே மோக்ஷபதார்த்த நிஷ்கர்ஷம் செய்தருளுகிறார்.

"பாஷாணகல்பதைவ முக்தி:" என்றும், "ஆத்யந்திக துக்கத்வம்ஸ ஏவ மோக்ஷ:" என்றும் சொல்லிப்போருவர் பிறர். *ब्रह्म वेद ब्रह्मैव भवति— ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி* என்கிற ச்ருதி வாக்யத்தின் உண்மைப்பொருளுணராதார் பரமபுருஷனோடு ஐக்யமாய் விடுகையே மோக்ஷ மெனறுர்கள். * तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति— ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்ய முபைதி* என்கிற ச்ருதியிலுலே பரப்ரஹ்மத்தோடு ஸாம்யமடைவதாகச் சொல்லிற்று. இரண்டு பொருள்கள் தனித்தனியே இருந்தாலல்லது ஸாம்யம என்னப் போகாது. * तद्भिन्नत्वे सति तद्गतभूयोधर्मवत्त्वं साम्यम् * என்றிறே சாஸ்திரஜ்ஞர்கள் சொல்லுவது. "கமலஸமம் முகம்" என்றால்

கமலமென்கிறவொரு பதார்த்தமும் முகமென்கிறவொரு பதார்த்தமும் தனித்தனியிருந்து தீரவேண்டுமன்றோ, அப்படியே சேதநனும் பரமசேதநனுமாகிற இரண்டு வஸ்துக்கள் தனித்தனியே உள்ளனவாக இசைந்தாலல்லது ஸாம்யமுபைதி என்று ச்ருதி சொன்னது பொருந்தாது. இந்த ஸாம்யாபத்தியாவது என்ன? என்று விமர்சிக்குமளவில், எம்பெருமானுக்குள்ள விபவரூப குணங்களெல்லாம் முக்தாத்மாவுக்குமுண்டாகப் பெறுகையே ஸாம்யம் என்னவேணும். முக்தி ஸாம்ராஜ்யமென்பது இவ்வளவேயன்று; *உற்றேனுகந்துபணிசெய்து உனபாதம் பெற்றேன்* என்று பணி செய்கையை விசேஷித்தருளிச் செய்திருக்கையாலே எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதுதான் மோக்ஷமென்றாயிற்று ஸ்ரீவைஷ்ணவ வித்வான்கள் திருவுள்ளம் பற்றியிருப்பது. அது தன்னையருளிச் செய்தாராயிற்று இந்த ச்லோகத்தில்.

நான்காம் பாதத்தில் விதுஷாம் என்றது—ஆழ்வார் ஆளவந்தார் எம்பெருமானார் போல்வாரைத் திருவுள்ளம் பற்றியது. ... ... (65)

तद्वै तथाऽस्तु कतमोऽयमहो ! स्वभावो यावान्यथाविधगुणो भजते भवन्तम् ।
तावांस्तथाविधगुणस्तदधीनवृत्तिस्संश्लिष्यसि त्वमिह तेन समानधर्मा ॥६६॥

**தத் வை ததாஸ்து கதமோயமஹோ ஸ்வபாவோ**
**யாவாந் யதாவிதகுணோ பஜதே பவந்தம்,**
**தாவாந் ததாவிதகுணஸ் தததீநவ்ருத்தி:**
**ஸம்ச்லிஷ்யஸி த்வமிஹ தேந ஸமாநதர்மா.** 66

தத் வை ததா அஸ்து; அயம் ஸ்வபாவ: அஹோ கதம:!, யாவாந் யதாவிதகுண: பவந்தம் பஜதே, த்வம் தாவாந் ததாவிதகுண: தததீநவ்ருத்தி: தேந ஸமாநதர்மா ஸம் ஸம்ச்லிஷ்யஸி.

(எம்பெருமானே!) கீழ்ச் சுலோகத்திற் சொல்லப்பட்ட விஷயம் அப்படியிருக்கட்டும். [இவ்வாச்சரியம் கேளீர்.] (ஒருசேதநன்) எவ்வளவிலனாய் எந்த குணத்தை உபாஸ்யமாகப் பரிக்ரஹித்தவனாய் தேவரீரை பஜிக்கின்றானோ, தேவரீர் அவ்வளவராய் அப்படிப்பட்ட குணவிஷ்காரத்தையேயுடையராய் அவ்வுபாஸகனுக்கு அதீனமான வ்ருத்தியையுடையவராய் தத்ஸதர்மாவாய்க் கொண்டு அவனோடு கலந்தருளுகிறீர்; அந்தோ! இது என்ன இயல்பு!

***—*அப்ரதீகாலம்பநாத்......தத்க்ரதுச்ச* என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்திற்கு விஷய வாக்யமாக * यथाक्रतुरस्मिन् लोके पुरुषो भवति तथेत: प्रेत्य भवति — யதாக்ரதுரஸ்மிந் லோகே புருஷோ பவதி ததா இத: ப்ரேத்ய பவதி* என்கிற ச்ருதியைக்காட்டி *तथोपासीनस्तथैव प्राप्नोति* என்று தாத்பர்யமருளப் பட்டது. அவ்வர்த்தமே இந்த சுலோகத்திலருளிச் செய்யப்படுகிறது. [தத்வை ததாஸ்து] கீழ்சுலோகத்தில் பூர்வார்த்தத்தில் சொல்லப்பட்ட விஷயம் கிடக்கட்டுமென்றபடி. தன்னுடைய விபவரூப குணங்களை பக்தர்களுக்கு அதீனமாக்கி ஸாம்யாபத்தியளிப்பதாகச் சொன்னவது ஒரு பெரிய குணமோ? இப்போது சொல்லப்படுவதன்றோ மிகச்சிறந்த குணம்! என்பது கருத்து. அது தன்னைச் சொல்லுவதற்கு முன்னே [கதமோயமஹோ ஸ்வபாவ:!] என்று நெஞ்சு குழைகிறார். [யாவாந் யதாவிதகுணோ பவந்தம் பஜதே] பஜிப்பவன் எவ்வளவான ஜ்ஞாநாதி குணயுக்தனாய்க் கொண்டு தேவரீருடைய திருக்கல்யாண குணங்களிலே தன்னுடைய ருசிக்கீடாக எந்த திருக்குணங்களை உபாஸ்யமாகக்கொண்டு பஜிக்கிறானோ; [த்வம் தாவாந் ததாவிதகுண:] தேவரீரும்

அவ்வளவராய் அவனுபாஸித்த குணங்களை மாத்திரமே குணமாகக்கொண்டவராய் [ததக்ரதுந்யாய] அவ்வுபாஸகனிட்ட வழக்காய், [தேஹ ஸமானதர்மா ஸம்ச்லிஷ்யஸி] அவனோடு புரையறக்கலந்து பரிமாறுகின்றீர். அயமஹோ கதமஃ ஸ்வபாவஃ என்று விஸ்மயப்படுகிறபடி.

வேதாந்திகளின் கோஷ்டியிலே ததக்ரதுந்யாயம் ப்ரஸித்தம்; அதிற் சொன்ன உபாஸகனுக்கும் அவனுக்கு உபாஸ்யனான எம்பெருமானுக்குமே தெரியக்கடவதான இந்த குணவிசேஷத்தைப்பன்னியுரைக்கை நம்போல்வார்க்கு நிலமோ?

இந்த ச்லோகத்திற்கு மற்றொருவகையாகவும் பொருள் காணலாம். ... (66)

नीलाञ्जनाद्रिनिभमुन्नसमायताक्षमाजानुजैत्रभुजमायतकर्णपाशम् ।
श्रीवत्सलक्षणमुदारगभीरनाभिं पश्येम देव ! शरदश्शतमीदृशं त्वाम् ॥६७॥

*நீலாஞ்ஜநாத்ரிநிப முந்நஸ மாயதாக்ஷம்*
*ஆஜாநு ஜைத்ரபுஜ மாயத கர்ணபாசம்,*
*ஸ்ரீவத்ஸலக்ஷண முதாரகபீரநாபிம்*
*பச்யேம தேவ! சரதச் சத மீத்ருசம் த்வாம்.* 67

ஹே தேவ! நீலாஞ்ஜநாத்ரிநிபம் உந்நஸம் ஆயதாக்ஷம் ஆஜாநு ஜைத்ர புஜம் ஆயதகர்ணபாசம் ஸ்ரீவத்ஸலக்ஷணம் உதார கபீரநாபிம் த்வாம் ஈத்ருசம் சதம் சரதஃ பச்யேம.

எம்பெருமானே! நீலாஞ்ஜனமலை போன்றவரும் நீண்ட திருமூக்குடையவரும், பரந்த திருக்கண்களை யுடையவரும், திருமுழந்தாளளவுந் தொங்குகின்ற ஜயசீல புஜங்களையுடையவரும், பரந்த திருச்செவி மடல்களையுடையவரும், திருமறுமார்பரும், அழகிய ஆழ்ந்த திருநாபியையுடையவருமான தேவரீரை இவ்வண்ணமாகவே பல்லாண்டு பல்லாண்டளவும் ஸேவிக்கக் கடவோம்.

* * * இனி இந்தச்லோகம் முதலாக எண்பத்துமூன்றும் ச்லோகமளவாக பரம ப்ராப்யமான பரம புருஷார்த்தந்தன்னையே வாய்வெருவுகிறார். திருநாட்டில் திருமாமணி மண்டபந்தன்னிலேயே தாமிருப்பதாக பாவநாப்ரகர்ஷத்தாலே அபிஸந்தி பண்ணி அந்த திவ்யமங்கள விக்ரஹத்தையநுபவித்து இனியராய்ப் பேசுகிறார். [நீலாஞ்ஜநாத்ரிநிபம்] * பச்சைமாமலைபோல் மேனியிறே. * நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமாலே வாவென்று கூவும் * என்னும்படியிறே உள்ளது. [உந்நஸம்] * மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோவென்று நித்யஸந்தேஹ ஜநகமாயாயிற்று கோலநீள் கொடிமூக்கிருப்பது. "உந்நதா நாஸிகா யஸ்ய ஸஃ—உந்நஸஃ" என்று விக்ரஹமறிவது. * உபஸர்க்காச்ச* (5—4—119) என்கிற பாணிநிஸூத்ரம் காண்க. நாஸிகாயா நஸாதேசஃ.

[ஆயதாக்ஷம்] *கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய திருக்கண்களிருக்கிறபடி. [ஆஜாநு ஜைத்ரபுஜம்] திருமுழந்தாளளவும் நீண்டு ஜயசீலங்களாய் விளங்காநின்ற திருக்கைகளையுடையீர். [ஆயதகர்ணபாசம்] திருச்செவி மடல்கள் தோளளவும் தளதளென்று தொங்கியிருக்குமிறே. *லஸதம்ஸவிலம்பி கர்ணபாசம்* என்றும் *ஆயத் கர்ணபாசபரிகர்மஸதம்ஸம்* என்றும் வரதராஜஸ்தவத்திலுமருளிச்செய்திருரிறே. [ஸ்ரீவத்ஸலக்ஷணம்] ஸ்ரீவத்ஸமென்பது ஒரு மயிர்ச்சுழி. இதுஎம்பெருமானுடைய திருமார்பிலே அஸாதாரணமாக விளங்குவதாம். ஸ்ரீராமாயணத்தில் பெருமானை நோக்கி மந்தோதரி பண்ணும் ஸ்தோத்ரத்திலும் *வ்யக்த மேஷ மஹாயோகீ...... ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீஃ* என வருவது காண்க. [உதாரகபீரநாபிம்] திருநாபிக்கு ஔதார்யமாவது நான்முகனைத்தந்து அவன் மூலமாக மூவுலகையும் தருகையாம். [தேவ! ஈத்ருசம் த்வாம் சரதச் சதம் பச்யேம] இங்ஙனமே காலதத்வமுள்ளதனையும்

ஸேவிக்கக்கடவேன். *ஸதா பச்யந்தி ஸூரய:* என்னப்பட்ட பேறு அடியேனுக்கு வாய்க்கவேணு மென்றாராயிற்று. ''சாதச்சதம்'' என்றது நூறுவருஷத்தளவிலே நிற்கும் வார்த்தையன்று; *இன்னுமொருநூற்றாண்டிரும் போலே கொள்ளக்கடவது. (67)

अम्भोरुहाक्षमरविन्दनिभाङ्घ्रियुग्ममाताम्रतामरसरम्यकराग्रकान्ति ।
भृङ्गालकं भ्रमरविभ्रमकायकान्ति पीताम्बरं वपुरदस्तु वयं स्तवाम ॥६८॥

*அம்போருஹாக்ஷ மரவிந்த நிபாங்க்ரியுக்மம்*
*ஆதாம்ரதாமரஸரம்ய கராக்ரகாந்தி,*
*ப்ருங்காலகம் ப்ரமரவிப்ரம காயகாந்தி*
*பீதாம்பரம் வபுரதஸ் து வயம் ஸ்தவாம.* 68

வயம் து, அம்போருஹாக்ஷம் அரவிந்த நிப அங்க்ரியுக்மம் ஆதாம்ர தாமரஸ ரம்யகராக்ர காந்தி ப்ருங்காலகம் ப்ரமர விப்ரமகாய காந்தி பீதாம்பரம் அத: வபு: ஸ்தவாம.

(எம்பெருமானே!) அடியோங்களோ வென்றால் செந்தாமரைக் கண்களையுடையதும் செந்தாமரையடிகளையுடையதும் செந்தாமரை போன்றழகிய திருக்கைத்தலவழகையுடையதும் வண்டொத்திருண்ட குழல்களையுடையதும் வண்டின் சாயலையுடையதும் பீதகவாடையணிந்ததுமான இந்தத் திருமேனியை ஏத்தக் கடவோம்.

* * * கீழ்ச்லோகத்திலே காட்சியை வேண்டினார்; கண்டவாறே வாய்மூடி நிற்கவொண்ணாதிறே, வாய்படைத்த ப்ரயோஜனம் பெறுமாறு வாயாரத் துதிக்க ப்ராப்தமாகுமே; அதுதன்னைச் சொல்லிவைக்கிறாரிதில். *கட்டுரைக்கில் தாமரை நின்கண்பாதம் கையொவ்வா* என்னச்செய்தேயும், *செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாய்ச் செங்கமலம் செந்தாமரையடிக்கள்* என்றும், *கைவண்ணம் தாமரை வாய் கமலம்போலும் கண்ணிணையு மரவிந்தம் அடியுமஃதே* என்றுமிறே அருளிச்செய்து போருவது. இவ்வாழ்வான் தாமும் *அப்ஜம் நு கதம் நிதர்சநம்?* என்றருளிச்செய்துவைத்து *அப்ஜபாத மரவிந்தலோசநம் பத்மபாணிதலம்* என்கிறாரிறே ஸௌந்தரபாஹுஸ்தவத்தில். ஆகவே எம்பெருமானுடைய திவ்யாவயவங்களுக்கு மீண்டுமீண்டும் தாமரையையே போலியாகச் சொல்லவேண்டியிருக்கையாலே அம்போருஹமென்றும் அரவிந்தமென்றும் தாமரஸமென்றும் சொற்களை மாற்றியிட்டு வருணிக்கிறபடி.

[ப்ருங்காலகம்] *செங்கமலப்பூவில் தேனுண்ணும் வண்டேபோல் பங்கிகள் வந்து உன் பவளவாய் மொய்ப்ப* என்ற பெரியாழ்வார் திருமொழியையுட்கொண்டு அருளிச்செய்கிறபடி. முன்னெற்றி மயிர்கள் திருமுகமண்டலத்திலே படிந்திருப்பதை நோக்கினால் செங்கமலப் பூவில் தேனுண்பதற்கு வண்டுகள் படிந்தனவோ! என்னலாம்படியிருக்குமிறே.

[ப்ரமரவிப்ரமகாயகாந்தி] திருமேனி முழுவதுமே வண்டினங்களின் ஒளியாயிருக்கும். *தூவியம் புள்ளுடைத் தெய்வவண்டு* என்று எம்பெருமானையே வண்டாகவருளிச்செய்தாரிறே நம்மாழ்வார். [பீதாம்பரம்] திருமேனிக்குப் பரபாகசோபையாகத் திருப்பீதாம்பரமணிந்திருக்கிறபடி. இப்படிப்பட்ட திருமேனியை வாயார வாழ்த்தக் கடவேனென்றாராயிற்று. ... ... ... .... (68)

भ्रूविभ्रमेण मृदुशीतविलोकितेन मन्दस्मितेन मधुराक्षरया च वाचा ।
प्रेमप्रकर्षपिशुनेन विकासिना च संभावयिष्यसि कदा मुखपङ्कजेन ॥६९॥

*ப்ரூவிப்ரமேண ம்ருதுசீதவிலோகிதேந*
*மந்தஸ்மிதேந மதுராக்ஷரயா ச வாசா,*
*ப்ரேமப்ரகர்ஷபிசுநேந விகாஸிநா ச*
*ஸம்பாவயிஷ்யஸி கதா முகபங்கஜேந.* 69

ப்ரூ விப்ரமேண ம்ருது சீத விலோகிதேந மந்த ஸ்மிதேந, மதுராக்ஷரயா வாசா ச, ப்ரேம ப்ரகர்ஷ பிசுநேந விகாஸிநா முகபங்கஜேந ச (மாம்) கதா ஸம்பாவயிஷ்யஸி.

(எம்பிரானே!) திருப்புருவவிலாஸத்தாலும் மெல்லிய குளிர்ந்த கடாக்ஷ வீக்ஷணத்தாலும் புன்முறுவலாலும், மதுரமான அக்ஷரங்களையுடைய வாக்கினாலும், உள்ளேயுறையும் ப்ரேம ப்ரகர்ஷத்தைக் கோள் சொல்லித்தரக் கடவதாய் விகாஸசாலியான முகாரவிந்தத்தினாலும் (அடியேனை) எப்போது ஸத்கரிக்கப்போகிறாய்?

***—எம்பருமானார் ஸ்ரீவைகுண்டகத்யத்திலே—"கதாஹம் பகவந்தம் நாராயணம்... இதி பகவத்பரிசர்யாயாம் ஆசாம் வர்த்தயித்வா" என்றருளிச்செய்த கணக்கிலே நான்கு ச்லோகங்களருளிச்செய்கிறார்.

இதில், *நின்முக வொளிதிகழ முறுவல்செய்துநிற்குங்கால மென்றைக்கோ வென்கிறார். [ப்ரூவிப்ரமேண] *தன்கைச்சார்ங்கமதுவேபோல் புருவவட்டமழகிய* என்னும்படியான திருப்புருவங்களின் விலாஸத்தாலும். [ம்ருதுசீத விலோகிதேந] *தம்பெருங் கண்மலர்ப் புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார்* என்னும்படியான திருக்கண்ணோக்கத்தாலும். [மந்தஸ்மிதேந] *முற்றம்புகுந்து முறுவல்செய்து நின்றீர்* என்று அந்தரங்க ப்ரணயிநிகளுக்கே அரும்பெரும் பேறான புன்முறுவலினாலும். [மதுராக்ஷரயா ச வாசா] *வஞ்சி மருங்குல்நெருங்கநோக்கி வாய்திறந்தொன்று பணித்ததுண்டு* என்றும் *தொண்டரோர்க் கருளிச்சோதிவாய் திறந்து* என்றும் பேசலாம்படியான திருவாசகங்களாலும். [ப்ரேமப்ரகர்ஷ பிசுநேந விகாஸிநா முகபங்கஜேந ச] திருவுள்ளத்திலுறையும் ப்ரீதியடங்கலும் திருமுகமண்டல விகாஸத்திலே தோற்றக்கடவதாயிருக்கவேணும். இங்ஙனே அடியேனுக்குப் பரிசளிக்கத் திருவுள்ளம்பற்றி யிருப்பதெப்போதோ? ... .... .... ... (69)

वज्राङ्कुशध्वजसरोरुहशङ्खचक्रमत्स्यीसुधाकलशकल्पककल्पिताङ्कम् ।
त्वत्पादपद्मयुगलं विगलत्प्रभाद्भिर्भूयोऽभिषेक्ष्यति कदा नु शिरो मदीयम् ॥७०॥

*வஜ்ராங்குசத்வஜஸரோருஹ சங்கசக்ர*
*மத்ஸ்யீ ஸுதாகலச கல்பக கல்பிதாங்கம்,*
*த்வத்பாத பத்மயுகளம் விகளத் ப்ரபாத்பி:*
*பூயோபிஷேக்ஷ்யதி கதா நு சிரோ மதீயம்.* 70

வஜ்ர அங்குச த்வஜ ஸரோருஹ சங்க சக்ர மத்ஸ்யீ ஸுதாகலச கல்பக கல்பித அங்கம் த்வத் பாதபத்ம யுகளம் விகளத் ப்ரபா அத்பி: மதீயம் சிர: கதா நு பூய: அபிஷேக்ஷ்யதி.

(எம்பிரானே!) *வஜ்ரமென்ன அங்குசமென்ன த்வஜமென்ன தாமரையென்ன சங்கமென்ன சக்கரமென்ன மத்ஸ்யமென்ன அம்ருதகலசமென்ன கல்பவ்ருக்ஷமென்ன ஆகிய இவற்றின் ரேகைகளினால் அடையாளம் செய்யப் பெற்ற உனது பாதாரவிந்த த்வந்த்வமானது பெருகுகின்ற காந்திப்ரவாஹமாகிற தீர்த்தத்தினால் என்னுடைய சிரஸ்ஸை எப்போது நன்றாக அபிஷேகம் செய்யுமோ?

* * *—திருமுக மண்டலத்தினால் பண்ணியருளும் பரிசை ப்ரார்த்தித்தார் கீழ் ச்லோகத்தில். *நீ யொருநாள் படிக்களவாக நிமிர்த்த நின் பாதபங்கயமே தலைக்கணியாய்* என்றும், *கோலமாமென் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே* என்றும், *அடிச்சியோந்தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணாவுன் கோலப்பாதம்* என்றும் ப்ரார்த்திப்பர்களிறே ஆழ்வார்கள்; அந்த ப்ரார்த்தனையும செய்தருளுகிறார் இரண்டு ச்லோகங்களாலே. வஜ்ராயுதாத்மகமான சின்னம், அங்குசரூபமான சின்னம, த்வஜரூபமான சின்னம, தாமரைப்பூமயமான சின்னம், பஞ்சாயுத சின்னம், மத்ஸ்யாகாரமான சின்னம் அம்ருதகலச ரூபமான சின்னம், கல்பவ்ருக்ஷாத்மகமான சின்னம் ஆகியஇவை உள்ளடியிலே பொருந்தியிருக்கப்பெறுவது உத்தம புருஷபாத சிஹ்நமாக சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருப்பதாலும், எம்பெருமானுடைய திருவடித்தலங்களிலே இந்த சின்னங்களை பக்தர்கள் அநுஸந்திப்பதாலும் வஜ்ராங்குசேத்யாதி அருளிச்செய்கிறபடி. அதிமாநுஷ ஸ்தவத்திலும்* வஜ்ரத்வஜாங்குச ஸுதா கலசாதபத்ரபங்கேருஹாங்க பாங்கர்ம பரீத மங்கः* என்றருளிச் செய்தது காண்க. ஆளவந்தாரும் *சங்க ரதாங்க கல்பக த்வஜாரவிந்தாங்குச வஜ்ரலாஞ்சநம்* என்றருளிச் செய்தார். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே *வஜ்ராரவிந்தத்வஜச் சத்ரீகல்பக சங்கசக்ரேத்யாதி யருளிச்செய்தார். ஆக, ரேகாத்மகங்களான இவற்றாலே அலங்க்ருதமான தேவரீருடைய பாதாரவிந்தயுகளமானது காந்தி ப்ரவாஹங்களாலே அடியேனுடைய தலையை அபிஷேகம் செய்யப்பெறுவது எப்போதோ வென்றாராயிற்று. .... ... ... (70)

त्रैविक्रमक्रमकृताक्रमणत्रिलोकमुत्तंसमुत्तममनुत्तमभक्तिभाजाम् ।
नित्यं धनं मम कदा हि मदुत्तमाङ्गमङ्गीकरिष्यति चिरं तव पादपद्मम् ॥७१॥

**த்ரைவிக்ரமக்ரமக்ருதாக்ரமண த்ரிலோகம்**
**உத்தம்ஸமுத்தம மநுத்தமபக்தி பாஜாம்,**
**நித்யம் தநம் மம கதாஹி மதுத்தமாங்கம்**
**அங்கிகரிஷ்யதி சிரம் தவ பாதபத்மம். 71**

**த்ரைவிக்ரம க்ரம க்ருத ஆக்ரமண த்ரிலோகம் அநுத்தம பக்திபாஜாம் உத்தமம் உத்தம்ஸம் மம நித்யம் தநம் தவ பாதபத்மம் மதுத்தமாங்கம் கதா சிரம் அங்கீகரிஷ்யதி?**

(எம்பிரானே!) த்ரிவிக்ரமாபதானத்தினால் மூவுலகையும் ஆக்ரமித்ததாய் சிறந்த பக்திமான்களுக்கு உத்தமமான சிரோபூஷணமாய் எனக்கு சாச்வதமான செல்வமாயிராநின்ற உனது திருவடித்தாமரையை என்னுடைய தலையானது நித்யமாக அங்கீகரிப்ப தெப்போதோ?

* * * -தேவரீருடைய உலகமளந்த பொன்னடிகளை என்னுடைய தலை நித்ய சேகரமாகக்கொள்வது என்றைக்கோவென்கிறார். [த்ரைவிக்ரமக்ரமக்ருதாக்ரமணத்ரிலோகம்] * தாவி யன்றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்ட வெந்தாய் * என்கிறபடியே காடுமோடையுமளந்த திருவடிகளுக்குப் பாவியேன் தலை ஆஸ்பதமாகக் கூடாதோ? [அநுத்தமபக்திபாஜாம் உத்தமம் உத்தம்ஸம்] மிகச் சிறந்த பக்தியே வடிவெடுத்த ஆழ்வார்களுக்கும் ஆளவந்தார் போன்ற ஆசாரியர்களுக்கும் தலையான சிரோபூஷணமாயிருந்த திருவடிகளை நீசனேன் நிறையொன்றுமிலேன் விரும்புவது தகுதியற்றதாயினும் சாபலத்தாலே விரும்புகிறேன், க்ஷமித்தருளவேணும் என்பது உட்கருத்து.

இந்தச்லோகத்தில் பாத பத்மத்தை கர்த்தாவாக வைத்து உத்தமாங்கத்தை கர்மமாக்கி, தேவரீருடைய பாதார விந்தமானது என்னுடைய தலையை எப்போது அங்கீகரிக்கப்போகிறதென்று சிலர் பொருளுரைக்கப் பார்ப்பர்கள்; அது பொருந்தாது. அப்போது இரண்டாவது பாதத்தில் உத்தம்ஸம் என்றது சேராது; ஏனென்னில், அந்த சப்தம் நித்ய பும்லிங்கமாகையாலே "உத்தம்ஸः பாதபத்மம்" என்றே யிருக்கக் கடவதா

கும். பாதபத்மமென்பதை த்விதியாந்தமாகத் திருவுள்ளம்பற்றி ப்ரயோகித்தருளின படியாலே உத்தம்ஸ மென்றதும் த்வதீயாந்தமாக உபபந்நமாகக் குறையில்லை. (71)

उन्निद्रपत्रशतपत्रसगोत्रमन्तर्लेखारविन्दमभिनन्दनमिन्द्रियाणाम् ।
मन्मूर्ध्नि हन्त करपल्लवतल्लजं ते कुर्वन् कदा कृतमनोरथयिष्यसे माम् ॥७२॥

**உந்நித்ரபத்ர சதபத்ரஸகோத்ரம், அந்தர்**
**லேகாரவிந்த மபிநந்தந மிந்த்ரியாணும்,**
**மந்மூர்த்நி ஹந்த கரபல்லவதல்லஜம் தே**
**குர்வந் கதா க்ருதமநோரதயிஷ்யஸே மாம்.** 72

உந்நித்ர பத்ர சதபத்ர ஸகோத்ரம் அந்தர்லேகாரவிந்தம் இந்த்ரியாணும் அபிநந்தநம் தே கரபல்லவதல்லஜம் மந் மூர்த்நி குர்வந் மாம் கதா க்ருத மநோரதயிஷ்யஸே,

(எம்பிரானே!) விகஸித்த இதழ்களையுடைய தாமரையோடொத்ததாயும் உட்புறத்தில் ரேகாரூபமான அரவிந்தத்தை யுடையதாயும் ஸர்வேந்த்ரியாஹ்லாத கரமாயும் சிறந்த தளிர் போன்றதாயுமிருக்கிற உன்னுடைய திருக்கைத்தலத்தை என் தலையில் வைத்து என்னைப் பரிபூர்ண மநோரதனாக்குவது என்றைக்கோ?

* * *— * அணிமிகு தாமரைக் கையை யந்தோ அடிச்சியோந்தலைமிசை நீயணியாய் * என்று ஆழ்வார் ப்ரார்த்தித்தாப்போலே ப்ரார்த்திப்பது இந்த ச்லோகம். [உந்நித்ரபத்ரசதபத்ரஸகோத்ரம்] நாட்பூ மலர்ந்தாற்போலே மலர்ந்த திருக்கைத் தலங்களை அடியேன சென்னிமீது வைத்தருளவேணும். [அந்தர்லேகாரவிந்தம்] திருக்கைத்தலம் தாமரை போன்றிருப்பது மாத்திரமன்று; தாமரைரேகையும் பொருந்தியிருக்குமதாயிற்று. [இந்த்ரியாணும் அபிநந்தநம்] ஸர்வேந்த்ரியாஹ்லாதகரமானது. இப்படிப்பட்ட [தே கரபல்லவ தல்லஜம்] தல்லஜ சப்தம் ச்ரேஷ்ட வாசகம். அழகிற் சிறந்த தளிர் போன்ற திருக்கைத்தலத்தை. [மந்மூர்த்நி குர்வந்] * காலந்தோறும் யானிருந்து கைதலை பூசலிட்டால் * என்கிறபடியே என்கையையே என்தலைமீதுவைத்துக்கொண்டு புலம்பாநின்றேன் காண்; இப்படிப்பட்ட என்தலையிலே உன்திருக்கைத்தலத்தை வைத்தருளி அஞ்சேலென்னவேணடாவோ? நான் தலைபடைத்த ப்ரயோஜனம் இதுவன்றோ. (72)

आङ्गी निसर्गनियता त्वयि हन्त कान्तिर्नित्यं तवालमियमेव तथाऽपि चान्या ।
वैभूषणी भवति कान्तिरलंतरां सा हैं पुष्कलेव निखिलाऽपि भवद्विभूतिः ॥७३॥

**ஆங்கி நிஸர்கநியதா த்வயி ஹந்த காந்தி:**
**நித்யம் தவாலமியமேவ ததாபி சாந்யா,**
**வைபூஷணீ பவதி காந்தி ரலந்தராம் ஸா**
**ஹைஹ புஷ்கலேவ நிகிலாபி பவத்விபூதி:.** 73

த்வயி நிஸர்கநியதா தவ ஆங்கீ இயம் காந்திரேவ நித்யம் அலம்; ததாபிச அந்யா வைபூஷணீ ஸா காந்தி: அலம் பவதிதராம்; நிகிலாபி பவத்விபூதி: ஹைஹ புஷ்கலேவ.

(எம்பிரானே!) உனது திருமேனியில இயற்கையாகவுள்ள காந்தியே போதும்; அதற்குமேல் மற்றொருகாந்தியுமுள்ளதே, (அதாவது) திருவாபரணச் சேர்த்தியாலுண்டான காந்தியானது பரமபோக்யமாயிராநின்றது; (இங்ஙனே பிரித்துச் சொல்லுவதென்?) உன்னுடைய விபூதி ஒவ்வொன்றுமே யாவஜ்ஜீவம் அநுபவிக்கப் போதுமானது: ஐயோ!

* * *—இயற்கையழகின்மேலே செயற்கையழகும் தம்மையீடுபடுத்தும்படியை யருளிச் செய்கிறாரிதில். தேவரீருடைய போக்யதையிலே அடியேன் *டுபகைக்குத் திரு மேனியில் நின்றும் இயற்கையாகப் பரம்புகிற காந்தியொன்றே போதுமாயிருக்க, அதற்கு மேலே *மெய்யமர் பல்கலன் நன்கணிந்தானுக்கு* என்றும், *பலபலவேயாபரணம்* என்றும், *மின்னுநீண்முடியாரம் பல்கலன் தானுடை யெம்பெருமான்* என்றும் சொல்லு கிறபடியே திருவாபரணங்களணிந்ததனாலுண்டாகும் அழகு வெள்ளமுமானால் பின்னை யும்கேட்கவேணுமோ? தேவரீருடைய விபவம் ஒவ்வொன்றும் புஷ்கலமாயிறேயிருப்பது.

श्रीवत्सकौस्तुभकिरीटललाटिकाभिः केयूरहारकटकोत्तमकण्ठिकाभिः ।
उद्दामदाममणिनूपुरनीविबन्धैर्भान्तं भवन्तमनिमेषमुदीक्षिषीय ॥७४॥

***ஸ்ரீவத்ஸ கௌஸ்துப கிரீட லலாடிகாபி:***
***கேயூரஹார கடகோத்தம கண்டிகாபி:,***
***உத்தாமதாம மணிநூபுர நீவிபந்தை:***
***பாந்தம் பவந்த மநிமேஷ முதீக்ஷிஷீய.*** 74

ஸ்ரீவத்ஸ கௌஸ்துப கிரீட லலாடிகாபிঃ கேயூர ஹார கடக உத்தம கண்டிகாபிঃ உத்தாம தாம மணிநூபுர நீவிபந்தைঃ பாந்தம் பவந்தம் அநிமேஷம் உதீக்ஷிஷீய.

(எம்பிரானே!) ஸ்ரீவத்ஸம் கௌஸ்துபம் கிரீடம் சுட்டி இவைகளாலும், தோள்வளை ஹாரம் கடகம் சிறந்த கண்டஸரம் இவைகளாலும், மிகச்சிறந்த வொளியையுடைய மணிநூபுரமென்ன உதரபந்தனமென்ன இவைகளாலும் விளங்கிக் கொண்டிருக்கிறவுன்னை இமை கொட்டாது ஸேவிக்கக் கடவேன்.

* * *—திருவாபரணங்களோட்டைச் சேர்த்தியழகை யநுபவிக்க ஆசைப்படுகிறார். திருமார்பிலணிந்துள்ள ஸ்ரீவத்ஸ கௌஸ்துபங்களென்ன, திருமுடியிலணிந்துள்ள திருவபிஷேகமென்ன, திருநெற்றியணியான சுட்டியென்ன, திருத்தோள்வளை யென்ன, கோலமாமணியாரங்களென்ன, திருக்கைகளுக்கான கடகங்களென்ன, திருக்கழுத்துக்கணியான கண்டஸரமென்ன, வனமாலையென்ன, திருவடிகளுக்கணியான பாடகமென்ன, திருவுதரபந்தனமென்ன ஆகிய இத்திருவாபரணங்களோடே விளங்கா நின்ற தேவரீரைக் கண்ணிமைத்தலின்றியே ஸேவிக்கப்பெறுவேனாகவேணும். ... (74)

ऐन्दीवरी क्वचिदपि क्वचनारविन्दी चान्द्रातपी क्वचन च क्वचनाथ हैमी ।
कान्तिस्तवोढपरभागपरस्परश्रीः पार्येत पारणयितुं किमु चक्षुषोर्मे ॥७५॥

***ஐந்திவரீ க்வசிதபி க்வசநாரவிந்தீ***
***சாந்த்ராதபீ க்வசந ச க்வசநாத ஹைமீ,***
***காந்திஸ் தவோட பரபாக பரஸ்பரஸ்ரீ:***
***பார்யேத பாரணயிதும் கிமு சக்ஷுஷோர் மே.*** 75

க்வசிதபி ஐந்திவரீ, க்வசந ஆரவிந்தீ, க்வசந ச சாந்த்ராதபீ, அத க்வசந ஹைமீ ஊடபரபாகபரஸ்பரஸ்ரீঃ தவ காந்திঃ மே சக்ஷுஷோঃ பாரணயிதும் பார்யேத கிமு!

(எம்பிரானே!) சிலவிடங்களில் நீலோத்பல ஸமாநகாந்தியும் சிலவிடங்களில் அரவிந்த ஸமாநகாந்தியும் சிலவிடங்களில் நிலாப் போன்ற காந்தியும் சிலவிடங்களில் பொன்போன்றகாந்தியுமாக இப்படி ஒன்றோடொன்று பரபாகமாகப் பொருந்தியுள்ள திருவடிவின் ஒளியானது எனது கண்களுக்குப் பூர்ண த்ருப்தியையுண்டாக்கவற்றோ? (அப்படிப்பட்ட காலம் என்றைக்கோ?,)

* * *—எம்பெருமானுடைய திருமேனியிலே தோன்றும் பரஸ்பரபரபாக சோபைகளை அற்புதமாகப் பேசியருளுகிறார். திவ்யமங்கள விக்ரஹகாந்தியோ இந்தீவர காந்தி பரம்பினாற்போன்றுள்ளது; திருமுகம் திருக்கைத்தலம் திருவடித்தலம் முதலான வற்றிலே தோன்றும் காந்தியோ அரவிந்த காந்தி பரம்பினாற்போன்றுள்ளது; மந்த ஹாஸமுக்தாஹாராதிகளிலே தோன்றும் காந்தி நிலாவொளி பரம்பினாற்போன்றுள்ளது; கௌஸ்துப பீதாம்பராதிகளிலே தோன்றும் காந்தி ஸுவர்ணச்சாயை பரம்பினாற் போன்றுள்ளது. ஆகவிப்படி பரஸ்பர பரபாக சோபையை வஹித்திரா நின்ற தேவரீருடைய விலக்ஷண திவ்யமங்கள விக்ரஹ காந்தியானது அடியேனுடைய கண்களின் பட்டினியைத் தீர்த்துப் பரிபூர்ண பாரணையாகவேணுமென்றாராயிற்று. ... (75)

त्वां सेवितं जलजचक्रगदासिशार्ङ्गैस्तार्क्ष्येण सैन्यपतिनाऽनुचरैस्तथाऽन्यैः ।
देव्या श्रिया सह लसन्तमनन्तभोगे भुञ्जीय साञ्जलिरसङ्कुचिताक्षिपक्ष्मा ॥७६॥

***த்வாம் ஸேவிதம் ஜலஜசக்ரகதாஸிசார்ங்கை:***
***தார்க்ஷ்யேண ஸைந்யபதிநாநுசரைஸ் ததாந்யை:,***
***தேவ்யா ச்ரியா ஸஹ லஸந்தமநந்தபோகே***
***புஞ்ஜீய ஸாஞ்ஜலிரஸங்குசிதாக்ஷிபக்ஷ்மா.*** 76

ஜலஜ சக்ர கதா அஸி சார்ங்கைஃ தார்க்ஷ்யேண ஸைந்யபதிநா ததா அந்யைஃ அநுசரைஃ ஸேவிதம் அநந்த போகே ச்ரியா தேவ்யா ஸஹ லஸந்தம் த்வாம் அஸங்குசித அக்ஷிபக்ஷ்மா ஸாஞ்ஜலிஃ புஞ்ஜீய.

(எம்பிரானே!) சங்கு சக்கரம் கதை வாள் வில் ஆகிய பஞ்சாயுதங்களாலும் பெரிய திருவடியாலும் ஸேநாபதியாழ்வாராலும் மற்றுமுள்ள அநுசரர்களாலும் ஸேவிக்கப்பட்டவனாயும், திருவனந்தாழ்வானது திருமேனியின்மீது ஸ்ரீதேவியோடு கூட விளங்குபவனாயுமுள்ள உன்னைக் கண்ணிமை கொட்டாமல் அஞ்ஜலி ஹஸ்தனாய்க் கொண்டு அநுபவிக்கக் கடவேன்.

* * *—பஞ்சாயுதாழ்வார்கள் திகழவும், பெரிய திருவடி ஸேனைமுதலியாழ்வான் முதலான நித்ய கிங்கரர்கள் புடை சூழவும் பெரிய பிராட்டியாரோடே கூடத் திருவனந்தாழ்வான் மீது விளங்கா நின்ற தேவரீரைக் கண்ணிமைத்தலின்றியே கையுமஞ்ஜலியுமாய் நின்று ஸேவிக்கக் கடவேனென்றாராயிற்று. ... (76)

कैङ्कर्यनित्यनिरतैर्भवदेकभोगैर्नित्यैरनुक्षणनवीनरसार्द्रभावैः ।
नित्याभिवाञ्छितपरस्परनीचभावैर्मद्दैवतैः परिजनैस्तव सङ्गसीय ॥७७॥

***கைங்கர்யநித்யநிரதைர் பவதேகபோகை:***
***நித்யைரநுக்ஷணநவீநரஸார்த்ரபாவை:,***
***நித்யாபிவாஞ்சிதபரஸ்பரநீசபாவை:***
***மத்தைவதை: பரிஜநைஸ் தவ ஸங்கஸீய.*** 77

கைங்கர்ய நித்ய நிரதைஃ பவத் ஏக போகைஃ நித்யைஃ அநுக்ஷண நவீந ரஸ ஆர்த்ர பாவைஃ நித்ய அபிவாஞ்சித பரஸ்பர நீசபாவைஃ மத்தைவதைஃ தவ பரிஜநைஃ (ஸஹ) ஸங்கஸீய.

ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி ஆட்செய்பவர்களாயும் அநந்ய போக்யத்வஸ்வரூபத்தில் தலை நின்றவர்களாயும் நித்யஸித்தர்களாயும் க்ஷணந்தோறும் புதிது புதிதாக விளைகின்ற பகவதநுபவ ருசியினால் உருகின நெஞ்சையுடையராயும் பாகவதர்களுக்குள் பரஸ்பரம் சேஷத்வத்தையே ஸதா விரும்புமவர்களாயும் அடியேனுக்குத் தெய்வமாகக் கொண்டாடத் தக்கவர்களாயுமிருக்கிற தேவரீருடைய அடியார்களோடுடனே கூடிவாழக்கடவேன்.

* * *—நம்மாழ்வார் *அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்று கொலோ* என்று, பாரித்ததும் அடியார்களின் திரளிலே கலந்து பரிமாறுவதற்கே. பிறகு பேறு பெற்றதாகச் சொல்லுமிடத்தும் *வந்தவரெதிர் கொள்ள மாமணி மண்டபத்து அந்தமில்பேரின்பத்து அடியரோடிருந்தமை* என்று அடியார்கள் திரளில் கலந்து பரிமாறப் பெற்றபடியையே அருளிச்செய்து தலைக்கட்டினார். ஆகவே திருநாட்டில் பெரும்பேறு அதுவேயென்று ஆழ்வாருடைய ஸித்தாந்தமாகையாலே அதனையடியொற்றியே இந்த ச்லோகமருளிச் செய்தாராயிற்று, கீழ்ச்லோகத்தில் ''த்வாம் புஞ்ஜீய'' என்று பகவதநுபவத்தில் பாரிப்புக் காட்டினாராகிலும் அதைப் பூர்வபக்ஷமாக்கி இதனையே ஸித்தாந்தமாக வருளிச் செய்ததாய்க் கொள்ளக்கடவது. தனியேயிருந்து பகவதநுபவம் செய்வதிற் காட்டிலும் அடியார் திரளிலே அந்வயித்திருந்து அது செய்கை மிகவும் ரஸித்திருக்குமாகையாலே இங்ஙனே யருளிச் செய்தபடி. பாகவத கோஷ்டியில் கலந்து பரிமாறுவது பகவதநுபவத்தின் ஸாரஸ்யம் விஞ்சுகைக்கேயிறே.

*நித்யாபிவாஞ்சித பரஸ்பரநீசபாவை:* என்றவிடத்து ''கேசவா புருடோத்தமா கிளர்சோதியாய் குறளாவென்று பேசுவாரடியார்கள் எந்தம்மை விற்கவும் பெறுவார்களே'' என்ற பெரியாழ்வார் திருமொழியும், ''ஹரிபக்த தாஸ்ய ரஸிகா: பரஸ்பரம் க்ரய விக்ரயார்ஹதயா ஸமிந்ததே'' என்ற யதிராஜஸப்ததி ஸூக்தியும் அநுஸந்தேயம். [மத்தைவதை:] *கட்டன்மல்லைத் தலசயனத்துறைவாரைக் கொண்டாடும் நெஞ்சுடையார் அவரெங்கள் குல தெய்வமே* என்ற பெரிய திருமொழி காண்க. ... (77)

(மேல் மூன்று ச்லோகங்கள் குளகம்.)

यत्किञ्चिदुज्ज्वलमिदं यदुपाख्ययाऽऽहुस्सौन्दर्यमृद्धिरिति यन्महिमांशलेशः ।
नाम्नैव यां श्रियमुशन्ति यदीयधाम त्वामामनन्ति यतमा यतमानसिद्धिः ॥७८॥

யத்கிஞ்சி துஜ்ஜ்வலமிதம் யதுபாக்ய்யாஹு:
ஸௌந்தர்யம் ருத்திரிதி யந்மஹிமாம்சலேச:,
நாம்நைவ யாம் ச்ரியமுசந்தி யதீயதாம
த்வாமாமநந்தி யதமா யதமாந ஸித்தி:. 78

या वै त्वयाऽप्युदधिमन्थनयत्नलभ्या याऽन्तर्हितेति जगदुन्मथनोद्यतोऽभूः ।
या च प्रतिक्षणमपूर्वरसानुबन्धैर्भावैर्भवन्तमभिनन्दयते सदैव ॥७९॥

யா வை த்வயாப்யுததிமந்தநயத்நலப்யா
யாந்தர்ஹிதேதி ஜகதுந்மதநோத்யதோபூ:,
யா ச ப்ரதிக்ஷணமபூர்வரஸாநுபந்தை:
பாவைர் பவந்தமபிநந்தயதே ஸதைவ. 79

रूपश्रिया गुणगणैर्विभवेन धाम्ना भावैरुदारमधुरैश्चतुरैश्चरित्रैः ।
नित्यं तवैव सदृशीं श्रियमीश्वरीं तां त्वां चाश्रितः परिचरेयमुदीर्णभावः ॥८०॥

ரூபச்ரியா குணகணைர் விபவேந தாம்நா
பாவைருதாரமதுரைச் சதுரைச் சரித்ரை:,
நித்யம் தவைவ ஸத்ருசீம் ச்ரியமீச்வரீம் தாம்
த்வாஞ்சாஞ்சித: பரிசரேய முதீர்ணபாவ:. 80

உஜ்ஜ்வலம் யத்கிஞ்சித் இதம் யத்
உபாக்யயா ஆஹுஃ, ஸௌந்தர்யம்
ருத்திஃ இதி யந்மஹிம அம்ச லேசஃ,
யாம் நாம்நா ஏவ ச்ரியம் உசந்தி,
த்வாம் யதீய தாம ஆமநந்தி. யதமா யத
மாக ஸித்திஃ.

மிகுந்த வொளியுடையதாகவுள்ளது யாதொன்றுண்டோ அப்படிப்பட்டதை யாவளொரு பிராட்டியின் திருநாமத்தினுல் சொல்லுகின்றூர்களோ. (உலகில்) ஸௌந்தர்ய மென்றும் ஸம்பத்தென்றும் சொல்லப்படுமவை யாவளொரு பிராட்டியின் மஹிமையினது லவலேசமோ. யாவளொரு பிராட்டியைத் திருநாமத்தினுலேயே ஸ்ரீயென்று சொல்லுகிறூர்களோ, (எம்பெருமானுகிய) தேவரீரை யாவளொரு பிராட்டியினுடையதான ஸ்தானமாகச் சொல்லுகிறூர்களோ, யாவளொரு பிராட்டியானவள் யோகிகளின் ஸித்தியே வடிவெடுத்தவளோ, .... (78)

யா வை த்வயா அபி உததி மந்தந யத்ந
லப்யா, யா அந்தர்ஹிதா இதி ஜகத்
உந்மதந உத்யதஃ அபூஃ, யா ப்ரதிக்ஷ
ணம் அபூர்வரஸ அநுபந்தைஃ பாவைஃ
பவந்தம் ஸதா ஏவ அபிநந்தயதே.

யாவளொரு பிராட்டி தேவரீராலும் கடல்கடைகையாகிற முயற்சியினுல் பெறததக்கவளாயிருக்கின்ருளோ, யாவளொரு (ஸீதா) பிராட்டி (பஞ்சவடியில் ராவணுபஹார வியாஜத்தினுல்) மறைந்தாளென்று ஜகத்தையெல்லாம் உபஸம்ஹாரம் செய்வதில் தேவரீர் உத்யோகித்ததோ, யாவளொரு பிராட்டி க்ஷணந்தோறும் அபூர்வமான [புதிதுபுதிதாகத் தோன்றுகின்ற] சுவைச் செறிவையுடைய பாவபந்தங்களினுல் தேவரீரை இடை விடின்றி உகப்பிக்கின்ருளோ, .... (79)

ரூப ச்ரியா குண கணைஃ விபவோந
தாம்நா உதார மதுரைஃ பாவைஃ சதுரைஃ
சசித்ரைஃ நித்யம் தவ ஏவ ஸத்ருசீம்
தாம் ஈச்வரீம் ச்ரியம் த்வாம் ச அஞ்சிதஃ
உதீர்ண பாவஃ பரிசரேயம்.

வடிவழகினுலும் திருக்குணங்களினுலும் அவதாரத்தினுலும் தேஜஸ்ஸினுலும் (அல்லது) இருப்பிடத்தினுலும் மிகப் பெரியவையாய் மதுரங்களான சித்தவ்ருத்திகளினுலும் சதிரான நடத்தைகளினுலும் எப்போதும் தேவரீருக்கே ஏற்றிருப்பவளான அந்தப்பெரிய பிராட்டியையும் தேவரீரையும் அடியேன் அடைந்தவனுகி கைங்கர்யமநோரதம் விஞ்சப் பெற்றவனுய் அடிமைசெய்யக் கடவேன். ... (80)

இம்மூன்று ச்லோகங்களுஞ் சேர்ந்து ஏகாந்வயமாகையாலே குளகமெனப்படும்.

* * *—இம்மூன்று ச்லோகங்களினுலும் *கோலத்திருமாமகளோடு உன்னைக் கூடி அடிமை செய்யக் கடவேனென்று இருவருமான சேர்த்தியிலே தமக்குள்ள மநோரதத்தை ஆவிஷ்கரித்தருளுகிறூர். இம்மூன்று ச்லோகங்களும் பெரியபிராட்டியாருடைய பெருமையைப் பரக்கப் பேசுவன. ஸ்ரீஸ்தவத்தில் *ஐச்வர்யம் யதசேஷபும்ஸி யதிதம் ஸௌந்தர்யலாவண்யயோ ரூபம் யச் சஹி மங்களம் கிமபி யல்லோகே ஸதித்யுச்யதே. தத்ஸர்வம் த்வததீநமேவ* என்ற ச்லோகத்தினுல் மிகவிரிவாக விளக்கப்பட்ட விஷயத்தை இங்கு "யத்கிஞ்சிதுஜ்ஜ்வலமிதம் யதுபாக்யயாஹுஃ ஸௌந்தர்யம்ருத்திரிதி யந்மஹிமாம்ச லேசஃ" என்ற இரண்டு பாதங்களினுல் சுருக்கி அருளிச் செய்தபடி. ஆளவந்தார் சதுச்லோகியில் *ஸ்ரீரித்யேவ ச நாம தே பகவதி ப்ரூமஃ கதம் த்வாம் வயம்* என்றருளிச்செய்ததையடியொற்றி *நாம்நைவ யாம் ச்ரிய முசந்தி* என்றருளிச்செய்தபடி. [யதீயதாம த்வாம் ஆமநந்தி] *அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா !* என்று ஆழ்வாரும், *சகர்த்த யஸ்யா பவநம் புஜாந்தரம்* என்று ஆளவந்தாரும் அருளிச்செய்தது காண்க. [யதமா யதமாகஸித்திஃ] யதமா என்றது (யா)

என்றபடி. மேலே, யதமாநாநாம் ஸித்தி:— யதமாந ஸித்தி: என்று ஷஷ்டீதத்புருஷன். பகவத்கீதையில் (7–3.) *மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கச்சித் யததி ஸித்தயே, யததாமபி கௌந்தேய கச்சிந்மாம் வேத்தி தத்வத:* என்னும் ச்லோகத்தில் 'யததாம்' என்று சொல்லப்பட்ட அதிகாரிகளே இங்கு 'யதமாந' சப்தத்திஞல் சொல்லப்பட்டவர்கள். ஸித்தி பெற முயல்பவர்களைச் சொல்லுகிறது யதமாநா: என்று. அவர்களுடைய ஸித்தி லக்ஷ்மீ கடாக்ஷத்திஞலல்லது வேறென்றிஞலுமுண்டாகாதாதலால் இவளையே யதமாந ஸித்தி யென்கிறது. ... ... ... ... (78)

79. [யா வை த்வயாபி உததிமந்தநயத்நலப்யா] ஸ்தோத்ரரத்நத்தில் "யதர்த்தம் அம்போதிரமந்தி" என்றருளிச்செய்ததையடியொற்றி இது அருளிச்செய்கிறபடி. ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் "உந்மூல்யாஹர மந்தராத்ரிம்" என்கிற ச்லோகத்திஞல் கடல்கடைந்த வரலாற்றை விரிவாகச் சொல்லி "பலேக்ரஹிர் ஹி கமலாலாபேந ஸர்வ: ச்ரம:" என்று தலைக்கட்டிற்று. "அண்ணல் செய்து அலைகடல் கடைந்து அதனுள் கண்ணுதல் நஞ்சுண்ணக் கண்டவனே! விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே!" என்றார் திருமங்கையாழ்வாரும். [யா அந்தர்ஹிதேதி ஜகதுந்மதநோத்யதோபூ:] பிராட்டியின் பிரிவிலே பெருமாள் "ஜகத் ஸசைலம் பரிவர்த்தயாம்யஹம்" என்றதாக வான்மீகி முனிவர் கூறியிருக்கையாலே இங்ஙனே அருளிச்செய்தபடி. "ராவணாபஹ்ருதேதி" என்னுமல் அந்தர்ஹிதேதி என்கையாலே பிராட்டி இலங்கை புகுந்தது ராவணாபஹாரத்தாலேயன்று, ஸ்வேச்சையாலே யென்னுமிடம் ஸூசிதமாகிறது. "இதிஹாஸ ச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றஞ் சொல்லுகிறது" என்ற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியை விவரித்தருளுமிடத்து மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிவை காண்மின் :— "பிராட்டி யென்னாதே சிறையிருந்தவளென்றருளிச் செய்தது அவளுடைய தயாதிசயத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக, தேவ தேவ திவ்ய மஹிஷியான தன் பெருமையையும் சிறையிருப்பின் தண்மையையும் பாராதே தேவஸ்த்ரீகளின் சிறையை விடுவிக்கைக்காகத் தான் சிறையிருந்தது தயாபரவசையாயிறே. ப்ரஜை கிணற்றிலே விழுந்தால் ஒக்கக் குதித்தெடுக்கும் மாதாவைப்போலே இச்சேதநர் விழுந்த ஸம்ஸாரத்திலே தானுமொக்க வந்து பிறந்து இவர்கள் பட்டதைத் தானும் பட்டு ரக்ஷிக்கையாலே நிருபாதிக மாத்ருத்வஸம்பந்தத்தால வந்த நிரதிசய வாத்ஸல்யத்துக்கும் ப்ரகாசகமிறேயிது. இந்த குணாதிக்யத்தை வெளியிடுகைக்காகவிறே பரமாசார்யரான நம்மாழ்வார், *தனிச்சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள்* என்றருளிச் செய்தது. அவருடைய திவ்ய ஸூக்தியிறே இவரிப்படி யருளிச்செய்கைக்கு மூலம். சிறையிருப்பு தண்மையாவது கர்ம நிபந்தநமாகிலிறே. ஆச்ரிதரான தேவர்களுடைய ஸ்த்ரீகள் சிறையை விடுவிக்கைக்காகத் தன்னநுக்ரஹத்தாலே தானே வலியச் செய்ததாகையாலே ஏற்றத்துக் குடலாமித்தனையிறே." என்று.

[யா ச ப்ரதிக்ஷணமித்யாதி] நிரந்தரம் அநுபவியா நின்றாலும் நித்யாபூர்வமாகத் தோற்றுகின்ற சுவையின்பம் தொடர்ந்து செல்லப்பெற்ற ஸாத்விகாதிபாவங்களிஞல் தேவரீரை எப்போதும் உகப்பிக்கின்றாள் யாவளொருத்தியோ. .... (79)

[80. ரூபச்ரியேத்யாதி.] ஸௌந்தர்ய லாவண்ய ஸௌகுமார்யாதிகளாலும், தயா வாத்ஸல்யாதி குணஸமூஹங்களாலும் ஒக்க அவதரிக்கையிஞலும் ஸ்தானப் பெருமையிஞலும் கம்பீரமதுரங்களான சித்த வ்ருத்திகளாலும ஆச்ரித ஸம்ரக்ஷண ஸமர்த்தங்களான செய்கைகளிஞலும், *துல்ய சீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜந லக்ஷணாம், ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா.* இத்யாதிகளில் பேசப்பட்ட ஆநுரூப்யத்தையுடையளாய், *ஈச்வரீம் ஸர்வபூதாநாம்* என்னப்பட்ட ஐச்வர்யத்தையுமுடையளான பிராட்டியும் தேவரீருமான சேர்த்தியிலே அடியேன் அணுகி நின்று, *வழுவிலாவடிமை செய்ய வேண்டுநாம்* என்கிற கைங்கர்ய மநோரதம் விஞ்சி நின்று அத்தாணிச் சேவகம் செய்யக்கடவேன் என்றாராயிற்று. ... ... .... (80)

या बिभ्रती स्थिरचरात्मकमेव विश्वं विश्वम्भरा परमया क्षमया क्षमा च ।
तां मातरं च पितरं च भवन्तमस्य व्युच्छन्तु रात्रय इमा वरिवस्यतो मे ॥८१॥

***யா பிப்ரதீ ஸ்திரசராத்மகமேவ விச்வம்***
***விச்வம்பரா பரமயா க்ஷமயா க்ஷமா ச,***
***தாம் மாதரஞ்ச பிதரஞ்ச பவந்தமஸ்ய***
***வ்யுச்சந்து ராத்ரய இமா வரிவஸ்யதோ மே.*** **81**

யா ஸ்திரசராத்மகம் விச்வம் பிப்ரதீ ஏவ விச்வம்பரா, பரமயா க்ஷமயா க்ஷமா ச; தாம் மாதரஞ்ச பிதரம் பவந்தஞ்ச வரிவஸ்யதஃ அஸ்ய மே இமாஃ ராத்ரயஃ வ்யுச்சந்து.

*(எம்பிரானே!) யாவளொரு பூமிப்பிராட்டியானவள் ஸ்தாவரஜங்கமாத்மகமான ஸகல ஜகத்தையும் வஹிப்பவளாயிருந்து கொண்டே 'விச்வம்பரா' என்று பெயர் பெறுகின்றாளோ, சிறந்த பொறுமையினால் 'க்ஷமா' என்று பெயர்பெறுகின்றாளோ, அந்தத் தாயையும் தந்தையாகிய உன்னையும் சேர்த்துக் கைங்கரியம் பண்ண விரும்பியிருக்குமடியேனுக்கு இந்த ஸம்ஸாரகாளராத்ரிகள் விடிந்தனவாகட்டும்.*

** * *—பெரிய பிராட்டியாருடைய சேர்த்தியிலே அடிமைசெய்யக் குதூஹலித்திருக்கும்படியைக் கீழ்ச்லோகத்திலேயருளிச்செய்தாராய் நின்றார்; பூமிப்பிராட்டியாருடைய சேர்த்தியிலே அடிமை செய்யக் காதலிக்கிறபடியை யருளிச்செய்கிறாரிதில். பூமிப்பிராட்டியாருக்கு விச்வம்பரா என்றும் க்ஷமா என்றும் இரண்டு திருநாமங்களுண்டே; அவை கேவல ரூடியாலன்று; யோகார்த்த பௌஷ்கல்யமுடையவையேயென்று பூர்வார்த்தத்தினால் மூதலிக்கிறார். ஸ்தாவரஜங்கமாத்மகமான விச்வத்தையும் வஹிக்கையினாலே விச்வம்பரையானாள்; எல்லைகடந்த பொறுமைக் குணத்தின் யோகத்தாலே க்ஷமையானாள். அதற்கு மேலே ஸர்வ ஸாதாரண நிருபாதிக மாத்ருத்வமுமுண்டாயிருந்தது. அப்படிப்பட்ட பூமிப்பிராட்டியாரும் *தஞ்சமாகிய தந்தையான தேவரீருமான சேர்த்தியிலே அடியேன் அடிமை செய்து கொண்டிருக்க, இரவும் பகலும் கலசியிருக்கையன்றிக்கே எப்போதும் விடிந்த பகலாகவே என் காலம் கழிய வேணுமென்கிறார். திருநாட்டிலே திவாராத்ர விபாக மில்லையிறே.*

*• व्युच्छन्तु (வ்யுச்சந்து,)—இது அபூர்வமான க்ரியாபதம்; விசேஷித்து வேதத்தில் வழங்குமது. விடிந்ததாகட்டு மென்று பொருள். ராத்ரயஃ என்ற கர்த்ருபதத்திற்குச் சேர இந்த க்ரியை ப்ரயோகிக்கப்பட்டது; இரவின்றிக்கே பகலேயாயிருக்கக்கடவதென்றவாறு. வரிவஸ்யதஃ என்ற ஷஷ்ட்யந்தபதம் வர்த்தமானார்த்த சத்ர்ப்ரத்யயாந்தம்; *வர்த்தமானஸாமீப்யே வர்த்தமானவத் வா* என்றது காண்க. ... (81)*

भावैरुदारमधुरैर्विविधैर्विलासैर्भ्रूविभ्रमस्मितकटाक्षनिरीक्षणैश्च ।
या त्वन्मयी त्वमपि यन्मय एव सा मां नीला नितान्तमुररीकुरुतामुदारा ॥८२॥

***பாவைருதாரமதுரைர் விவிதைர் விலாஸை:***
***ப்ருவிப்ரமஸ்மித கடாக்ஷ நிரீக்ஷணைச் ச,***
***யா த்வந்மயீ த்வமபி யந்மய ஏவ ஸா மாம்***
***நீளா நிதாந்தமுரரீகுருதாமுதாரா.*** **82**

உதாரமதுரை: பாவை: விவிதை: விலாஸை: ப்ருவிப்ரம ஸ்மித கடாக்ஷ நிரீக்ஷணைச் ச யா த்வன்மயீ, த்வமபி யன்மய ஏவ, ஸா உதாரா நீளா மாம் நிதாந்தம் உரரீகுருதாம்.

(எம்பிரானே!) கம்பீர மனோஹரங்களான சித்த வ்ருத்திகளாலும் பலவகைப்பட்ட ச்ருங்கார சேஷ்டிதங்களாலும், புருவவிலாஸம் புன்முறுவல் கடைக்கணிப்பு ஆகிய இவைகளாலும் யாவளொரு நீளாதேவியானவள் உன்னில் வேறுபடாதவளாயிருக்கின்றாளோ, நீயும் யாவளொரு நீளாதேவியிற்காட்டில் வேறுபடாதிருக்கின்றாயோ, உதாரையான அந்த நீளாதேவியானவள் அடியேனைப் பரிபூர்ணமாக அங்கீகரித்தருளவேணும்.

* * *—கீழிரண்டு ச்லோகங்களில் ஸ்ரீ பூதேவிகளின் சேர்த்தியை அநுஸந்தித்தார். இதில் நீளாதேவியை யநுஸந்தித்து அவளுடைய அங்கீகாரத்தை ப்ரார்த்திக்கிறார். கம்பீரமனோஹரங்களான சித்த வ்ருத்திகளாலும், அந்த சித்த வ்ருத்திகளுக்கு ஸூசகங்களான ச்ருங்கார சேஷ்டிதங்கள் பலவற்றாலும், புருவநெறிப்பு புன்முறுவல் கடைக்கண்ணோக்கம் ஆகிய இவற்றாலும் யாவளொரு நீளை தேவரீருடைய தாதாத்மியத்தை யடைவதும் தேவரீர் யாவளொரு நீளையின் தாதாத்ம்யத்தையடைவதுமாயிருக்கின்றதோ, அப்படிப்பட்ட நீளாதேவி அடியேனையாட் கொண்டருளவேணுமென்றாராயிற்று.

"யா த்வன்மயீ" இத்யாதி மூன்றாவது பாதத்திற்குச் சேர "மகன்வீ தத்கதஸ் தஸ்யா நித்யம் ஹ்ருதி ஸமர்ப்பித:" என்ற ஸ்ரீராமாயண ச்லோகமநுஸந்தேயம். பரஸ்பரமுண்டான இனிமையைச் சொன்னபடி. ... .... (82)

भावैरनुक्षणमपूर्वरसानुविद्धैरत्यद्भुतैरभिनवैरभिनन्द्य देवीः ।
भृत्यान् यथोचितपरिच्छदिनो यथार्हं संभावयन्तमभितो भगवन् ! भवेयम् ॥८३॥

**பாவைரநுக்ஷணமபூர்வ ரஸாநுவித்தை:**
**அத்யத்புதைரபிநவைரபிநந்த்ய தேவீ:,**
**ப்ருத்யாந் யதோசித பரிச்சதிநோ யதார்ஹம்**
**ஸம்பாவயந்தமபிதோ பகவந் பவேயம். 83**

பகவந்! அநுக்ஷணம் அபூர்வரஸஅநுவித்தை: அத்யத்புதை: அபிநவை: பாவை: தேவீ: அபிநந்த்ய யதோசித பரிச்சதிந: ப்ருத்யாந் யதார்ஹம் ஸம்பாவயந்தம் பவந்தம் அபித: பவேயம்.

பகவானே! க்ஷணந்தோறும் அபூர்வமாயிருக்கின்ற ச்ருங்கார ரஸவிசேஷத்தோடே கூடி அத்யாச்சர்யங்களாய் புதிது புதிதாயிருக்கின்ற சித்தவ்ருத்திகளாலே பிராட்டிமார்களை உகப்பித்து, தங்களுக்கு உரிய கைங்கர்யோபகரணங்களையுடையவர்களான (நித்யஸூரிகளான) கிங்கரர்களை யதாயோக்யமாக ஸத்கரியா நிற்கிற பரமபதநாதனான வுன்னைச் சூழ்ந்துகொண்டு வர்த்திக்கக்கடவேன்.

* * *—அந்தமில் பேரின்பத் திருவோலக்கத்திலே அன்வயித்து முன்னழகு பின்னழகு பக்கத்தழகு ஆகிய எல்லாவழகுகளையும் அநுபவிக்கச் சுற்றிலும் வலம்வர வேணுமென்கிற விருப்பத்தை வெளியிடுகிறாரிதில். க்ஷணந்தோறுமிட்டு மாறினாற்போலே அப்பொழுதைக்கப்பொழுது நவம்நவமாய்த் தோன்றுகிற ஆச்சரியமான ஸாத்விகாதி பாவங்களாலே, கீழ்ச்சொன்ன பிராட்டிமார்களை யுகப்பித்து, சத்ரசாமர வேத்ராதி கைங்கர்யோபகரணங்களைக் கொண்டிருக்கிற ஸேநாபதியாழ்வான் முதலான நித்ய கிங்கரர்களை அவரவர்களின் அதிகாரங்களுக்குத் தக்கபடி ஸத்கரித்துக்கொண்டிருக்கும் தேவரீரை அங்கிலைமையிலே இப்பரிசுபெற அடியேனுமொருவனுளனென்று காட்டிக்கொண்டு முன்னும் பின்னும் ஸேவித்து நிற்கக்கடவேனென்றாராயிற்று.

" अभिनन्द्य संभावयन्तम् " என்று அன்வயம். ... .... (83)

हा हन्त हन्त ! हतकोऽस्मि खलोऽस्मि धिङ्मां मुह्यन्नहो ! अहमिदं किमुवाच वाचा ।
त्वामङ्ग ! मङ्गलगुणास्पदमस्तहेयम् आः ! स्मर्तुमेव कथमर्हति मादृगंहः ॥८४॥

*ஹா ஹந்த ஹந்த ஹதகோஸ்மி கலோஸ்மி திங் மாம்*
*முஹ்யந்நஹோ அஹமிதம் கிமுவாச வாசா,*
*த்வாமங்க! மங்கள குணாஸ்பதமஸ்த ஹேயம்*
*ஆ: ஸ்மர்த்துமேவ கதமர்ஹதி மாத்ருகம்ஹ:.* 84

ஹா ஹந்த ஹந்த! ஹதக: அஸ்மி கல: அஸ்மி, மாம் திக்; அஹோ முஹ்யந் அஹம் வாசா இதம் கிம் உவாச; அங்க! மங்களகுணஆஸ்பதம் அஸ்த ஹேயம் த்வாம் மாத்ருக் அம்ஹ: ஆ: ஸ்மர்த்துமேவ கதம் அர்ஹதி.

(எம்பிரானே!) ஐயோ ஐயோ! கெட்டேன்! வாழ்வில்லை; நான் அதி துஷ்டன், கெடுவேன் கெடுவேனே; விஷயாந்தரங்களில் வியாமோஹமுடைய நான் (பகவத் விஷயப்ரவணன்போல) வாயினால் என்னசொன்னேனந்தோ!, என்னைப்போன்ற பாப பிண்டம் அகிலஹேயப்ரத்யநீக கல்யாணகதானனை வுன்னை நெஞ்சினால் நினைக்கவே யோக்யதையுடையதன்றே.

* * *—எமபெருமான் திருவோலக்கத்திலே நித்யகைங்கரியம் பண்ணப்பெற வேணுமென்று பாரித்து நின்றார் கீழ்; அப்பரம புருஷனுடைய எல்லையற்ற உயர்நலங்களையும் தம்முடைய எல்லையற்ற தாழ்வுகளையும் நினைத்து *அம்மானாழிப்பிரானவனெவ்விடத்தான்யானார்* என்றாற்போலே திருவுள்ளத்திலேபட்டு, உத்தமோத்தமனான அவனெங்கே! அதமாதமனான நானெங்கே!; தேவர்களுக்கு அர்ஹமான புரோடாசத்தை நாய் விரும்புவதுபோலன்றோ மஹான்களுக்கே உரித்தான பகவத் கைங்கர்யத்தை நாயினேன் விரும்புவது; மதிகெட்டு இப்படியும் விரும்பலாமோ? ஸம்ஸார நாற்றமேயறியாத நித்யஸூரிகள் ஆசைப்படக்கடவதான நித்யகைங்கர்யத்தை நித்ய ஸம்ஸாரியான நான் ஆசைப்படுவதானது பேதைமையன்றோ, ஹாஹா! என்ன ஸாஹஸமான காரியம் செய்யத் துணிந்தோம்! என்று தம்மைத் தாமே வெறுத்துக்கொள்ளுகிறார்.

அந்தோ! பாவியேன் கெட்டேன் கெட்டேன்!!, என்னை மறந்தன்றோ சில பிதற்றினேன்; பாவியேன் என்சொன்னேனானேன்; அகிலஹேயப்ரத்யநீக கல்யாணகதானரான தேவரீரை இந்த பாபபிண்டம் ஸ்மரிக்கவும் தகாதன்றோ என்கிறார்.

मादृगंहः (மாத்ருகம்ஹ:)=என்னைப்போன்ற பாபி என்னவேண்டுமிடத்தில் 'என்னைப்போன்ற பாபம்,' என்று, தம்மைப் பாபமாகவே சொல்லிக்கொண்டது பாப ப்ராசுர்யத்தைப்பற்ற. பாபமே வடிவெடுத்தன்றோ நானிருப்பது என்கிறார்போலும். மூன்றாம்பாதத்தில் அங்க! என்றது ஸம்போதநார்த்தகமான ஒரு அவ்யயம். (84)

अंहः प्रसह्य विनिगृह्य विशोध्य बुद्धिं व्यापूय विश्वमशिवं जनुषाऽनुबद्धम् ।
आधाय सद्गुणगणानपि नाहमर्हः त्वत्पादयोर्यदहमत्र चिरान्निमग्नः ॥८५॥

*அம்ஹ: ப்ரஸஹ்ய விநிக்ருஹ்ய விசோத்ய புத்திம்*
*வ்யாபூய விச்வமசிவம் ஜநுஷாநுபத்தம்,*
*ஆதாய ஸத்குண கணாநபி நாஹமர்ஹ:*
*த்வத்பாதயோ:, யதஹமத்ர சிராந்நிமக்ந:.* 85

அம்ஹ: ப்ரஸஹ்ய விநிக்ருஹ்ய புத்திம் விசோத்ய ஜநுஷா அநுபத்தம் விச்வம் அசிவம் வ்யாதூய ஸத்குணகணாந் ஆதாயாபி த்வத்பாதயோ: அஹம் நார்ஹ:; யத் அஹம் அத்ர சிராத் நிமக்ந:.

(எம்பிரானே!) எனது பாபத்தை பலாத்காரமாகப் போக்கிக்கொண்டும் புத்தியை சுத்தமாக்கிக்கொண்டும் ஜந்மாநுபந்தியான தீதுகளையெல்லாம் உதறித்தள்ளியும் ஸத்குண ஸமூஹங்களையுண்டாக்கியுங்கூட நான் உன் திருவடிகளுக்கு யோக்யனாக மாட்டேனே; ஏனென்றால், இப்பிறவிக்கடலுள் நான் நெடுங்காலமாக மூழ்கியிருப்பவனன்றோ.

* * *—கீழ்ச்லோகத்தில், தம்முடைய பாபப்ராசுர்யத்தை நினைத்து அயோக்யதாநுஸந்தானம் பண்ணி நின்ற ஆழ்வானை நோக்கி எம்பெருமான், "வாரீர்! பாபப்ராசுர்யத்தைப்பற்றி நீர் அஞ்சவேண்டுவதுண்டோ? அதைப்போக்குவது நமக்கு அரிதோ? மிகவுமெளிதன்றோ; ஆகவே நீர் அயோக்யதாநுஸந்தானம் பண்ண ப்ராப்தியில்லை காணும்" என்று பணிப்பதாகக் கொண்டு இஃது அருளிச் செய்கிறார்; *சுற்றும் ஒளி வட்டஞ்சூழ்ந்து சோதிபரந்தெங்கும் எத்தனை செய்யிலும் என்மகன் முகம் நேரொவ்வாய்* என்று யசோதைப்பிராட்டி சந்திரனை நோக்கிச் சொன்னது போலே, எம்பெருமானே! தேவரீர் என்னைக் கல்யாண தமனாக்க எவ்வளவு முயன்று பார்த்தாலும் அநாதிகாலமாக *வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தவனான என்னை அடிமைக்கு உரியவனாக்கிக்கொள்ள முடியாது என்கிறார். இத்தால், எம்பெருமான் திருவடிகட்குத் தாம அடிமைப்படாமலே யொழியவேணுமென்கிறதன்று; இப்படிப்பட்ட தம்மையும் அடிமையிலே அந்வயிப்பித்துக் கொள்ளவே போகிறானென்று அத்தலையில் குணோத்கர்ஷம் சொல்லுகிறதத்தனை. அதுதான் அடுத்த ச்லோகத்திலேயே விளங்கும்.

இதில் இரண்டாம் பாதத்தில் வ்யாபூய, வ்யாதூய என்பன பாடபேதங்கள். (85)

जानेऽथ वा किमहमङ्ग! यदेव सङ्गादङ्गीकरोषि न हि मङ्गलमन्यदस्मात् ।
तेन त्वमेनमुररीकुरुषे जनं चेन्नैवामुतो भवति युक्ततरो हि कश्चित् ॥८६॥

ஜாநேதவா கிமஹமங்க! யதேவ ஸங்காத்
அங்கீகரோஷி ந ஹி மங்களமந்யதஸ்மாத்,
தேந த்வமேநமுரரீகுருஷே ஜநஞ்சேத்
நைவாமுதோ பவதி யுக்ததரோ ஹி கச்சித். 86

அங்க! அதவா அஹம் கிம் ஜாநே; யதேவ ஸங்காத் அங்கீகரோஷி அஸ்மாத் அந்யத் மங்களம் நஹி; தேந த்வம் ஏநம் ஜநம் உரரீகுருஷேசேத், அமுத: கச்சித் யுக்ததர: நைவ ஹி.

எம்பிரானே! என்னறிவனேழையேன்!; நீ ஸஹஜ ஸௌஹார்த்தத்தினால் (அடியேனை) அங்கீகரித்தருளுமளவில அப்படிப்பட்ட அங்கீகாரத்திற் காட்டிலுமவேறு நன்மை இல்லையன்றோ; ஆகவே அந்த ஸௌஹார்த்தத்தினால் இவ்வடியேனை அங்கீகரித்தருள்வாயாகில எனனைககாட்டிலும் வேறொரு யோக்யன் தேறமாட்டானன்றோ.

* * *—எம்பெருமானுடைய இயற்கையின்னருளை நினைத்து ஸமாஹிதராகிறார். அடியேன்திறத்துள்ள தீமைத்திரள்களைக் காணும்படித்து தேவரீருடைய திருவடிகளுக்கு அநர்ஹனேயென்று அறுதியிட நேர்ந்தாலும், *தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேததகர்ஹிதம்* என்றும், *விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவணஸ்ஸ்வயம்* என்றும் அருளிச்செய்து ஆட்கொள்ளவல்ல தேவரீருக்கு ஆகாததுண்டோ? என்பக்கலில் நானாகஆர்ஜித்த நன்மையொன்றுமில்லையென்றேனத்தனை போக்கி அத்தலையாலே வரும் நன்மையை இல்லை செய்ய என்னாலாகுமோ? *யமேவைஷ வ்ருணுதே தேந

லப்ய:* என்கிறபடியே தேவரீராக விஷயீகரித்தருளுமளவில், அயோக்யனென்று அகலா தொழிகையே யன்றிக்கே, என்னில் மேம்பட்ட யோக்யனில்லையென்று மார்பு தட்டவும் ப்ராப்தமாகுமிறே யென்கிறார்.

"அவன் இவனைப்பெற நினைக்கும் போது பாதகமும் விலக்கன்று" (143) என்ற ஸ்ரீவசநபூஷண திவ்யஸூக்தி இங்கே அநுஸந்தேயம்; இவ்விடத்தில் மணவாள மாமுனிகள் வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின்;— "ஸ்வாமியாய் ஸ்வதந்த்ரனானவவன் ஸ்வமாய்ப் பரதந்த்ரனாயிருக்கிறவிவனை ஸ்வேச்சையாலே பெறநினைக்குமளவில், பாபங்களில் ப்ரதானமாக எண்ணப்படும் பாதகமும் ப்ரதிபந்தகமாக மாட்டாதென்கை. இத்தால் பரகதஸ்வீகாரோபாயத்வம் காட்டப்பட்டது." ... .... (86).

यन्नाभवाम भवदीयकटाक्षलक्ष्यं संसारगर्तपरिवर्तमतोऽगमाम ।
आगांसि ये खलु सहस्रमजस्रमेवं जन्मस्वतन्महि कथं त इमेऽनुकम्प्याः ॥८७॥

யந்நாபவாம பவதீயகடாக்ஷலக்ஷ்யம்
ஸம்ஸாரகர்த்த பரிவர்த்தம் அதோऽகமாம,
ஆகாம்ஸி யே கலு ஸஹஸ்ரமஜஸ்ரமேவம்
ஜந்மஸ்வதந்மஹி கதம் த இமேநுகம்ப்யா:. 87

பவதீய கடாக்ஷ லக்ஷ்யம் யத் நாபவாம, அத: ஸம்ஸார கர்த்த பரிவர்த்தம் அகமாம; யே கலு (வயம்) அஜஸ்ரம் ஜந்மஸு ஏவம் ஸஹஸ்ரம் ஆகாம்ஸி அதந்மஹி தே இமே (வயம்) கதம் அநுகம்ப்யா:?

(எம்பிரானே!) நீ செய்தருளும் ஜாயமாந கால கடாக்ஷத்திற்கு அடியேன் இலக்காகாதொழிந்தமையாலே ஸம்ஸாரப்படுகுழியிலே விழநேர்ந்தது; அதற்குமேலும் ஜன்மங்கள்தோறும் இடைவீடின்றி அளவற்ற பாபங்களையும் செய்துபோந்திருக்க, உன்னுடைய அருளுக்கு எங்ஙனே இலக்காவேன்?

* * *—கீழ்ச்லோகத்தில் ஒருவாறு ஸமாஹிதரானவர் மீண்டும் தடுமாற்றங் கொள்ளுகிறாரிதில். இடையறாது செய்த பாவங்கள் கூடுபூரித்துக்கிடக்குமடியேன் பக்கலில அப்படிப்பட்ட நிர்ஹேதுக விஷயீகாரம் எங்ஙனே விளையும்படியென்று அதிசங்கிக்கிறார். அப்படிப்பட்ட திருவருளுக்கு அடியேன் பாத்திரமாகக் கூடியவனாகில் * ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:. * என்னும்படியான ஜாயமாந கால கடாக்ஷத்தையே பெற்றிருப்பேனே; அது பெறுமையினாலன்றோ ஸம்ஸாரப்படுகுழியிலே வீழ்ந்து உழலாநின்றது; இப்படி மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து நிச்சலும் பாவங்களையே செய்து போந்தவடியேன் (கீழ்ச்லோகத்திலே ப்ரஸ்துதமான) அருளுக்கு எங்ஙனமிலக்காவேன்! என்கிறார். ... ... ... (87).

सत्कर्म नैव किल किञ्चन सञ्चिनोमि विद्याऽप्यवद्यरहिता न च विद्यते मे ।
किञ्च त्वदञ्चितपदाम्बुजभक्तिहीनः पात्रं भवामि भगवन् ! भवतो दयायाः ॥८८॥

ஸத்கர்ம நைவ கில கிஞ்சந ஸஞ்சிநோமி
வித்யாப்யவத்யரஹிதா நச வித்யதே மே,
கிஞ்ச த்வதஞ்சித பதாம்புஜபக்திஹீந:
பாத்ரம் பவாமி பகவந் பவதோ தயாயா:. 88

**ஹே பகவந்! ஸத்கர்ம கிஞ்சந நைவ ஸஞ்சிநோமி; அவத்யரஹிதா வித்யாபிச மே ந வித்யதே; கிஞ்ச த்வத் அஞ்சித பதாம்புஜ பக்திஹீந:, பவத: தயாயா: பாத்ரம் பவாமி.**

பகவானே! ஸத்கருமத்தைச் சிறிதும் செய்கின்றிலேன்; நிரவத்யமான வித்யையும் எனக்கில்லை; உனது சிறந்த பாதாரவிந்தத்தில் பக்தியுமில்லாதவனாயிருக்கிறேன், ஆகவே உன்னருளுக்கே பாத்ரமாகின்றேன்.

* * *—கீழ்ச்லோகத்தில் ''கதம் த இமே நுகம்ப்யா:'' என்றவர் ஸர்வாத்மநா பகவத் க்ருபையில் நைராச்யங் கொள்ளமுடியுமோ? ஸார்வபௌமனுடைய ஔதார்யம் ஜந்மதரித்ரனையே இலக்காகக் கொள்ளுமாபோலே எம்பெருமானுடைய க்ருபையும் அகிஞ்சநர்களையே புகலாகக்கொண்டிருக்குமதாகையாலே அதுதன்னை யறிந்தவிவர் தம்முடைய ஆகிஞ்சந்யத்தை முன்னிட்டுத் திருவருளைப் ப்ரார்த்திக்கலாமென்று துணிந்து அதுதன்னிலே யிழிகிறார். *இடகிலேனொன்றட்டகில்லேன் ஐம்புலன் வெல்லகில்லேன், கடவனாகிக் காலந்தோறும் பூப்பறித்தேத்தகில்லேன்* என்றும், *கோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்* என்றும், *குளித்து மூன்றனலையோம்புங் குறிகொளந்தணமை தன்னை ஒளித்திட்டேனென் கணில்லை நின்கணும் பத்தனல்லேன்* என்றும் அருளிச்செய்த கணக்கிலே, கர்மஜ்ஞாந பக்திகளிலே தமக்கு அந்வயலேசமுமில்லாமையை மூன்று பாதங்களாலே வெளியிட்டு, இப்படிப்பட்ட அகிஞ்சநர்களையே தேடித்திரியுமதான தேவரீருடைய க்ருபைக்கு அடியேனே இலக்காகிறேனென்று முடிக்கிறார்.

மூன்றாம் பாதத்தில் ''த்வதஞ்சிதபதாம்புஜ'' என்றவிடத்து த்வத்பதத்திற்குப் பதாம்புஜத்திலே அந்வயம். அது எப்படிப்பட்டதென்றால், **அஞ்சிதம்**—ஸர்வலோக பூஜிதமென்றபடி. ... ... (88)

किं भूयसा प्रलपितेन यदेव किञ्चित्पापाह्वमल्पमुरु वा तदशेषमेषः ।
जानन्वा शतसहस्रपरार्धकृत्वो योऽकार्षमेनमगतिं कृपया क्षमस्व ॥८९॥

**கிம் பூயஸா ப்ரலபிதேந யதேவ கிஞ்சித்**
**பாபாஹ்வமல்பமுரு வா ததசேஷமேஷ:,**
**ஜாநந் ந வா சதஸஹஸ்ரபரார்த்தக்ருத்வ:**
**யோகார்ஷ மேநமகதிம் க்ருபயா க்ஷமஸ்வ.** 89

**பூயஸா ப்ரலபிதேந கிம்? பாபாஹ்வம் அல்பம் வா உரு வா யதேவ கிஞ்சித், தத் அசேஷம் ஏஷ: ய: ஜாநந்வா நஜாநந்வா சதஸஹஸ்ர பரார்த்தக்ருத்வ: அகார்ஷம், ஏநம் அகதிம் க்ருபயா க்ஷமஸ்வ.**

(எம்பிரானே!) பல பிதற்றியென்? பாபமென்று பேர்பெற்றது சிறியதோ பெரியதோ எது எது உண்டோ, அதையெல்லாம் தெரிந்தும் தெரியாமலும் எண்ணிறந்தபடி செய்து போந்தேனந்தோ, இவ்வடியேனைப் பரம க்ருபையினால் க்ஷமித்தருளவேணும்.

* * *—க்ஷமாப்ரார்த்தனை பண்ணுதவளவில் க்ருபை பெறுவதில்லையென்னுமிடத்தையும், க்ஷமையை வேண்டினவாறே க்ருபை பெருகப்புகுகிறதென்னுமிடத்தையும் லோகத்திலே கண்டவராகையாலே க்ஷமாப்ரார்த்தனை பண்ணுகிறாரிதில்.

*[பூயஸா ப்ரபலபிதேந கிம்] 'கிம் பஹுநா'. என்பதுண்டே, அதுதானிது: நானே சங்கிப்பதும் நானே ஸமாஹிதனுவதுமாய்ப் பல பிதற்றுமிதில் ப்ரயோஜனமென்? பாபமென்று பேர்பெற்றவற்றில் சிறியதாகிலுமாம் பெரியதாகிலுமாம், ஒன்றுதப்பாமல் பலவற்றை புத்தி பூர்வகமாகவும், சிலவற்றை ப்ராமாதிகமாகவும் பலகோடி நூறுயிரந்தடவை செய்துபோந்தே னடியேன்; இதனை வாய்விட்டு விண்ணப்பஞ் செய்வது*

தவிர வேறுகதியற்றவடியேனை அவஸரப்ரதீக்ஷையான ஸ்வகீய க்ருபையினாலேயே க்ஷமா விஷயமாக்கியருளவேணும் என்றாராயிற்று.

மூன்றாவது பாதத்தில் பரார்த்தம் என்றது ஸங்க்யைகளுக்கு எல்லையாகக் கொள்ளப்படுமது; * परेपरार्धे गणना यदि स्यात्— பாரேபரார்த்தம் கணநா யதி ஸ்யாத்* என்பது நைஷதகாவ்யத்தில் ஸ்ரீஹர்ஷனுடைய வாக்கு. தைத்திரீயஸம்ஹிதையில் ஏழாவது காண்டத்தில் இரண்டாவது ப்ரச்நத்தில் "शताय स्वाहा सहस्राय स्वाहा" என்று தொடங்கி சதம், ஸஹஸ்ரம், அயுதம், நியுதம், ப்ரயுதம், அர்புதம், ந்யர்புதம், ஸமுத்ரம், மத்யம், அந்தம், பரார்த்தம் என்று நின்றது. ... ... (89)

देव ! त्वदीयचरणप्रणयप्रवीणरामानुजार्यविषयीकृतमप्यहो माम् ।

भूयः प्रधर्षयति वैषयिको विमोहो मत्कर्मणः कतरदत्र समानसारम् ॥९०॥

**தேவ ! த்வதீய சரணப்ரணயப்ரவீண**
**ராமாநுஜார்யவிஷயீக்ருதமப்யஹோ மாம்,**
**பூய: ப்ரதர்ஷயதி வைஷயிகோ விமோஹ:**
**மத்கர்மண: கதரதத்ர ஸமாநஸாரம். 90**

தேவ! த்வதீய சரண ப்ரணய ப்ரவீண ராமாநுஜார்ய விஷயீக்ருதம் அபி மாம் வைஷயிக: விமோஹ: பூய: ப்ரதர்ஷயதி அஹோ, அத்ர மத்கர்மண: ஸமாநஸாரம் கதரத்?

எம்பிரானே! உன் திருவடிகளில் அன்புபூண்டிருப்பதில் தலைசிறந்தவரான எம்பெருமானாரால் ஆட்படுத்திக்கொள்ளப்பட்ட அடியேனையும் விஷய வ்யாமோஹம் மிகவும் பரிபவிக்கின்றதந்தோ! என்னுடைய கருமத்தோடொத்த வலிதான கருமம் வேறொருவர்க்குண்டோ இவ்வுலகில்?'

* * * இந்த நிலைமையில் ஆசார்யநாமோச்சாரணம் செய்வது ச்ரேயஸ்கரமென்று திருவுள்ளம்பற்றி ஒருவாறு அதுதன்னைச் செய்கிறார். எம்பிரானே! தேவரீருடைய திருவடிகளில் பக்தியையே நிரூபகமாகக்கொண்ட எம்பெருமானார் அடியேனை நிர்ஹேதுகமாக விஷயீகரித்தருளி யிருக்கையாலே அடியேனுக்கொரு குறையில்லை யென்றிராநின்றேன்; இங்ஙனே அடியேன் மஹாவலம்பம் பெற்றிருக்கச்செய்தேயும் *பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ* *கிறிசெய்தென்னைப் புறத்திட்டு இன்னங் கெடுப்பாயோ* என்னும்படியான இருள்தருமா ஞாலத்திலே வைத்திருக்கையாலே விஷயவாஸனை அருமையாலே வைஷயிகவ்யாமோஹம் அடியேனைப் பரிபவிக்கின்றது. *மதங்கதனைர் ந க்லிச்யந்தே யதீச்வரஸம்ச்ரயா:* (யதிராஜஸப்ததி.) என்றும், *காமாதி தோஷஹரமாத்ம பதாச்ரிதாநாம்* (யதிராஜவிம்சதி) என்றும் பேசலாம்படி புகழ்பெற்ற எம்பெருமானாருடைய பரிக்ரஹமான வடியேனுக்கு இங்ஙனே நேரத்தகுமோ? நேரக் காண்கையாலே *மதியிலேன் வல்வினையே மாளாதோ* என்னும்படி வலிய கருமம் எனக்கே அஸாதாரணமென்று நினைக்கவேண்டியதாகிறது என்கிறார்.

[அத்ர மத்கர்மண: ஸமாந ஸாரம் கதரத்?] இவ்வுலகில் என்னைப்போலே தீவினை செய்தாருண்டோ? என்றபடி. .... .... .. (90)

गर्भेषु निर्भरनिपीडनखिन्नदेहः क्षोदीयसोऽतिमहतोऽप्यखिलस्य जन्तोः ।

जन्मान्तराण्यनुविचिन्त्य परस्सहस्राण्यत्राहमप्रतिविधिर्निहतस्थरामि ॥९१॥

**கர்ப்பேஷு நிர்ப்பரநிபீடந கிந்நதேஹ:**
**க்ஷோதீயஸோதிமஹதோப்யகிலஸ்ய ஜந்தோ:,**
**ஜந்மாந்தராண்யநுவிசிந்த்ய பரஸ்ஸஹஸ்ராணி**
**அத்ராஹமப்ரதிவிதிர் நிஹதச் சராமி. 91**

க்ஷோதீயஸ: அதிமஹத: அபி அகிலஸ்ய ஜந்தோ: கர்ப்பேஷு நிர்ப்பரநிபீடநகிந்நதேஹ: அஹம் பரஸ்ஸஹஸ்ராணி ஜந்மாந்தராணி அநுவிசிந்த்ய அத்ர அப்ரதிவிதி: நிஹத: சராமி.

அதிக்ஷுத்ரமாயும் அதிமஹத்தாயுமிருக்கிற ஸகல ஜந்துக்களினுடையவும் கர்ப்பங்களில் மிகவும் உறைந்திருந்ததனாலே வருந்தின தேஹத்தையுடையனான நான் பலவாயிரம் ஜந்மாந்தரங்கள் நேரப்போகின்றவற்றைச் சிந்தைசெய்து அதற்கு ஒருவிதமான ப்ரதிக்ரியையுமறியாதவனாய் ம்ருதப்ராயனாய் உழல்கின்றேன்.

* * * இதுமுதல் ஐந்து ச்லோகங்களினால் ஸாம்ஸாரிக துக்கங்கள் தமக்கு மிகவும் அஸஹ்யமாயிருக்கிறபடியை அதிமாத்ர நிர்வேதத்தோடே விண்ணப்பஞ் செய்கிறார். திறந்து கிடந்த வாசல்தோறும் நுழைந்து திரியும் பதார்த்தம்போலே நான் நுழைந்து புறப்படாத யோனியில்லை; அதிக்ஷுத்ரமான பிபீலிகைமுதல் அதிமஹத்தான கஜஸிம்ஹாதிகள்வரையிலுண்டான ஸகல ப்ராணிவர்க்கங்களினுடையவும் கர்ப்பங்களிலே புக்கு* अत्याम्लकटुतीक्ष्णोष्णलवणैर्मातृभोजनैः । अतितापिभिरत्यर्थं वर्धमानातिवेदनः ॥ क्लेशान्निष्क्रान्तिमाप्नोति जठरान्मातुरातुरः—அத்யாம்ல கடுதீக்ஷ்ணோஷ்ணலவணைர் மாத்ரு போஜநை:' அதிதாபிபிரத்யர்த்தம் வர்த்தமாநாதிவேதந:, க்லேசாந் நிஷ்க்ராந்திமாப்நோதி ஜடராந் மாதுராதுர:* என்கிறபடியே பலவகையான க்லேசங்களை அநுபவித்த வளவேயன்றிக்கே இன்னமும் நேரப்போகிற அளவுகடந்த ஜன்மாந்தரங்களையும் பற்றிச் சிந்தித்து இதற்கு நம்மால் செய்யலாவதொரு ப்ரதிகாரமில்லையேயென்று தளரா நின்றேன். ... (91)

भूयश्च जन्मसमयेषु सुदुर्वचानि दुःखानि दुःखमतिरिच्य किमप्यजानन् ।
मूढोऽनुभूय पुनरेव तु बालभावात् दुःखोत्तरं निजचरित्रमभुत्र सेवे ॥९२॥

**பூயச் ச ஜந்மஸமயேஷு ஸுதுர்வசாநி**
**து:க்காநி து:க்கமதிரிச்ய கிமப்யஜாநந்,**
**மூடோநுபூய புநரேவ து பாலபாவாத்**
**து:க்கோத்தரம் நிஜசரித்ரமமுத்ர ஸேவே. 92**

பூயச்ச ஜந்மஸமயேஷு ஸுதுர்வசாநி து:க்காநி அநுபூய, து:க்கம் அதிரிச்ய கிமபி அஜாநந் மூட: புநரேவ து பாலபாவாத் அமுத்ர து:க்கோத்தரம் நிஜ சரித்ரம் ஸேவே.

(எம்பெருமானே!) கர்ப்பக்லேசங்களை யநுபவித்தபிறகும் கர்ப்பத்தில் நின்றும் வெளிப்படுகையாகிற ஜனன காலங்களில் இன்னவை இனையவையென்று சொல்லமுடியாத துயரங்களை யநுபவித்து, துக்கந்தவிர வேறொன்று மறியாதவனாயும் அந்தத்துக்கங்களைப் போக்கிக்கொள்ளும் விரகறியாதவனாயுமுள்ள அடியேன் இன்னமும் அவிவேகத்தினால் பரலோகத்தில் மிகுந்த துக்கத்தை விளைக்குமதான வல்வினையைச் செய்துபோருகின்றேன்.

* * *—கீழ்ச்லோகத்திற் சொன்னபடி கர்ப்பவாஸ காலத்தில் படும் க்லேசங்களோ அபாரம்; பிறகு கர்ப்பத்திலிருந்து வெளிப்புறப்படுங் காலங்களிலே படும் துயரங்களோ வாய்கொண்டு சொல்லவொண்ணாதவை; அப்படிப்பட்ட துக்கங்களையும் அநுபவித்தேன்; சிறிதேனும் ஸுகமநுபவித்திருந்தாலன்றோ அந்த துக்கம் இந்த துக்கமென்று விசேஷித்துச் சொல்லலாவது; துக்கந் தவிர வேறொன்றில் வ்யுத்பத்தி பண்ணியறியேன்; அவிவேகத்தினாலே நான் செய்து போருகிறதத்தனையும் தீவினையேயாதலால் இனி மேலுள்ள காலமெல்லாம் அநுபவிக்க விருப்பதும் துக்கமே; இதுவாயிற்று என்னுடைய நிலைமை என்று, எம்பெருமானுக்குக் கடுக இரக்கம் பிறக்குமாறு அருளிச் செய்தாராயிற்று. ... ... ... (92)

भूयांसि भूय उपयन्विविधानि दुःखान्यन्यच्च दुःखमनुभूय सुखभ्रमेण ।
दुःखानुबन्धमपि दुःखविमिश्रमल्पं क्षुद्रं जुगुप्सितसुखं सुखमित्युपासे ॥९३॥

**பூயாம்ஸி பூய உபயந் விவிதாநி து:க்காநி**
**அந்யச்ச து:க்க மநுபூய ஸுகப்ரமேண,**
**து:க்காநுபந்தமபி து:க்க விமிச்ரமல்பம்**
**க்ஷுத்ரம் ஜுகுப்ஸிதஸுகம் ஸுகமித்யுபாஸே. 93**

பூய: பூயாம்ஸி விவிதாநி து:க்காநி உபயந் அந்யச்ச து:க்கம் ஸுகப்ரமேண அநுபூய து:க்காநுபந்தம் து:க்க விமிச்ரம் அல்பம் க்ஷுத்ரம் ஜுகுப்ஸிதஸுகம் அபி ஸுகம் இதி உபாஸே.

(எம்பெருமானே!) பின்னையும் பலவகைப்பட்ட துக்கங்களை யடைகின்றவனான நான் வேறு துக்கத்தையும் ஸுகமென்கிற ப்ரமத்தினால் அநுபவித்து, காலாந்தரத்தில் துக்கத்தை விளைப்பதாயும் துக்கமிச்ரமாயும் மிகவும் அற்பமாயும் சிஷ்டகர்ஹிதமாயுமுள்ள வைஷயிக ஸுகத்தை உண்மையான ஸுகமாகக்கொண்டு விரும்புகிறேன்.

* * *—"பேதை பாலகனதாகும்" என்கிற திருமாலைப் பாசுரத்தில் அது என்கிற ஸங்கேதச் சொல்லாலே விவக்ஷிதமான யௌவன பருவத்தில் ஸம்பவங்களைப் பேசுவதாம் இந்தச்லோகம். மஹா விரக்தாக்ரேஸரரான ஆழ்வானிடத்திலே இப்படிப்பட்ட வார்த்தைகளுக்கு ஸம்பந்த லேசமுமில்லை யிறே; அஸ்மதாதிகள் அநுஸந்திக்க வேண்டியதற்காக அருளிச் செய்துவைக்கிறாரித்தனையிறே. [பூயாம்ஸி பூய உபயந் விவிதாநி து:க்காநி] கீழிரண்டுச்லோகங்களிற் சொன்ன வளவேயன்றிக்கே மற்றும் பலவகைப்பட்ட துக்கங்களையும் அநுபவித்தேன். தற்காலத்தில் இன்பம்போல் தோன்றிப் பிறகு பெருந்துன்பமாக முடிகின்றவற்றையு மநுபவித்தேன். துக்கத்தோடு தொடர்புள்ளதாயும் துக்கம் கலசினதாயும் சிஷ்டர்கள் இகழக் கூடியதாயுமுள்ள அதிக்ஷுத்ரஸுகங்களையும் உத்தமஸுகமாக ப்ரமித்து அவற்றிலே நசை பண்ணிப்போராநின்றேன். (93)

लोलद्भिरिन्द्रियहयैरपथेषु नीतो दुष्प्रापदुर्भगमनोरथमर्थयमानः ।
विद्याधनाभिजनजन्ममदेन कामक्रोधादिभिश्च हतधीर्न शमं प्रयामि ॥९४॥

**லோலத்பிரிந்த்ரியஹயைரபதேஷு நீத:**
**துஷ்ப்ராப துர்ப்பக மநோரதமர்த்யமாந:,**
**வித்யாதநாபிஜந ஜந்மமதேந காம**
**க்ரோதாதிபிச் ச ஹததீர் ந சமம் ப்ரயாமி. 94**

**லோலத்பி: இந்த்ரியஹயை: அப தேஷு நீத: துஷ்ப்ராபதுர்ப்பகமனோரதமத்யமாந: வித்யா தந அபிஜநஜந்ம மதேந காமக்ரோதாதிபிச் ச ஹத: சமம் ந ப்ராப்யாமி.**

(எம்பெருமானே!) சஞ்சலங்களான இந்த்ரியக் குதிரைகளினால் தப்பு வழிகளில் கொண்டுபோகப் பட்டவனாய் பெறுதற்கரிய வீண்மனோரதங்களினால் பீடிக்கப்படுமவனாய், கல்விச்செருக்கு செல்வச்செருக்கு குலச்செருக்கு ஆகிய இவற்றாலும் காமக்ரோதாதிகளாலும அறிவுகெட்டவனாய் இந்திரியஜயம் பண்ணமுடியாதவனாய்க்கிடக்கிறேன்.

* * *—கர்மேந்திரியங்களைந்தும் ஜ்ஞாநேந்திரியங்களைந்தும் இவற்றுக்கு ஸஹகாரியான மநஸ்ஸுமாகிற பதினோரிந்திரியங்களும் பதினொரு குதிரைகளாகிக் கண்டவிடமெங்கும் தீய நெறிகளிலே இழுத்துக்கொண்டு செல்லுமிறே; இந்தக் கஷ்டமொரு புறத்தில். மற்றொரு புறத்திலோவென்னில், பாழும் மனோரதங்கள் துர்லப விஷயங்களிலே தோன்றிப் பீடிக்கும் கஷ்டம். இவையுமன்றிக்கே, கல்விச் செருக்கு செல்வச் செருக்கு குலச் செருக்கு என்னும்படியான வஞ்சமுக் குறும்புகளினாலும் காம க்ரோதாதிகளினாலும் நேரும் துன்பங்களோ அபரிமிதம். இவற்றால் புத்தி கெட்டு இந்திரிய ஜயத்திற்கு ப்ரஸக்தியின்றிக்கே கிடந்துழலாநின்றேனென்று வருந்திப் பேசுகிறார்.

*மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்சமுக் குறும்பாங்குழியைக் கடக்கும் நங்கூரத்தாழ்வான்* என்று விசேஷித்துப் புகழப்பெற்ற ஆழ்வானுடைய அநுஸந்தானம் இதுவானால் நம்போல்வார் பேசவேண்டும் பாசுரமெதுவோ அறியோம். (94)

लभ्येषु दुर्लभतरेष्वपि वाञ्छितेषु जाता सहस्रगुणतत्प्रतिलम्भनेऽपि ।
विघ्नैर्हतेष्वपि च तेषु समूलघातं वर्धिष्णुरेव न तु शाम्यति हन्त तृष्णा ॥९५॥

*லப்யேஷு துர்லபதரேஷ்வபி வாஞ்சிதேஷு*
*ஜாதா ஸஹஸ்ரகுணதத்ப்ரதிலம்பநேபி,*
*விக்நைர் ஹதேஷ்வபி ச தேஷு ஸமூலகாதம்*
*வர்த்திஷ்ணுரேவ ந து சாம்யதி ஹந்த த்ருஷ்ணா.* 95

**லப்யேஷு துர்லபதரேஷு அபி வாஞ்சிதேஷு ஜாதா த்ருஷ்ணா ஸஹஸ்ர குணதத்ப்ரதிலம்பநே அபி தேஷு விக்நை: ஸமூலகாதம் ஹதேஷு அபி ச வர்த்திஷ்ணுரேவ, ந து சாம்யதி ஹந்த.**

(எம்பெருமானே!) எளியவையாயும் மிகவும் அரியவையாயுமிருக்கின்ற இஷ்டவஸ்துக்களிலுண்டான அபிலாஷையானது—ஆயிரமடங்கு அதிகமாகப் பலன் கிடைத்தாலும் இடையூறுகளினால் வேர்பறியுண்டாலும் (அவ்வஸ்துக்களில் ஆசை) மேன்மேலும் வளர்ந்து செல்லுகின்றதேயன்றி அடங்கி யொழிகின்றதில்லை.

* * *—கீழ்ச்லோகத்தில் ***துஷ்ப்ராப துர்ப்பக மனோரத மத்யமாந:*** என்றது தன்னை விவரித்தருளுகிறாரிதில். உலகில் அபேக்ஷிதங்கள் இரண்டு படிப்பட்டிருக்கும். எளிதான வஸ்துக்களும் அபேக்ஷிதமாகும், அரிதான வஸ்துக்களும் அபேக்ஷிதமாகுமிறே. இப்படி இருவகைப்பட்ட வஸ்துக்களிலும் உண்டாகின்ற ஆசையானது மேன்மேலும் வளர்ந்து செல்லுகின்றதே யொழிய நசிப்பதென்பது ஒரு போதுமில்லை. அபேக்ஷித்த பொருள் ஒன்று நூறாயிரமாகக் கைகூடி விட்டால் "**இச்சாயா: விஷயஸித்த்யா விநாச:**" என்று சாஸ்த்ரஜ்ஞர்கள் சொல்லுகிற கணக்கிலே அபேக்ஷித வஸ்து விஷயகமான ஆசை அற்றொழியலாமே; அதுதான் கிடையாது. இன்னமும் வேணும் இன்னமும் வேணுமென மேன்மேலும் வளராநின்றது. அபேக்ஷித வஸ்துக்கள் பல

பல இடையூறுகளினால் வேர்பறியுண்டொழிந்தால் அப்போதாவது 'இது வீணான ஆசை; இது விட்டொழிக்கத் தக்கதே' என்று வைராக்யம் பிறக்கலாமே; அதுவுமில்லை அப்போதுங்கூட ஆசை பெருகிச் செல்லுமத்தனை யொழிய முடிவதில்லை. இது ஆசையின் ஸ்வபாவமிருக்கிறபடி.

இது கீழ்ச்லோகத்திற்கு சேஷ பூதமாகையாலே "ந சமம் ப்ரயாமி" என்று அங்குச்சொன்னதே இங்கும் ப்ரதாநக்ரியையாக மாநஸாநுஸந்தானமாகக் கடவது. (95)

त्वत्कीर्तनस्तुतिनमस्कृतिवेदनेषु श्रद्धा न भक्तिरपि शक्तिरथो न चेच्छा ।
नैवानुतापमतिरेष्वकृतेषु किंनु भूयानहो ! परिकरः प्रतिकूलपक्षे ॥९६॥

**த்வத் கீர்த்தந ஸ்துதிநமஸ்க்ருதி வேதநேஷு**
**ச்ரத்தா ந பக்திரபி சக்திரதோ நசேச்சா,**
**நைவாநுதாபமதிரேஷ்வக்ருதேஷு கிம் நு**
**பூயாநஹோ பரிகர: ப்ரதிகூலபக்ஷே.** 96

த்வத் கீர்த்தந ஸ்துதி நமஸ்க்ருதி வேதநேஷு ச்ரத்தா பக்திரபி சக்தி: அதோ இச்சா ச ந; ஏஷு அக்ருதேஷு அநுதாபமதி: நைவ; கிம் நு!; அஹோ ப்ரதிகூலபக்ஷே பூயாந் பரிகர:.

(எம்பெருமானே!) உன்னுடைய திருநாம ஸங்கீர்த்தனம் குண கீர்த்தனம் நமஸ்காரம் த்யானம் ஆகிய இவற்றில் (எனக்கு) ச்ரத்தையோ பக்தியோ சக்தியோ இச்சையோ ஏதுவுமில்லை; கீழே சொன்ன கீர்த்தநாதிகள் செய்யப்படாதவைகளில் அநுதாப புத்தியுமில்லை. இது என்னே! அந்தோ! ப்ரதிகூலபக்ஷத்தில்தான் ஸாமக்ரீ வலிதாக வுள்ளது.

* * *—"ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்" என்ற இரண்டில் ப்ராதிகூல்ய வர்ஜநமில்லை யென்பதைக் கீழே பரக்கப் பேசினார்; ஆநுகூல்ய ஸங்கல்பந்தானுமில்லையென்கிறாரிதில். திருநாம ஸங்கீர்த்தனம் பண்ணுவது திருக்கல்யாண குண கீர்த்தனம் பண்ணுவது தொழுதிறைஞ்சுவது த்யானிப்பது ஆகிய இவற்றில் பக்தியுமில்லை, ச்ரத்தையுமில்லை, சக்தியுமில்லை, இச்சையுமில்லை. அந்தோ! இவை யில்லையே யென்கிற அநுதாப புத்தியாகிலு முண்டோவென்னில், அது தானுமில்லை. *யந் முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே, ஸா ஹாநிஸ் தந் மஹச்சித்ரம ஸா ப்ராந்திஸ் ஸா ச விக்ரியா* என்றும், *ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே, தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்த மாக்ரந்திதும் ந்ருணாம்* என்றும் சொல்லுகிறபடியே ஒரு க்ஷணகாலம் பாழே கழிந்தாலும் ஸர்வஸ்வமுமிழந்தவன் போலக் கதறிக் கதறியழுவனன்றோ ப்ராப்தம்; அநுதாபகந்தமுமின்றிக்கேயன்றோ நானிருப்பது.

மூன்றாவது பாதத்தின் முடிவில் **கிம் நு, கிம் து** என்று இருவகைப் பாடமுங் காண்கிறது. **[கிம் நு]** இது என்னேவென்று தம்மில் தாம் வருந்துகிறபடி. '**கிம் து**' என்கிற பாடமும் ஒருவாறு பொருந்தும். [ப்ரதிகூலபக்ஷே பூயாந் **பரிகர:**] ஈச்வர ஸ்ருஷ்டியிலேயே, அநுகூல பக்ஷத்தில் ஸாமக்ரிகளின்குறைவும், ப்ரதிகூல பக்ஷத்தில் ஸாமக்ரீ பௌஷ்கல்யமும் காணுகின்றோமிறே என்கை. ... (96)

एतेन वै सुविदितं बत मामकीनं दौरात्म्यमप्रतिविधेयमपारमीश !
संमूर्च्छितोऽप्ययदमसि यतस्त्वदीयनिस्सीमभूमकरुणामृतवीचिवायोः ॥९७॥

**ஏதேந வை ஸுவிதிதம் பத மாமகீநம்**
**தௌராத்ம்யமப்ரதிவிதேயமபாரமீச!,**
**ஸம்மூர்ச்சதோப்யபதமஸ்மி யதஸ் த்வதீய**
**நிஸ்ஸீம பூமகருணாம்ருத வீசிவாயோ:. 97**

ஈச! ஸம்மூர்ச்சதः த்வதீயநிஸ்ஸீம பூமகருணாஅம்ருதவீசிவாயோः அபி யதः அபதம் அஸ்மி, ஏதேந அப்ரதிவிதேயம் அபாரம் மாமகீநம் தௌராத்ம்யம் ஸுவிதிதம் பத!.

எம்பெருமானே! எங்கும்பரந்த, உன்னுடைய எல்லைகடந்த பெருமைவாய்ந்த கருணாதரங்கத்தின் காற்றுங்கூட என்மேல் படாமலிருப்பதனாலே, ப்ரதீகாரமற்றதாய் அபாரமான எனது தௌர்ப்பாக்யமானது ஸுப்ரஸித்தம்; அந்தோ!.

* * *—ப்ராதிகூல்யமிருக்கும் படியையே பன்னிப் பேசியருளுகிறார். எம்பெருமானே! உன்னுடைய எல்லை கடந்த கருணார்ணவத்தின் அலையெறிவு எங்கும் நிரங்குசமாகப் பரவாநிற்கச் செய்தேயும் அதன் காற்றுங்கூட அடியேன் மீது படாமையினாலே என்னுடைய பாவம் அளவு கடந்ததென்றும் ப்ரதீகாரமற்றதென்றும் அறுதியிடத் தட்டில்லையென்றாராயிற்று. ... ... (97)

ऐश्वर्यवीर्यकरुणागरिमक्षमाद्यास्स्वामिन्नकारणसुहृत्त्वमथो विशेषात् ।
सर्वे गुणास्सविषयास्तव मामपारघोराघपूर्णमगतिं निहतं समेत्य ॥९८॥

**ஐச்வர்யவீர்ய கருணாகரிம க்ஷமாத்யா:**
**ஸ்வாமிந் அகாரணஸுஹ்ருத்த்வமதோ விசேஷாத்,**
**ஸர்வே குணாஸ் ஸவிஷயாஸ் தவ மாமபார**
**கோராக பூர்ணமகதிம் நிஹதம் ஸமேத்ய. 98**

ஸ்வாமிந்! தவ ஐச்வர்ய வீர்ய கருணா கரிம க்ஷமா ஆத்யாः அதோ விசேஷாத் அகாரண ஸுஹ்ருத்த்வம் ஸர்வே குணாः அபார கோர அக பூர்ணம் அகதிம் நிஹதம் மாம் ஸமேத்ய ஸவிஷயாः.

எம்பெருமானே!, உன்னுடைய ஐச்வரியம் வீர்யம் கருணையின் பெருமை பொறுமை முதலானவைகளும் அதற்குமேல் விசேஷப்படியான அவ்யாஜ ஸௌஹார்தமும் ஆகிற ஸகலகுணங்களும் அபாரகோரபாபங்கள் நிறைந்தவனாய் கதியற்றவனாய் ம்ருதப்ராயனான என்னைப்பெற்று ஸவிஷயங்களாகின்றன.

* * *—கீழே பரக்க விண்ணப்பஞ் செய்தவற்றைக் கேட்டருளின எம்பெருமான் ஆழ்வான்! நீர் இங்ஙனே பாபபூயிஷ்டராயிருந்தீராகில் என்னை என் செய்யச் சொல்லுகிறீர்? உமக்கு நான் என்ன நன்மை செய்யமுடியும்!' என்ன; பிரானே! உன்னுடைய திருக்கல்யாண குணங்களெல்லாம் இலக்குப் பெறுவதற்கு என் பக்கலிலன்றோ ஸௌகர்யமுள்ளது; குணபூயிஷ்டர்கள் பக்கலிலே உன்னுடைய திருக்குணங்கள் ப்ரஸரிக்கக் கூசுமே; என் பக்கலிலன்றோ நிஸ்ஸங்கோசமாக அவை ப்ரஸரிக்கலாவது என்கிறார்.

இத்தலையில் கிஞ்சித்காரத்தை எதிர்பார்க்க வேண்டாமைக்குடலான ஐச்வர்யமும், ஸங்கல்பாநுகுண ரக்ஷணத்திற் குறுப்பான வீர்யமும், துக்கத்தைப் பொறுத்திருக்கமாட்டாமைக் குறுப்பான கருணையும், குற்றங்களிலே கண் செலுத்த வேண்டாமைக் குறுப்பான க்ஷமையும் மற்றுமுள்ள அவ்யாஜ ஸௌஹார்த வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளுமான எல்லாக்குணங்களும் மற்றையோர் பக்கலிலே இரைபெறாமல் என்னளவிலன்றோ இரைபெற்று நிற்பது; ஆகவே எனக்கொரு குறையுமில்லைகாண், உனக்கும் உபேக்ஷிக்க வொண்ணாதுகாண் என்றாராயிற்று. .... (98)

त्वत्पादसंश्रयणहेतुषु साधिकारानुद्युञ्जतश्चरितकृत्स्नविधींश्च तांस्तान् ।
त्वं रक्षसीति महिमा न तवालमेष मां चेदनीदृशमनन्यगतिं न रक्षेः ॥९९॥

த்வத்பாத ஸம்ச்ரயணஹேதுஷு ஸாதிகாராந்
உத்யுஞ்ஜதச் சரிதக்ருத்ஸ்நவிதீம்ச்ச தாம்ஸ்தாந்,
த்வம் ரக்ஷஸீதி மஹிமா ந தவால மேஷ:
மாஞ்சேதநீத்ருசமநந்ய கதிம் ந ரக்ஷே:. 99

த்வத்பாத ஸம்ச்ரயண ஹேதுஷு ஸாதிகாராந் உத்யுஞ்ஜத: சரிதக்ருத்ஸ்நவிதீந் ச தாந் தாந் த்வம் ரக்ஷஸி இதி தவ ஏஷ: மஹிமா—அநீத்ருசம் அநந்யகதிம் மாம் ந ரக்ஷேச் சேத் ந அலம்.

(எம்பெருமானே!) உன்திருவடிகளை யடைவதற்கு ஸாதனங்களான கர்மயோகாதிகளில் அதிகாரம் பெற்றவர்களாயும் அவற்றை யனுஷ்டிக்க முயலுமவர்களாயும் அவற்றையெல்லா மனுஷ்டித்துத் தலைக்கட்டினவர்களாயுமுள்ள அவ்வவர்களை நீரக்ஷித்துப்போருகிறுயென்கிற விப்பெருமையானது—அப்படிப்பட்டவர்களிலே சேராதவனுய் வேறுபுகலற்றவனுன அடியேனை ரக்ஷியாதவளவில் விலைசெல்லாது.

* * *—மோக்ஷஸாதனங்களாக சாஸ்த்ரங்களில் ப்ரதிபாதிக்கப்பட்டவற்றை யநுஷ்டித்தாரையே ரக்ஷிப்பதென்றும் மற்றையோர்களை ரக்ஷிப்பதில்லையென்றும் நமக்கொரு விரதமுண்டு காணும் என்று எம்பெருமான் திருவுள்ளமாக, பிரானே! இப்படியொரு விரதங்கொள்ளுகை உன்னுடைய ரக்ஷகத்வப் பெருமைக்குக் கொத்தை காண் என்கிறார். [த்வத்பாதேத்யாதி.] உன்னுடைய திருவடிகளைக் கிட்டுகைக்கு ஸாதனங்களான கர்மயோகாத்யுபாயங்களை யநுஷ்டிக்க யோக்யதை யுடையவர்களையும் அநுஷ்டிக்கும் முயற்சியுடையவர்களையும் அவையெல்லாவற்றையும் அடைவே அநுஷ்டித்துத் தலைகட்டினவர்களையுமே ரக்ஷிப்பதாகவும் இவையொன்று மின்றிக்கே அநந்ய கதியான வென்னை உபேக்ஷிப்பதாகவும் திருவுள்ளமாகில் உனக்குள்ள ரக்ஷகத்வப்ரதைக்கு வசையாகாதோ? அது க்ருத ப்ரதிக்ருதமாகுமே யொழிய ரக்ஷணமாகுமோ? என்றாராயிற்று. (99)

... .... ...

या कर्मणामधिकृतिर्य इहोद्यमस्तेष्वप्यशेष्वनुष्ठितिरशेषमिदं हि पुंसाम् ।
त्वामन्तरेण न कथञ्चन शक्यमाप्तुमेवं च तेषु मयि चास्ति न ते विशेषः ॥१००॥

யா கர்மணமதிக்ருதிர் ய இஹோத்யமஸ் தேஷு
அப்யேஷ்வநுஷ்டிதிரசேஷமிதம் ஹி பும்ஸாம்,
த்வாமந்தரேண ந கதஞ்சந சக்ய மாப்தும்
ஏவஞ்ச தேஷு மயி சாஸ்தி ந தே விசேஷ:. 100

கர்மணும் அதிக்ருதி: யா, தேஷு உத்யம: ய:, ஏஷு அநுஷ்டிதி: அபி இதம் அசேஷம் பும்ஸாம் இஹ த்வாம் அந்தரேண கதஞ்சந ஆப்தும் ந சக்யம், ஏவஞ்ச தேஷு மயி ச தே ந விசேஷ:.

(எம்பெருமானே!) கர்மயோகாதி அனுஷ்டானங்களுக்கு அதிகாரியாவதும் அவற்றில் முயற்சிசெய்வதும் அவற்றைச்செய்து தலைக்கட்டுவதுமாகிய இதெல்லாம் உன்னுதவியாலன்றி ஒரு விதத்திலும் பெறமுடியாததே; ஆகவே அவர்களோடு என்னோடு ஒரு வாசியில்லையாயிற்று உனக்கு.

* * * ஒன்றும் அனுட்டியாதவர்களையும் நான் ரக்ஷிப்பதென்று கொண்டால் மோக்ஷ ஸாதகவிதிசாஸ்த்ரங்கள் வ்யர்த்த மாகாதோ வென்று எம்பெருமான் திருவுள்ளமாக, அதற்கு மறுமாற்றமுரைக்கிறாரிதில். [யா கர்மணு மித்யாதி.] கீழ்ச்லோ

கத்திற் சொன்ன கர்மயோகாத்யநுஷ்டாந யோக்யதையோ, அநுஷ்டானத்தில் உத்யோகமோ, அநுஷ்டித்துத் தலைக்கட்டுதலோ எல்லாம் உன்னுடைய ஸங்கல்பத்தாலன்றி நிறைவேறமாட்டாதன்றோ; உன்னுடைய க்ருபையினாலேயன்றோ தலைக்கட்டவேண்டும்; அதுதான் என்பக்கலிலும் குறையற்றிருந்ததாகையாலே அவர்களோடு என்னோடு வாசியில்லைகாண்.

கர்மயோகாதிகளில் ஏதேனுமொன்றைப்பற்றி உன்னைப் பெறவிருக்குமவர்கள் எத்தனை ஆனைத் தொழில்கள் செய்துபோந்தாலும், * स प्रीतोऽलं फलाय * என்கிறபடியே உன் திருவுள்ள முகந்தருளினாலல்லது பேறு கைபுகுருகைக்கு ப்ராப்தியில்லை யென்னுமிடம் அடியேன் சொல்லவேணுமோ? க்ஷணபங்குரங்களாயும் அசேதநங்களாயுமுள்ள க்ரியாகலாபங்கள் ஸ்வாதந்த்ர்யேண பலனளிக்க மாட்டாவே; அந்த அசேதந க்ரியாகலாபங்கள் உன் திருவுள்ளத்திலே இரக்கத்தைப் பிறப்பித்து அம்முகத்தாலே பலப்ரதங்களாக வேணுமேயல்லது உன் திருவருளை எதிர்பாராதே பயன் பெறுவிக்கமாட்டாவானபின்பு அத்திருவருளே அடியேனுக்கு அவலம்பமாகத் தட்டுண்டோ? அநந்யதாஸித்தமான உபாயம் ஸித்தமாயிருக்க, அந்யதாஸித்தமான ஸாத்யோபாயங்களிலே தலையிட்டுத் தடுமாற வேண்டாவே என்றதாயிற்று. ... (100)

निर्बन्ध एष यदि ते यदशेषवैधसंसेविनो वरद ! रक्षसि नेतरांस्त्वम् ।

तर्हि त्वमेव मयि शक्त्यधिकारवाञ्छाः प्रत्यूहशान्तिमितरच्च विधेहि विश्वम् ॥१०१॥

***நிர்பந்த ஏஷ யதி தே யதசேஷவைத***
***ஸம்ஸேவிநோ வரத! ரக்ஷஸி நேதராம் ஸ்த்வம்,***
***தர்ஹி த்வமேவ மயி சக்த்யதிகாரவாஞ்சா:***
***ப்ரத்யூஹ சாந்திமிதரச்ச விதேஹி விச்வம். 101***

வரத! அசேஷவைதஸம்ஸேவிந: ரக்ஷஸி, இதராந் ந ரக்ஷஸி இதி யத் ஏஷ: தே நிர்பந்தோ யதி, தர்ஹி, சக்தி அதிகாரவாஞ்சா: ப்ரத்யூஹசாந்திம் இதரத் விச்வம் ச த்வம் ஏவ மயி விதேஹி.

வரந்தரும் பெருமானே! சாஸ்த்ரவிஹிதங்களான எல்லாவற்றையும் அனுட்டிப்பவர்களையே ரக்ஷிப்பது, அல்லாதாரை ரக்ஷிப்பதில்லை என்னுமிது உனக்கொரு நிர்ப்பந்தமாக உள்ளதாகில், நீயே என்னிடத்தில் சக்தியையும் அதிகாரத்தையும் அபேக்ஷையையும் ப்ரதிபந்தக நிவ்ருத்தியையும் மற்றுமபேக்ஷிதமான எல்லாவற்றையும் உண்டாக்கிக்கொள்ளக்கடவை.

* * * "ப்ராபகாந்தரபரித்யாகத்துக்கு அஜ்ஞாநா சக்திகளன்று, ஸ்வரூப விரோதமே ப்ரதாநஹேது" (என்கிற ஸ்ரீவசந பூஷண 115) திவ்ய ஸூக்திப்படியே உபாயாந்தரங்களை ஸ்வரூப விரோதிகளென்று துணிந்து விட்டிட்டு *காம்பறத் தலை சிரைத்துன் கடைத்தலையிருந்து வாழுஞ் சோம்பரையுகத்தி போலும் சூழ்புனலரங்கத்தானே* என்கிற திருமாலைப் பாசுரத்தில் திடமான நம்பிக்கை கொண்டு ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமே வடிவாயிருப்பவர்களை எம்பெருமான் தவறாது ரக்ஷித்தருள்வதாக ஒரு ப்ரஸித்தியுள்ளது. அந்த ப்ரஸித்திக்கு இணங்க *பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியாகிற ப்ரபத்தி நிஷ்டையிலே ஊன்றியிருக்கிறார்கள் நம் ஆசார்யர்கள். உபாயாந்தரங்களும் சாஸ்த்ரங்களிலே விஹிதங்களாயிருக்கையாலே அவற்றை யநுஷ்டித்தாலல்லது காரியஞ் செய்யக் கடவோமல்லோம் என்று எம்பெமான் திருவுள்ள மிருந்தாகில் அப்போது, அகிஞ்சநர்களாயும் அநந்ய கதிகளாயுமுள்ள அதிகாரிகள் செய்யத்தக்கது யாது? அவ்வுபாயாந்தரங்களை அநுஷ்டிக்க வேண்டியதுதானோ? என்றொரு சங்கை தோன்றுமே; அதற்குப் பரிஹாரமுணர்த்துகிறது இந்த ச்லோகம்.

[நிர்ப்பந்த ஏஷ யதி தே இத்யாதி.] ஸ்வரூப விருத்தங்களான உபாயாந்தரங்களை அநுஷ்டித்தாலல்லது ரக்ஷிக்கக் கடவோமல்லோமென்று ஒரு நிர்ப்பந்தமிட்டுக்கொள்ள ப்ரஸக்தியில்லை; நிரங்குச ஸ்வதந்த்ரனானவன் எப்படிப்பட்ட நிர்ப்பந்தமும் இட்டுக்

கொள்ளலாமாகையாலே 'அங்ஙனே நிர்ப்பந்தம் நமக்கு உண்டு காணும்' என்று நீ சொல்லுவாயாகில், அங்கோபாங்க ஸஹிதமான அங்கி எவ்வளவு வேணு மென்று திருவுள்ளமோ அவ்வளவும் நீயே உண்டாக்கிக் கொண்டு ஸ்வநிர்ப்பந்தம் ஒருபடி பரிபாலிதமாயிற்றென்று கொண்டு ரக்ஷித்தருள்வது—என்று எம்பெருமான் தனக்கும் மறுமாற்றமுரைக்க இடமில்லாதபடி விண்ணப்பஞ் செய்து ஸ்தவத்தையும் தலைக்கட்டினாராயிற்று. ... ... ... (101)

## முடிவு தனியன்.

व्यक्तीकुर्वन्निगमशिरसामर्थमन्तर्निगूढं श्रीवैकुण्ठस्तुतिमकृत यः श्रेयसे सज्जनानाम् ।
कूराधीशं गुरुतरदयादुग्धसिन्धुं तमीडे श्रीवत्साङ्कं श्रुतिमतगुरुच्छात्रशीलैकधाम ॥

**வ்யக்தீகுர்வந் நிகம சிரஸாமர்த்த மந்தர் நிகூடம்**
**ஸ்ரீவைகுண்ட ஸ்துதி மக்ருத ய: ச்ரேயஸே ஸஜ்ஜநாநாம்,**
**கூராதீசம் குருதரதயா துக்த ஸிந்தும் தமீடே**
**ஸ்ரீவத்ஸாங்கம் ச்ருதிமதகுருச்சாத்ரசீலைகதாம.**

**(கருத்து.)** வேதாந்தங்களினுள்ளே பொதிந்து கிடக்கிற பொருள்களை விசதீகரித்தருள நினைத்து ஸத் புருஷர்களின் ச்ரேயஸ் ஸுக்காக ஸ்ரீவைகுண்டஸ்தவத்தையருளிச்செய்தவராயும், மிகுந்த கருணைக்கடலாயும், சாஸ்த்ர ஸித்தமான ஆசார்ய லக்ஷண சிஷ்ய லக்ஷணங்களுக்கு முக்ய வாஸஸ்தானமாயுமுள்ள கூரத்தாழ்வானைத் துதிக்கின்றேனென்கை. ... ... ... (*)

## (ஆழ்வான் தனியன்.)

अर्वाञ्चो यत्पदसरसिजद्वन्द्वमाश्रित्य, पूर्वे मूर्ध्ना यस्यान्वयमुपगता देशिका मुक्तिमापुः ।
सोऽयं रामानुजमुनिरपि स्वीयमुक्तिं करस्थां यत्संबन्धादमनुत कथं वर्ण्यते कूरनाथः ॥

**அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜத்வந்த்வமாச்ரித்ய, பூர்வே**
**மூர்த்நா யஸ்யாந்வய முபகதா தேசிகா முக்தி மாபு:,**
**ஸோயம் ராமாநுஜ முநிரபி ஸ்வீய முக்திம் கரஸ்தாம்**
**யத்ஸம்பந்தாதமநுத கதம் வர்ண்யதே கூரநாத:.**

**(கருத்து.)** தம்முடைய சிஷ்யர்களைத் தமது திருவடி ஸம்பந்தத்தினாலும் தம்முடைய பூர்வாசார்யர்களைத் தமது திருமுடி ஸம்பந்தத்தினாலும் உஜ்ஜீவிப்பித்தருளின எம்பெருமானாருங்கூட கூரத்தாழ்வானுடைய ஸம்பந்தத்தினாலேயே தமக்கு முக்தி ஸித்தமென்று திருவுள்ளம் பற்றினதாக இதிஹாஸமுள்ளது; அப்படிப்பட்ட ஆழ்வான் பெருமையை நாம் என்னவென்று வருணிப்பது! மொழியைக் கடக்கும் பெரும் புகழன்றோ ஆழ்வானுடையது என்கை. ... ... (*)

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஆழ்வான் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதி பயங்கரம்
**அண்ணங்கராசார்யர் இயற்றிய**
பஞ்சஸ்தவ வ்யாக்யானத்தில்
**ஸ்ரீவைகுண்டஸ்தவ வ்யாக்யானம்**
**முற்றிற்று.**